# கோனார் தமிழ்க் கையகராதி



வித்துவான் திரு. ஐயன்பெருமாள் கோனார்
தமிழ்ப் பேராசிரியர் :
அர்ச் சூசையப்பர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி



பழனியப்பா பிரதர்ஸ்
சேப்பாக்கம் : : தெப்பக்குளம்
சென்னை - 5 திருச்சிராப்பள்ளி

# பதிப்புரை

இப்பூவுலகில் வழங்கும் செம்மை சான்ற பழம் பெரும் மொழிகளுள் நம் தமிழ் மொழியும் ஒன்று. இம் மொழியின் சொற்பொருள் அறிய முற்காலத்தில் நிகண்டுகளே பேருதவி புரிந்தன. அவை யாவும் கற்றோர்க்கே யன்றி மற்றோர்க்குப் பயன்படா நிலையிலேயே இருந்தன. இந்நிலையில் எல்லோர்க்கும் பயன்படும் வண்ணம் தமிழ் மொழியின் சொல் வளத்தை எளிய முறையில் அகர வரிசைப் படுத்தி முதன் முதலில் உதவியவர் இத்தாலி நாட்டு வித்தகர் *வீரமாமுனிவரே* யாவர். அவரை இந்த மாநிலம் இத்தகு உயர் செயல் குறித்து 'தமிழ் அகராதித் தந்தை' என்று போற்றிப் புகழ்வதாயிற்று.

அவர்தம் முறையைப் பின்பற்றிப் பிற்காலத்தில் பலப்பல பேரகராதிகளும், சிற்றகராதிகளும் அச்சிடப்பட்டு வெளி வந்துள்ளன. ஆங்கிலக் கையகராதி முறையினைப் பின்பற்றிச் சில கையகராதிப் பதிப்புக்களும் வெளி வந்துள்ளன. இப் பதிப்புக்களில் காணப்படும் குறைகளை யெல்லாம் போக்கி உயர்ந்த முறையில் உருவாக்கப்பட்டதே '*கோனார் தமிழ்க் கையகராதி*' என்னும் இந்நூல்.

இவ் வகராதியில் பெயர்ச் சொற்கள் மட்டு மல்லாமல் வினைச் சொற்களுக்கும் பொருள் தரப்

பட்டுள்ளது. இறுதியில் தொகை யகராதியும் சேர்க்கப்பட்டுள்ளது. கூடியவரையில் எல்லாத் தமிழ்ச் சொற்களுக்கும் உரிய பெரும்பாலான எல்லாப் பொருள்களும் தொகுத்துக் கொடுக்கப் பட்டுள்ளன.

தமிழ் அறிந்தார் யாவர் கையிலும் இக் கை யகராதி இருத்தல் வேண்டும் என்னும் பெரு நோக்கிலேயே மிகக் குறைந்த விலையில் நிறைந்த பக்கங்களுடனும் சொற்களுடனும் இதனை வெளி யிட்டுள்ளோம்.

தமிழர்க்கு இது ஒரு தனிப்பெருநூல். குறிப் பாக மாணவர்க்கு இது ஓர் உற்ற துணைவன்; சிறந்த வழிகாட்டி.

இவ்வகராதியிற் சேர்க்கப்பட்டுள்ள சொற் களை ஆய்ந்தெடுத்து, அகர வரிசைப் படுத்தி, பொருள் குறித்துதவியவர் திருச்சிராப் பள்ளி அர்ச். சூசையப்பர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும், சிறந்த உரையாசிரியருமான உயர் திரு. வித்துவான் *திரு. ஐயன்பெருமாள் கோனார்* அவர்கள் ஆவார்கள். அவர்கட்கு எங்கள் உளங் கனிந்த நன்றி உரியதாகுக!

சென்னை-5<br>10-12-'55 } பழனியப்பா பிரதர்ஸ்

# கோனார் தமிழ்க்

# கையகராதி

**அ**-முதலாம் எழுத்து. அந்த என்று பொருள்படும் சுட்டு, அஃறிணைப் பன்மை விகுதி, எட்டு என்னும் எண்ணின் குறி, எதிர் மறைப் பொருளைத் தரும் வடமொழி ந என்னும் எழுத்தின் திரிபு.

*அஃகம்* - தானியம், முறைமை, ஊறு நீர், விலைப் பொருள்.

*அஃகு*- சுருங்கு, நுணுகு, குறை, குவி, வற்று, நெருங்கு, கழி, ஊறுநீர்.

*அஃகுள்* - அக்குள்.

*அஃது* - அது. புரு

*அஃபோதம்* - சகோரம் என்னும் பறவை. புரு

*அஃறிணை* -அல்+திணை- மனிதர், தேவர், நரகர் அல்லாத மற்றப் பொருள்கள் எல்லாம் உணர்த்தும் திணை.

*அகக்காழ்* - உள் வயிரம்.

*அகங்காரம்* - யான் எனல், கர்வம், செருக்கு.

*அகங்காரி* - செருக்கு உடையவன்.

*அகங்கை* - உள்ளங்கை.

*அகசியம்* - பகடிக்கூத்து, ஏளனம்

*அகசு*-பகல், நாள், பொழுது

*அகடம்* - அநீதி, கபடம்.

*அகடவிகடம்* - தந்திரம், குறும்பு.

*அகடியம்* - அநீதி, பொல்லாங்கு.

*அகடு* - நடு, நடுநிலை, உள், வயிறு, பொல்லாங்கு.

*அகடூரி* - பாம்பு, வயிற்றால் ஊர்ந்து செல்வது.

*அகணி* - பனை தெங்கு முதலியவற்றின் புறநார், கடுக்காய் நஞ்சு, வயல், உள்

*அகண்டம்* - பிளவின்மை, முழுமை, பெரிய அகல்.

*அகண்டாகாரம்* - முழு உருவம், பெருவெளி, பெரு வடிவம்.

*அகண்டி* - ஓர் இசைக்கருவி.

*அகண்டிதம்* - கூறுபடாதது, முழுமையானது.

*அகதி* - ஆதரவற்றவன், கதியற்றவன், வேலமரம், இல்லை மரம்.

*அகத்தடிமை* - அணுக்கத் தொண்டு, இறைவன் அருகிலிருந்து செய்யும் தொண்டு. வீட்டுப் பணி யாளர்

*அகத்தி* - ஒரு செடி.

*அகத்திணை* - இன்ப ஒழுக்கம்.

*அகத்தியம்* - அவசியம், ஓர் இலக்கண நூல். கட்டாயம். இன்றியமையாமை

*அகத்தியன்* - தமிழ் முனிவன்.

*அகத்திடு* - கையால் உள்ளணை,

*அகநகர்* - கோட்டைக்குள் அடங்கிய நகரப் பகுதி, அந்தப்புரம்.

*அகநகை* - உட்சிரிப்பு, இகழ்ச்சிச் சிரிப்பு.

*அகநிலை* - உள் நகர், கடவுள்.

*அகந்தை* - செருக்கு, கர்வம்.

*அகப்படுதல்* - கிடைத்தல், உட்படுதல், சிக்கிக்கொள்ளுதல்.

*அகப்பா* - கோட்டை மதில், மதிலுள் மேடை, அகழி.

*அகப்பாட்டு* - அகப்பொருள் பற்றிய பாட்டு, அகநானூறு என்னும் நூல்.

*அகப்பு* - தாழ்வு, ஆழம்.

*அகப்பை* - மரக்கரண்டி.

*அகப்பொருள்* - அகத்திணையாகிய பொருள்.

*அகமம்* - மரம்.

*அகமருடணம்* - நீராடுங்கால் பாவ நீக்கத்தின் பொருட்டு ஜபிக்கும் மந்திரம்.

*அகமார்க்கம்* - மெய்க்கூத்து மந்திர முறை. பாடுதல்

*அகமுடையாள்* - மனைவி.

*அகமுடையான்* - கணவன்.

*அகம்* - இடம், உள், மனம், வீடு, மார்பு. அகங்காரம், பாவம், ஞானம், மலை, மருதம், பூமி. அகநானூறு

*அகம்படி* - உள்ளிடம், மனம், அகத்தொண்டு.

*அகம்படிமை* - அகத்தொண்டு.

*அகம்படியார்* - ஊழியம் செய்வோர்.

*அகம்பாவம்* - நான் என்னும் எண்ணம். செருக்கு.

*அகரம்* - அ என்னும் எழுத்து, பாதரசம், பார்ப்பனச்சேரி, ஊர்.

*அகராதி* - அகரவரிசைச் சொற்பொருள் நூல்.

*அகரு* - அகில்.

*அகலம்* - விரிவு, விருத்தியுரை, மார்பு, பெருமை.

*அகலல்* - நீங்குதல், விரிதல்.

*அகலறை* - பாசறை, மலைப் பக்கம்.

*அகலிடம்* - பூமி.

*அகலியை* - கௌதம முனிவர் மனைவி.

*அகல்* - விளக்குத் தகழி, நீங்கென்னும் ஏவல், சட்டி.

*அகவடி* - உள்ளங்கால்.
*அகவர்* - பாடுவோர், புகழ் பாடுவோர், நாட்டில் வாழ்வோர்.
*அகவலன்* - பாணன்.
*அகவல்* - அழைத்தல், பாடுதல், மயிலின் குரல், ஆடல், ஆசிரியப்பா.
*அகவன் மகள்* - பாண் மகள், பாணிச்சி.
*அகவிருள்* - அஞ்ஞானம், மெய்யறிவின்மை.
*அகவிலை* - தானிய விலை.
*அகவை* - உட்பொருள், வயது.
*அகழி* - கோட்டையைச் சூழ்ந்த இடங்கு.
*அகழ்* - அகழி, தோண்டு, குளம்.
*அகழ்தல்* - தோண்டுதல்.
*அகளம்* - யாழின் பத்தர், தாழி, நீர்ச்சால்.
*அகறல்* - நீங்குதல், விரிதல்.
*அகற்சி* - அகலம், பிரிவு.
*அகற்றம்* - அகலம்.
*அகற்றல்* - நீக்குதல்.
*அகன்மணி* - தெய்வமணி.
*அகன்றில்* - ஆண் அன்றில்.
*அகாதம்* - மிகுந்த பள்ளம், நீந்து புனல்.
*அகாரம்* - வீடு.
*அகி* - பாம்பு, விருத்திரன், ஆவணி, இரும்பு, ஈயம்
*அகிதம்* - இதம் இன்மை, தீமை.
*அகிதலம்* - நாகலோகம், பாதாளம்.
*அகிம்சை* - துன்பம் செய்யாமை, கொல்லாமை.
*அகிலம்* - எல்லாம், பூமி.
*அகில்* - ஒரு வாசனை மரம்.
*அகுட்டம்* - மிளகு.
*அகுதை* - ஒரு வள்ளல்.
*அகை* - கூறுபாடு, வருத்தம்.
*அகைத்தல்* - கிளைத்தல், வருந்துதல், முறித்தல், தழைத்தல், உயர்த்துதல்.
*அகோசரம்* - புலப்படாதது.
*அகோரம்* - மிக்க கொடுமை, சிவனது ஐந்து முகங்களுள் ஒன்று.
*அகோராத்திரம்* - பகலும் இரவும்.
*அக்கசாலை* - உலோக வேலை செய்யும் இடம்.
*அக்கசாலையர்* - தட்டார், கம்மியர்.
*அக்கதை* - மங்கலஅரிசி.
*அக்கந்து* - தூற்றுகையில் கீழே குவிந்துள்ள தானியங்களின் பக்கத்திலுள்ளபதர்.
*அக்கப்போர்* - கலகம்.
*அக்கம்* - தானியம், தானிய விலை, பொன், கண், உருத்திராக்கம், சூதாடு கருவி, பாம்பு, அருகு, கயிறு, ஒரு காசு.
*அக்கமணி* - உருத்திராக்க மணி.

*அக்கம்பக்கம்* - அண்மை-அயல்.
*அக்கரம்* - எழுத்து, மாமரம், வெள்ளெருக்கு. அழிவின்மை, வாய்நோய்.
*அக்களிப்பு* - மனமகிழ்ச்சி.
*அக்கறை* - கவனம், ஈடுபாடு.
*அக்கன்* - குருடன், கருடன், நாய், தமக்கை,
*அக்கா* - தமக்கை.
*அக்காணி* - பெரிய உடல்.
*அக்காரடலை* - சர்க்கரை சேர்த்துச் சமைத்த சோறு.
*அக்காரம்* - சர்க்கரை, கற்கண்டு, கரும்பு, சீலை.
*அக்கி* - ஆனைக் கரப்பான், நெருப்பு, கண்.
*அக்கிரகாரம்* - பார்ப்பனச் சேரி.
*அக்கிரபூசை* - முதல் மரியாதை.
*அக்கிரமம்* - ஒழுங்கின்மை, கொடுஞ்செயல்.
*அக்கிரம்* - நுனி, முதன்மை.
*அக்கிராசனம்* - அவைத் தலைமை.
*அக்கினி* - நெருப்பு, அக்கினி தேவன்.
*அக்கினி காரியம்*-ஹோமம் செய்தல்.
*அக்கினி கோத்திரம்* - தினமும் செய்யும் ஹோமம்.
*அக்கினி ஸ்தம்பனம்* - நெருப்புச் சுடாமல் இருக்கச் செய்யும் வித்தை.
*அக்கினி மூலை* - தென்கிழக்குத் திசை.
*அக்கு* - கண், உருத்திராக்கம், எலும்பு, சங்குமணி, சோழி, எருத்தின் திமில், எட்டிமரம், உரிமை.
*அக்குச்சரி* - சங்குவளை
*அக்குசை* - துறவுபூண்டு தவம் புரியும் சமண விதவை.
*அக்குத்து* - சந்தேகம்.
*அக்குத் தொக்கு* - ஒட்டுப் பற்று.
*அக்குரோணி* - தேர் 21870, யானை 21870, குதிரை, 65610, காலாள் 109350 கொண்ட படை.
*அக்குளுத்தல்* - கூச்சம் உண்டாக்குதல்.
*அக்குள்* - கக்கம்.
*அக்கை* - தமக்கை.
*அக்கைச்சி* - தமக்கை.
*அங்ககணிதம்* - எண் கணக்கு நூல்
*அங்கக்கிரியை* - அங்கங்களாற் செய்யப்படும் கூத்துத் தொழில்.
*அங்கசன்* - மன்மதன், மகன்.
*அங்கணம்* - முற்றம், சேறு, சலதாரை, வெண்காரம்.
*அங்கணன்*- சிவபெருமான்.
*அங்கணி* - உமை, பார்வதி.
*அங்கண்* - அவ்விடம், அழகிய இடம்,கண்ணோட்டம்.
*அங்கதச் செய்யுள்*-வசைக் கவி.

*அங்கதம்* - வசை, வாகு வலயம், தோளணி, மார்பு, பாம்பு, யானையுணவு, பொய்
*அங்கதன்* - வாலியின் மகன்.
*அங்கத்தவர்* - சபையின் உறுப்பினர்.
*அங்கமணி* - சீதனம்.
*அங்கமாலை* - எலும்புமாலை, ஒரு பிரபந்தம்.
*அங்கம்* - உறுப்பு, உடல், எலும்பு, அரசாங்கம், ஒரு நாடு, நாடகவுறுப்பு, கட்டில்.
*அங்கயற்கண்ணி* —மீனாட்சி யம்மை.
*அங்கராகம்* - பூசும் வாசனைப் பொருள்.
*அங்கலாய்த்தல்* - கலங்குதல், பொறாமைப்படுதல்.
*அங்கவடி* - குதிரை யேறும் படி (சேணத்திலே ய அமைந்தது).
*அங்கவீனன்* - அவயவம் குறைந்தவன்.
*அங்கனை* - பெண்.
*அங்காடி* - கடை, கடைத் தெரு.
*அங்காத்தல்* - வாய்திறத் தல்.
*அங்காரகன்* - செவ்வாய்.
*அங்காரன்* - செவ்வாய்.
*அங்கி* - நெருப்பு, சட்டை.
*அங்கிதம்* - தழும்பு, அடையாளம்.
*அங்கீகரி* - ஏற்றுக்கொள்.
*அங்கீகாரம்* - ஏற்றுக் கொள்ளல்.
*அங்கு* - அவ்விடத்தில்.
*அங்குசம்* - யானையை அடக்கும் கருவியாகிய தோட்டி.
*அங்குஸ்தான்* - தையற் காரர் விரலில் ஊசி படாத வாறு அணிந்துகொள்ளும் கருவி.
*அங்குட்டம்* - பெருவிரல்.
*அங்குரம்* - முளை, தளிர், கங் கூரம், பயிர்.
*அங்குலம்* - ஒரு விரற் கணு அளவு.
*அங்குலி*-மோதிரம், மோதிர விரல், புருவ மத்தியம்.
*அங்குலியம்* - மோதிரம். விரல் ஆழி
*அங்கே* - அங்கு.
*அங்கை* - அகம்+கை - உள்ளங்கை.
*அங்ஙனம்* - அப்படி.
*அங்ஙன்* - அங்கே.
*அசகம்* - மலையாடு.
*அசகாயசூரன்* -துணைவேறு வேண்டாத பெரிய வீரன்.
*அசகியம்* - சகிக்க இயலா தது, அருவருப்பு.
*அசக்கல்* - ஆட்டுதல், கட்டு தல்.
*அசங்கதம்* - ஒழுங்கின்மை.
*அசங்கியம்* - கணக்கில்லா தது
*அசங்கு* - அசை.
*அசங்கை* - பயமின்மை, சந்தேக மின்மை.
*அசடன்* - மூடன்,
*அசடு* - மூடத்தன்மை, குற்றம், கீழ்மை.

*அசட்டை* - புறக்கணிப்பு, கவனமில்லாமை.
*அசதி* - பரிகாசம், அயர்ச்சி, மறதி.
*அசத்து* - இல்லாதது, மாயை, பொய் கூறுவோன்.
*அசப்பியம்* - சபைக்கு இயையாத பேச்சு.
*அசப்பு* - பராக்கு.
*அசமுகி* - சூரபதுமன் தங்கை.
*அசம்* - ஆடு, ஆன்மா, பிறவாதது, ஈரவுள்ளி.
*அசம்பாவிதம்* - ஏற்பட இயலாதது, பொருத்தமற்றது.
*அசம்பிரேட்சியம்* - ஆராயாமை.
*அசரம்* - அசையாப் பொருள்.
*அசரீரி* .- சரீரமில்லாதது, ஆகாயவாணி.
*அசலம்* - மலை, அசையாதது, சலியாதது
*அசலன்* - கடவுள், நிலை பெற்றவன்.
*அசல்* - அருகு, முதல், கொசுகு, பூமி, அயல்.
*அசறு* - சேறு, ஒருவகைச் செடிப்பூச்சி, ஆட்டுச்சொறி
*அசனம்* - உணவு, வேங்கை மரம். பசி, கொழுப்பு, பகுதி
*அசனி* - இடி, வச்சிராயுதம்.
*அசா* - தளர்ச்சி, வருத்தம்.
*அசாக்கிரதை* - கவனக் குறைவு.
*அசாத்தியம்* - செய்ய இயலாதது.
*அசாவிடுதல்* - இளைப்பாறுதல்.
*அசி* - ஆயுதம், வாட்படை, அவமதித்துச் சிரித்தல்.
*அசித்தல்* - அழித்தல், உண்ணல், சிரித்தல்.
*அசித்து* - சடப் பொருள்.
*அசிப்பு* - அவமதிப்பு.
*அசினம்* - மானின் தோல், விலங்கின் தோல்.
*அசீரணம்* - செரியாமை.
*அசுசி* - சுத்தமின்மை.
*அசுணமா* - இசை அறியுமொரு விலங்கு.
*அசுணம்* - அசுணமா.
*அசுத்தம்* - சுத்தமின்மை.
*அசுத்தி* - அசுத்தம்.
*அசுபம்* - நன்மையற்றது.
*அசுமம்* - கல்.
*அசுமாற்றம்* - சாடை, சந்தேகம்.
*அசும்பு*-வழுக்கு நிலம்ஊற்று கிணறு, சேறு, சிறு திவலை, அசைவு, பற்று, குற்றம்,
*அசுரகுரு* - சுக்கிரன்.
*அசுரசந்தி* - அந்திப் பொழுது.
*அசுரம்* - எண்வகை மணங்களுள் ஒன்று, வீரச் செயல் புரிந்து செய்துகொள்ளும் மணம்.
*அசுரர்* - தேவர்களின் பகைவர், இராக்கதர்.
*அசுவத்தம்* - அரசமரம், அக்கிமரம்.

*அசுவத்தாமா* - துரோணர் மகன்.

*அசுவமேதம்* - குதிரையைக் கொண்டு செய்யும் யாகம்.

*அசுவம்* - குதிரை.

*அசுவினி* - ஒரு நட்சத்திரம்.

*அசுவினிதேவர்* - தேவ வைத்தியர்.

*அசுழம்* - நாய்.

*அசூயை* - பொறாமை, பொறாமைச் சொல்.

*அசேதனம்* - அறிவில்லாமை, அறிவில்லாப் பொருள்.

*அசை* - அசை என்னும் ஏவல், ஆடுமாடுகள் மீட்டு மெல்லும் இரை, செய்யுளுறுப்பினில் ஒன்று.

*அசைதல்* - ஆடுதல், ஓய்தல்.

*அசைத்தல்* - ஆட்டுதல், கட்டுதல்.

*அசைநிலை* - அசைநிறைக்கும் சொல்.

*அசைபோடுதல்* - மாடுகள் இரையை மீட்டும் மெல்லல்.

*அசைப்பு* - சொல், இறுமாப்பு.

*அசைவு* - அசைதல், வருத்தம். தளர்வு, தோல்வி.

*அசோகன்* - மௌரிய அரசர்களுள் ஒருவன்.

*அசோகு* - அசோக மரம், நெட்டிலிங்க மரம்.

*அசௌகரியம்* - தொல்லை கொடுப்பது, சுகமின்மை.

*அசௌக்கியம்* - உடல் நலம் இன்மை.

*அச்சம்* - பயம், இலேசு.

*அச்சன்* - தந்தை, கடவுள்.

*அச்சாணி* - கடையாணி.

*அச்சாரம்* - முன்பணம்.

*அச்சி* - நாயர்சாதிப் பெண்.

*அச்சிரம்* - முன்பனிக்காலம்.

*அச்சு* - உருளை கோத்த மரம், கட்டளைக் கருவி, உடல், அச்சம், வலி.

*அச்சுதம்* - அறுகும் அரிசியும் கூடியது, அழிவற்றது.

*அச்சுதன்* - அழிவிலாதவன், திருமால்.

*அச்சுருவாணி* - தேரில் செறி கருவி.

*அச்சுலக்கை* - துலாவைத் தாங்கும் கட்டை.

*அச்சுறுத்து* - பயமுறுத்து.

*அச்சோ* - வியப்பைக் குறிக்கும் சொல், இரக்கக் குறிப்புச் சொல்.

*அஞர்* - துன்பம், சோம்பல்.

*அஞலம்* - கொக்கு, மின்மினி.

*அஞ்சம்* - அன்னப்பறவை.

*அஞ்சலி* - கும்பிடுதல், வௌவால், காட்டுப் பலா.

*அஞ்சல்* - பயப்படுதல், தபால், தொடர்ந்த பிரயாணத்தில் நிற்குமிடங்கள்.

*அஞ்சனம்* - கண்ணுக்கு இடும் மை, கருமை, இருள்.

*அஞ்சனி* - நாணற் புல், காயா.

*அஞ்சனை* - அநுமன் தாய்

*அஞ்சி* - அதியமான் நெடுமான் அஞ்சி என்னும் அரசன்.
*அஞ்சு* - ஐந்து, பயப்படு.
*அஞ்சுகம்* - கிளி.
*அஞ்செவி* - அகம்+செவி-உட்செவி.
*அஞ்செழுத்து* - பஞ்சாட்சரம் (நமசிவாய என்னும் மந்திரம்)
*அஞ்ஞாதம்* - அறியப்படாதது.
*அஞ்ஞானம்* - அறியாமை.
*அஞ்ஞை* - அன்னை.
*அடகு* - இலை, இலைக்கறி, கடன் வாங்குதற்கு வைக்கப்படும் ஈடு.
*அடக்கம்* - மன அமைதி, பணிவு, ஒரு தோற் கருவியாகிய வாத்தியம், கொள்ளுதல்.
*அடக்கல்* - மறைத்தல், கீழ்ப்படுத்துதல், உட்படுத்துதல்.
*அடக்கு* - கீழ்ப்படுத்து, அடங்கச் செய்.
*அடக்குமுறை* - வலியக் கீழ்ப்படுத்தும் செய்கை.
*அடங்கலர்* - மனவடக்கம் இல்லாதவர், பகைவர்.
*அடங்கலும்* - முழுதும்.
*அடங்கல்* - சுருங்குதல், கீழ்ப்படுதல், சாகுபடிக் கணக்கு.
*அடங்கன்முறை* - சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் அடங்கிய தொகுதி.
*அடத்தி* - வாசி, தரகு.
*அடப்பன்* - கடம்பமரம்.
*அடம்* - பிடிவாதம்.
*அடம்பு* - அடப்பங்கொடி.
*அடர்* - வருத்து, நெருக்கு, தகடு, பூவிதழ்.
*அடர்தல்* - மிகுதல், நெருக்கல், செறிதல், போர் செய்தல், துன்புறுத்துதல்.
*அடர்த்தி* - நெருக்கம்.
*அடலை* - துன்பம், போர், நீறு.
*அடல்* - வலிமை, போரிடுதல், வெற்றி, கொல்லுதல்.
*அடவி* - காடு, திரள்.
*அடவியன்* - துடைப்பம்.
*அடவியில் திருடி* - சதுரக் கள்ளி.
*அடாதது* - தகாதது, சமைக்கப்படாதது.
*அடாதுடி* - தீங்கு.
*அடார்* - விலங்குகளை அகப்படுத்தும் பொறி.
*அடி* - பாதம், கீழ், ஆதி, செய்யுளுறுப்பினில் ஒன்று, மகடூஉ முன்னிலைச் சொல்.
*அடிகள்* - முனிவர், கடவுள், குரு.
*அடிகோலுதல்* - தொடங்குதல், அடிப்படை போடுதல்.
*அடிக்கடி* - மறுபடியும் மறுபடியும்.
*அடிசில்* - உணவு.
*அடிசிற்புறம்* - உணவிற்காக விடப்பட்ட மானிய நிலம்.

*அடிசிற்றளி* - மடைப் பள்ளி.
*அடிச்சால்* - உழவின் முதற் படைச் சால்.
*அடிச்சி* - அடிமைப் பெண்.
*அடிச்சுவடு* - காலடியின் அடையாளம்.
*அடிச்சேரி* - அடிமைகள் குடியிருப்பிடம்.
*அடித்தடம்* - அடிச்சுவடு.
*அடித்தளம்* - கீழ்ப்படை.
*அடித்தாறு* - உள்ளங்கால் இரேகை.
*அடித்தொழில்* -குற்றேவல்.
*அடித்தோழி* - தலைமைத் தோழி.
*அடிபடுதல்* - பழமையாதல், அடிக்கப்படுதல், நீக்கப் பெறுதல்.
*அடிபிடி* - சண்டை.
*அடிபெயர்தல்* - கால் எடுத்துவைத்தல்.
*அடிப்படுதல்* - கீழ்ப்படுதல், அடிமைப்படுதல், பழகுதல்.
*அடிப்படை* - ஆதாரம், மூலம்.
*அடிப்பணி* - குற்றேவல்.
*அடிமாண்டுபோதல்* - முற்றும் அழிதல்.
*அடிமுடி* - காலும் தலையும், கால் முதல் தலைவரை.
*அடிமை* - தொண்டுபடுந் தன்மை, தொண்டு, தொண்டு செய்வோன்.
*அடியடியாக* - தலைமுறை தலைமுறையாக.
*அடியவன்* - அடிமை, தொண்டன்.
*அடியிடு* - அடியெடுத்துவை, தொடங்கு.
*அடியுறை* - பாதகாணிக்கை, தொண்டன்.
*அடியேன்* - தொண்டனாகிய நான்.
*அடியொட்டி* - உள்ளங் காலைப்பற்றி மேலே நடக்க வொட்டாமல் செய்யும் கருவி.
*அடியொற்றுதல்* - பின் பற்றுதல்.
*அடியோடு*-முற்றும்,முழுதும்.
*அடிவாரம்* - மலைச்சாரல்.
*அடிவீழ்ச்சி* - வணக்கம்.
*அடுகலன்* - சமையற் பாத்திரம்.
*அடுகளம்* - போர்க்களம்.
*அடுக்கம்* - செறிவு, மலை, பக்கமலை, சோலை.
*அடுக்கல்* - ஒன்றன்மேல் ஒன்றாக வைத்தல், மலை.
*அடுக்களை* - சமைக்குமிடம்.
*அடுக்கு* - வரிசை, ஒன்றன் மேல் ஒன்றாக வைக்கப் பட்டது.
*அடுதல்* - சமைத்தல், போர் இடுதல், துன்புறுத்துதல், கொல்லுதல், வெல்லுதல்.
*அடுத்தல்* - சேர்தல், ஏற்றதாதல்.
*அடுபோர்* - வெல்லும் போர்.

அடுப்பு - சமையல் செய்யும் கருவி, பரணி நட்சத்திரம்.
அடும்பு - அடப்பங்கொடி, ஒரு பூ.
அடை - இலை, ஓர் உணவுப் பொருள், குண விசேஷங் களைத் தெரிவிக்கும் சொல், வெற்றிலை, தேன்கூடு, சேர் என்னும் ஏவல், அடை காத்தற் செய்கை.
அடைகல் - மதகடைக்கும் கல், கம்மப் பட்டடை.
அடைகாத்தல் - பறவை கள் அவயங்காத்தல்.
அடைகாய் - வெற்றிலை பாக்கு, ஊறுகாய்.
அடைக்கலங்குருவி - ஒரு வகைக் குருவி.
அடைக்கலம் - புகலிடம், அடைக்கலப் பொருள்.
அடைசல் - பொருள் நெருக் கம்.
அடைதல் - சேர்தல், பெறு தல்.
அடைத்தல் - புகுத்துதல், சிறைவைத்தல்.
அடைப்பைக்காரன் - வெற்றிலை மடித்துக் கொடுக் கும் ஊழியக்காரன்.
அடைப்பம் - அம்பட்டன் கருவிகள் வைக்கும் பை, வெற்றிலை பாக்குப் பை.
அடைப்பகம் - சிறைச்சாலை.
அடைப்பான் - மூடி, கால் நடை நோய் வகை.
அடைமண் - வண்டல் மண்.
அடைமதிற் படுதல் - முற் றுகை இடப்படுதல்.
அடைமழை - விடாமழை.
அடைமானம் - அடைவு, ஈடு.
அடைமொழி - விசேடணம் (குண விசேஷங்களைத் தெரிவிக்கும் சொல்).
அடைய - முழுதும்.
அடையலர் - பகைவர்.
அடையார் - பகைவர்.
அடையாளம் - அறிகுறி.
அடையோலை - அடை மானப் பத்திரம்.
அடைவு - சேர்தல், முறை, புகலிடம், வரலாறு, செறிவு, எல்லாம்.
அட்சதை - மங்கலவரிசி.
அட்சம் - கண், பூகோள இடக் கணக்கு.
அட்சய பாத்திரம் - பிச் சைப் பாத்திரம், எடுக்க எடுக்கக் குறையாத உண வுக் கலம்.
அட்சயம் - அழியாத தன்மை.
அட்சரம் - எழுத்து.
அட்சாம்சம் - பூகோள இடக் கணக்கைப் பற்றிய பகுதி.
அட்சி - கண், கண்ணுடை யது.
அட்டகம் - எட்டன் தொகுதி கொண்ட நூல், வசம்பு.
அட்டகாசம் - ஆர்ப்பாட்டம்.
அட்டகிரி - எட்டு மலைகள்.
அட்ட சித்தி - எட்டு வகை அருஞ் செயல்கள்.

*அட்டணை* - குறுக்கு, மடித்தல்.
*அட்டணைக்கால்* - குறுக்காக மடக்கி வைக்குங்கால்.
*அட்டமங்கலம்* - எட்டு வகை மங்கலப் பொருள்கள்.
*அட்டமம்* - எட்டாவது.
*அட்டமி* - எட்டாம் நாள்.
*அட்டமூர்த்தி* - சிவன்.
*அட்டம்* - எட்டு, மேல் வீடு, குறுக்கு, சாதிக்காய், அருஇடம், விரோதம்.
*அட்டவணை* - தொகுத்துச் சேர்க்கப்பட்டது.
*அட்டவீரட்டம்* - சிவன் வீரம் செலுத்திய எட்டு இடங்கள்.
*அட்டாங்கம்* - எண்வகையுறுப்பு.
*அட்டாணி* - கோட்டை மதில் மேல் மண்டபம்.
*அட்டாதுட்டி* - தாறுமாறு.
*அட்டாலம்* - காவற் பரண், மேல் வீடு.
*அட்டாலை* - அட்டாலம்.
*அட்டாவதானம்* - ஒரே சமயத்தில் எட்டுப் பொருள்களில் மனத்தைச் செலுத்தும் வித்தை.
*அட்டி*-தடை, தாமதம், எட்டி.
*அட்டிகை* - கழுத்தணி.
*அட்டில்* - சமயலறை.
*அட்டு* - பனை வெல்லம்.
*அட்டுதல்* - வார்த்தல், அழித்தல், இடுதல், சமைத்தல், சுவைத்தல், ஒட்டுதல்.
*அட்டூழியம்* - தகாத செய்கை, கொடுமை.
*அட்டை* - மேலுறை, உதிர முறிஞ்சும் ஒரு நீர்ப்பிராணி
*அட்டோலகம்* - ஆடம்பரம்.
*அணங்காடல்*- தெய்வமேறியாடல்.
*அணங்கு* - வருத்தம், நோய், அச்சம், ஆசை, அழகு, பெண், பெண் தெய்வம், கொல்லிப் பாவை, பேய் மகள், குட்டி.
*அணங்குதல்* - வருந்துதல், வருத்துதல், இறத்தல்.
*அணத்தல்* - பொருந்துதல், மேலோங்குதல், தலையெடுத்தல்.
*அணரி* - மேல் வாய்ப்புறம்.
*அணர்* - அணரி.
*அணர்தல்* - மேல் நோக்கியெழுதல்.
*அணல்* - கழுத்து, தாடி, கீழ் வாய்ப்புறம், மேல்வாய்ப்புறம்.
*அணவல்* - நெருங்குதல், சேருதல், மேலெழுதல்.
*அணவு* - பொருந்து, சேர்.
*அணா* - ரூபாயின் பதினாறில் ஒரு பங்கு.
*அணாப்பு* - ஏமாற்று.
*அணார்* - கழுத்து.
*அணாவு* - சேர்.
*அணி* - அழகு, அலங்காரம், வேடம், ஆபரணம், சமீபம், படை வகுப்பு, வரிசை, அணியிலக்கணம்.

**அணிகம்** - ஆபரணம், வாகனம்.
**அணிகலம்** - ஆபரணம், நகை.
**அணிதல்** - அலங்கரித்தல், சார்த்துதல், பூணுதல்.
**அணிந்துரை** - முகவுரை, பாயிரம்.
**அணிமா** - அட்டமா சித்திகளுள் ஒன்று, அணு அளவாகச் சுருங்கும் சக்தி.
**அணிமை** - சமீபம்.
**அணியம்** - கப்பலின் முன் பக்கம், அணி வகுப்பு.
**அணியல்** — அணிதல், மாலை.
**அணில்** - அணில் என்னும் பிராணி.
**அணிவட்டம்** - கழுத்துமாலை.
**அணிவிரல்** - மோதிர விரல்.
**அணிவில்** - பேரேடு.
**அணு** - நுண்ணியது, உயிர்.
**அணுகல்** - சமீபித்தல்.
**அணுகு** - நெருங்கு.
**அணுக்கம்** - சமீபம்.
**அணுமை** - அணிமை.
**அணை** - கரை, அணைக்கட்டு, தடை, ஆசனம், மெத்தை, தலையணை, பாலம், தறி.
**அணைசு** - குழல் வாத்தியத்தின் முகப்பு.
**அணைதல்** - சேர்தல், அவிதல்.
**அண்டகடாகம்**-உலகவுருண்டையின் மேலோடு.
**அண்டகோசம்** - உலகத்தின் மேலோடு, அண்டகடாகம்.
**அண்டகோளகை** - உலகவுருண்டை.
**அண்டங்காக்கை** - காக்கையின் ஒரு வகை.
**அண்டசம்** - முட்டையினின்று பிறப்பன.
**அண்டபகிரண்டம்** - உலகமும் அதன் புறத்திலுள்ள மற்ற உலகங்களும்.
**அண்டப்புரட்டன்** - பெருமோசக்காரன்.
**அண்டமுகடு** - வானத்தின் உச்சி.
**அண்டம்** - முட்டை, உலகம், வானம், விதை, வெளி, ஆண் குறியின் அடிப்பகுதி.
**அண்டயோனி** - முட்டையிற் பிறப்பது, சூரியன்.
**அண்டரண்டம்** - பகிரண்டம், ஒருவகைப் பறவை.
**அண்டர்** - தேவர், இடையர், பகைவர்.
**அண்டல்** - நெருங்குதல், பகைத்தல்.
**அண்டன்** - கடவுள்.
**அண்டா** - ஒரு பாத்திரம்.
**அண்டிகம்** — செந்நாய்.
**அண்டுதல்** - சமீபித்தல், கிட்டுதல்.
**அண்டை** - அயல், சமீபம், நீர் தூவும் கருவி, முட்டு.
**அண்ணம்** - மேல் வாய்ப்புறம்.
**அண்ணல்** - பெருமை, தலைமை, பெரியோன், தலைவன், முல்லை நிலத் தலைவன், தமையன், கடவுள்.

*அண்ணன்* - தமையன்.
*அண்ணா* - உள்நாக்கு.
*அண்ணாத்தல்* - தலை நிமிர்தல், அங்காத்தல், வாய் திறத்தல்.
*அண்ணாந்தாள்* - தலை நிமிர்த்திப் பூட்டும் கயிறு.
*அண்ணாவி* - உபாத்தியாயன்
*அண்ணி* - அண்ணன் மனைவி.
*அண்ணித்தல்* - அணுகி அருள் புரிதல், தித்தித்தல்.
*அண்ணை* - அறிவிலி.
*அண்டுதல்* - ஒதுங்குதல், ஆசிரயித்தல், சமீபித்தல்.
*அண்பல்* - மேல் வாய்ப்பல்.
*அண்முதல்* - சமீபித்தல், அண்ணுதல்.
*அண்மை* - சமீபம், சார்பு.
*அத* - அத்தி மரம்.
*அதகம்* - மருந்து.
*அதகன்* - வலிமையுடையவன்.
*அதட்டம்* - கீழ்வாய்ப் பல், பாம்பின் நச்சுப்பல், பாம்பின் மூச்சு.
*அதட்டுதல்* - ஒலித்து உரப்புதல், வெருட்டுதல்.
*அதமம்* - கடைப்பட்டது, இழிந்தது.
*அதமாதமம்* - மிகவும் கடைப்பட்டது.
*அதம்* - நாசம், தாழ்வு, பள்ளம், அத்தி மரம்.
*அதரம்* - கீழுதடு.
*அதரிதிரித்தல்* - நெற்கதிரைக் கடா விட்டு உழக்குதல்.
*அதருமம்* - தருமம் அல்லாதது, பாவம்.
*அதர்* - வழி, ஆட்டின் கழுத்தில் தொங்கும் உறுப்பு, நுண்மணல், சக்கை.
*அதர்ப்படுதல்* - வழியில் தோன்றுதல், நெறிப்படுதல்.
*அதர்வணம்* - நான்காம் வேதம்.
*அதர்வை* - வழி.
*அதலகுதலம்* - பெருங் குழப்பம்.
*அதலம்* - கீழ் ஏழு உலகங்களுள் முதலாவது.
*அதவம்* - அத்தி மரம்.
*அதவு* - அத்தி மரம்.
*அதவுதல்* - எதிர்த்துத் துன்புறுத்தல், கொல்லுதல்.
*அதழ்* - இதழ்.
*அதளி* - குழப்பம்.
*அதளை* - வயல் வெளிக் காவற் குடிசை, நிலப் பீர்க்கு, புளியுருண்டை.
*அதள்* - தோல், மரப் பட்டை.
*அதனம்* - மிகுதி.
*அதி* - மிகுதி.
*அதிகமான்* - அதியமான் நெடுமானஞ்சி.
*அதிகம்* - மிகுதி, குருக்கத்தி.
*அதிகரணம்* - நூற்பொருட் கூறுபாடு, ஆதாரம், ஏழாம் வேற்றுமைப் பொருள்.
*அதிகரித்தல்* - அதிகாரம் செய்தல்
*அதிகர்* - பெரியோர்.

*அதிகாரம்* - ஆளுந்தன்மை, தலைமை, நூற்பிரிவு.
*அதிகாரி* - தலைவன், உரியவன்.
*அதிக்கிரமம்* - மீறுதல், தீச்செயல், அநீதி
*அதிங்கம்* - அதிமதுரம், குன்றிமணி.
*அதிசயம்* - புதுமை, வியப்பு.
*அதிசயோக்தி* - உயர்வு நவிற்சியணி, உயர்த்துக் கூறுதல்.
*அதிசாரம்* - கிரகங்களின் வழக்கத்திற்கு மீறியபோக்கு மிகுந்த வயிற்றுப்போக்கு, கல்லுப்பு, அதிமதுரம்.
*அதிட்டம்* - எதிர் பாராத ஊதியம், மிளகு.
*அதிட்டானம்* - நிலைக்களம்.
*அதிதாரம்* - இலந்தை மரம்.
*அதிதி* - விருந்தினன், காசிபர் மனைவியருள் ஒருத்தி.
*அதிதிநாள்* - புனர்பூச நட்சத்திரம்.
*அதி தேவதை* - உரிய தெய்வம், அதிட்டான தேவதை.
*அதிபதி* - தலைவன், அரசன், சண்பகம்.
*அதிபன்* - தலைவன், அரசன், இறைவன்.
*அதிமதுரம்* - மிகுந்த இனிமை, ஒரு தாவரம், ஒரு மருந்து சரக்கு
*அதிமலம்* - மாவிலிங்கம்.
*அதியமான்* - அதிகமான்.
*அதியன்* - மேம்பட்டவன், அதியமான்.
*அதிரசம்* - மிக்க இனிமை, பணியார வகை.
*அதிரதன்* - கணக்கற்ற தேர் வீரரை எதிர்த்துப் போரிடும் வன்மை யுடையவன்.
*அதிரல்* - ஒலித்தல், காட்டு மல்லிகை, புனலிக் கொடி. அடித்தூறு.
*அதிரேகம்* - மிகுதி.
*அதிரோகம்* - எலும்புருக்கி நோய்.
*அதிர்ச்சி* - நடுங்குதல், ஆரவாரம்.
*அதிர்தல்* - முழங்குதல், நடுங்குதல், தளர்தல்.
*அதிர்ப்பு* - அதிர்ச்சி.
*அதிர்வு* - அதிர்ச்சி.
*அதிர்வெடி* - குழாய் வெடி, மிகுந்த ஒலியை யுடைய வெடி.
*அதிவியாத்தி* - இலக்கண மில்லாததற்கும் இலக்கணம் செல்லும் குற்றம்
*அதிவியாப்தி* - அதிவியாத்தி.
*அதிவிருட்டி* - அதிக மழை.
*அதிவீரராமபாண்டியன்* - நைடத ஆசிரியன்
*அதீதம்* - கடந்தது, மேம்பட்டது.
*அதீதர்* - ஞானியர்.
*அதீனம்* - வசம்.
*அது* - அஃறிணை ஒருமைச் சுட்டுப் பெயர், ஆறாம் வேற்றுமை உருபு.

*அதுக்கல்* - அடைத்தல், கடித்தல். பிசைதல்.
*அதுங்குதல்* - அமுங்குதல்.
*அதும்புதல்* - மொய்த்தல்.
*அதுலம்* - ஒப்பின்மை.
*அதுல்லியம்* - ஒப்பின்மை.
*அதைப்பு* - வீக்கம், தாக்கி மீளல்.
*அதைரியம்* - திடமின்மை, அச்சம்.
*அதோகதி* - தாழ்நிலை.
*அதோமுகம்* - கீழ்நோக்கிய முகம், தலைகீழ்நிலை. கடற்கழிமுகம்.
*அத்தகம்* - ஆமணக்கு, கடுஞ் சீரகம்.
*அத்தகடகம்* - கைவளை.
*அத்தகிரி* - சூரியன் அஸ்தமிக்கும் மலை.
*அத்த சாமம்* - நடு இரவு.
*அத்தம்* - வழி, பாலை நிலம், கை, ஒரு நட்சத்திரம், பாதி ஆண்டு, பொருள், கண்ணுடி, அத்தகிரி.
*அத்தர்* - பூக்களிலிருந்து எடுக்கும் வாசனைத் தைலம்.
*அத்தவாளம்* - மேலாடை, காடு.
*அத்தனை* - அவ்வளவு.
*அத்தன்* - தந்தை, குரு, கடவுள், செல்வன், மூத்தவன், உயர்ந்தவன்.
*அத்தாட்சி* - சாட்சி, உதாரணம்.
*அத்தாணி* - அரசிருக்கை மண்டபம்.
*அத்தாளம்* - இராவுணவு.
*அத்தான்* - அத்தை மகன், சகோதரி கணவன்.
*அத்தி* - ஒரு மரம், யானை, எலும்பு, கொலை. கடல்.
*அத்தி நாத்தி* - உண்டு இல்லை (சமணர் மதக் கொள்கை).
*அத்திம்பேர்* - அத்தை கணவன், சகோதரி கணவன்.
*அத்தியக்கன்* - தலைவன்.
*அத்தியட்சன்* - தலைவன்.
*அத்தியந்தம்* - அளவற்றது.
*அத்தியயனம்* - ஓதுதல்.
*அத்தியாயம்* - நூற்பிரிவு.
*அத்தியாவசியகம்* - இன்றியமையாதது.
*அத்திர சத்திரம்* - கைவிடு படையும்கைவிடாப் படையும், அஸ்திர சஸ்திரம்.
*அத்திரம்* - நிலையற்றது, கைவிடுபடை, தெய்வத்தன்மை பொருந்திய அம்பு, கழுதை, குதிரை, மலை, இலந்தை, கடுக்காய்ப்பூ.
*அத்திரி* - ஒரு முனிவர், கோவேறு கழுதை, உலைத் துருத்தி, மலை.
*அத்திரு* - அரசமரம்.
*அத்தினி* - பெண் யானை, பெண் வகை.
*அத்து* - எல்லை, தைத்தல், அரைப்பட்டிகை, சிவப்பு, ஒரு சாரியை, ஓர் அசைச் சொல்.
*அத்துணை* - அவ்வளவு.

அத்துவயம் - இரண்டல்லாதது, இரண்டாவதில்லாதது.
அத்துவா - வழி.
அத்துவானம் - பாழ்ங்காடு.
அத்துவிதம் - இரண்டற்றது.
அத்துவைதம் - இரண்டற்றது.
அத்தை - மாமி, தந்தையுடன் பிறந்தவள், தலைவி, கற்றாழை, ஒரு முன்னிலையசைச் சொல்.
அநகன் - பாவமற்றவன், கடவுள்.
அநங்கம் - உடல் இன்மை, மல்லிகை, இருவாட்சி.
அநங்கன் - மன்மதன்.
அநந்தம் - முடிவற்றது.
அநந்தரம் - அப்பால், பிறகு.
அநந்தர் - உணர்ச்சி, தூக்கம், மயக்கம்.
அநந்தல் - அநந்தர்.
அநந்தன் - கடவுள், ஆதிசேடன்.
அநர்த்தம் - பயனில்லாதது, கலகம்.
அநலம் - நெருப்பு.
அநவரதம் - எப்பொழுதும்.
அநாதன் - திக்கற்றவன், தனக்குமேல் தலைவன் இல்லாதவன், கடவுள்.
அநாதி - தனக்கு முற்பட்டது இன்மை, கடவுள்.
அநாதை - திக்கற்றவன்.
அநாமிகை - மோதிர விரல்.
அநாயம் - வீண்.
அநாவிருட்டி - மழையின்மை.
அநிசம் - எப்பொழுதும்.
அநித்தம் - நிலையாமை.
அநித்தியம் - நிலையாமை.
அநியாயம் - ஒழுங்கற்றது.
அநிலம் - காற்று.
அநீதம் - நீதியில்லாதது.
அநு - தாடை, உடன், போல, கூட.
அநுகமனம் - உடன் கட்டை யேறல்.
அநுகரணம் - ஒன்று போற் செய்தல்.
அநுகுணம் - தகுந்தது.
அநுகூலம் - கைகூடுதல்.
அநுக்கிரகம் - கருணை செய்தல், கொடுத்தல்.
அநுசந்தானம் - இடைவிடாது நினைத்தல்.
அநுசரணை - உதவி, சார்பு.
அநுசரித்தல் - பின்பற்றுதல்.
அநுசன் - தம்பி.
அநுசாசனம் - உபதேசம்.
அநுசிதம் - தகாதது, பொய்.
அநுஞ்ஞை - கட்டளை, அநுமதி.
அநுட்டானம் - ஒழுக்கம்.
அநுதாத்தம் - படுத்தல் ஓசை.
அநுதாபம் - இரங்குதல்.
அநுதினம் - தினந்தோறும்.
அநுபந்தம் - பின்னாற் சேர்க்கப்பட்டது.
அநுபல்லவி - பாட்டின் ஓர் உறுப்பு.

*அநுபவம்* - நன்கறிந்தது, நுகர்ச்சி.
*அநுபானம்* - மருந்துக்கு உதவியான பொருள்.
*அநுபூதி* - அநுபவ ஞானம்.
*அநுபோகம்* - இன்ப நுகர்ச்சி, பழக்கம்.
*அநுமதி* - இசைவு.
*அநுமானம்* - ஊகித்தல், சந்தேகம்.
*அநுமிதி* - அநுமானத்தால் உண்டாகும் அறிவு.
*அநுமேயம்* - அநுமானத்தால் அறியப்படுவது.
*அநுராகம்* - மிகுந்த ஆசை.
*அநுலோமன்* - உயர் குலத் தந்தைக்கும் இழி குலத் தாய்க்கும் பிறந்தோன்.
*அநுவாதம்* - முன் அறிந்ததைப் பின்னும் கூறுதல்.
*அநேகம்* - ஒன்றல்லாதது, பல.
*அநேகன்* - பலவாயிருப்பவன், கடவுள்.
*அந்தகன்* - குருடன், யமன், சனி.
*அந்தகாரம்* - இருட்டு.
*அந்தக்கரணம்* - அகக் கருவி (மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன).
*அந்தஸ்து* - நிலைமை.
*அந்தணன்* - செந்தண்மையுடையவன், முனிவன், சிவன், பிரமன், பிராமணன்.
*அந்தணாளன்* - பார்ப்பான்.
*அந்தப்புரம்* - அரசன் மனைவியர் இருப்பிடம், உள்ளிடம்.
*அந்தம்* - முடிவு, மரணம், அழகு, குருடு, கத்தூரி, மறைவு, ஒரு பேரெண்.
*அந்தரங்கம்* - உட் கருத்து, இரகசியம், மனம், மறை.
*அந்தரதுந்துபி* - தேவ வாத்தியம்.
*அந்தரம்* - வெளி, வான், நடு, தீமை, வேறுபாடு, தனிமை, அளவு, கோயில்.
*அந்தராத்மா* - மனத்துள்ளிருக்கும் கடவுள்.
*அந்தராளம்* - மூலத்தானத்தையடுத்த மண்டபம்.
*அந்தரி* - துர்க்கை, ஆகாயவாணி, ஒரு தோற் கருவி.
*அந்தரியாமி* - கடவுள்.
*அந்தர்த்தானம்* - மறைதல்.
*அந்தனம்* — கவசம்.
*அந்தன்* - குருடன், யமன், சனி, அழகன், அறிவிலான், கடுக்காய்.
*அந்தாதி* - முற்பாட்டின் இறுதியைப் பிற்பாட்டின் முதலாகக் கொண்டு பாடப்படும் செய்யுள் நூல்.
*அந்தி* - மாலைக்காலம், செவ்வானம், காலைநேரம், தில்லை மரம், பொருந்துதல், அந்திப்பூ.
*அந்திசந்தி* - காலையும் மாலையும்.
*அந்தியம்* - முடிவு.

அந்தியேட்டி - ஈமக்கிரியை, இறுதிக்கடன்.
அந்திரன்-தேவன், கடவுள்.
அந்தில் - அவ்விடம், வெண் கடுகு, ஓர் அசைச் சொல்.
அந்து - பூச்சி வகை, யானை கட்டும் சங்கிலி.
அந்தோ - இரக்கச் சொல்.
அந்நியம் - அயல்.
அந்நியோந்நியம் - மிகுந்த சிநேகம்.
அந்வயம் - வாசக நடை, உரைநடை, பொருள் கோள்.
அநுவயம் - அந்வயம், கொண்டு கூட்டு.
அபகடம் - வஞ்சகம்.
அபகரித்தல் - கவர்தல்.
அபகாரம் - தீமை செய்தல்.
அபகீர்த்தி-நிந்தை,இகழ்ச்சி
அபக்கியாதி - அபகீர்த்தி.
அபக்குவம் - நன்ருக ஆக்கப்படாதது, முதிராமை.
அபசகுனம் - தீக்குறி.
அபசவ்வியம் - இடப் பக்கம், மாறுபாடு.
அபசாரம் - குற்றம் இழைத்தல்.
அபஸ்மாரம் - காக்கை வலிப்பு,வெறுக்கத் தக்கது, நடராஜமூர்த்தியின் அடிக்கீழ் மிதிபடும் புருஷன், முயலகன்.
அபத்தம் - கட்டுக் கடங்காதது, பொய், வீண்.
அபயம் - அடைக்கலம்.
அபயன் - பயமற்றவன், வீரன், சோழன்.
அபரகாத்திரம் - கால்.
அபரக்கிரியை - ஈமச் சடங்கு, இறந்தார் கடன்.
அபரஞானம் - சாஸ்திர ஞானம்.
அபரஞ்சி - புடம் வைத்த பொன்.
அபரபக்கம் - தேய்பிறைக் காலம்.
அபரபட்சம் - அபர பக்கம்.
அபரம் - பிற்பட்டது, பின் பக்கம், மேற்கு, பொய், கவசம், பிணக்கு.
அபராங்கம் - உடம்பின் பிற்பகுதி.
அபராணம் - பிற்பகல்.
அபராதம்-குற்றம்,தண்டனை
அபராதி-குற்றம் செய்தவன்
அபரிச்சின்னம் - துண்டம், அளவிட முடியாதது, செய்யப்படாமை.
அபரிமிதம் - அளவற்றது.
அபரோட்சம் - கண்கூடு.
அபலம் - வலி குறைந்தது.
அபலை - பெண்.
அபவாதம் - வீண் பழிச் சொல்.
அபாண்டம் - பொய்ப் பழி.
அபாத்திரம் - தகாதவன்.
அபாயம் - ஆபத்து.
அபாரம் - எல்லையற்றது.
அபாவம் - இல்லாமை.
அபானம் - ஆசனவாய், குய்யம்.
அபானன் - வாயுவகை.
அபிசாரம்-தீங்கை விளைவிக்கும் மந்திரப் பிரயோகம்.

அபிசாரி - வேசி.
அபிடேகம் - திருமுழுக்கு.
அபிதானம் - பெயர்.
அபிநயம் - அங்கசேஷ்டைகளால் மனக் குறிப்பை வெளியிடும் செய்கை.
அபிநலம் - புதுமை.
அபிப்பிராயம் - கருத்து.
அபிமதம் - விருப்பம்.
அபிமந்திரித்தல் - மந்திரத்தை உருவேற்றி நிலைக்கச் செய்தல்.
அபிமன்யு - அருச்சுனன் மகன்.
அபிமானபுத்திரன் - வளர்ப்பு மகன்.
அபிமானம் - ஆசை.
அபிமுகம் - நேர் முகம்.
அபியுக்தன் - அறிஞன்.
அபியோகம் - முறையீடு.
அபிராமம் - அழகு, விருப்பம்.
அபிராமி - பார்வதி.
அபிலாஷை - ஆசை.
அபிவிருத்தி - மேன் மேல் பெருகுதல்.
அபின் - கசகசாச் செடியின் பால்.
அபினி - அபின்.
அபின்னம் - சிதைவுபடாதது.
அபீஷ்டம் - விருப்பம்.
அபுதன் - மூடன்.
அபூதம் - இல்லாதது.
அபூர்வம் - முன்பில்லாதது. புதியது.
அபேட்சை - விருப்பம்.
அபேதம் - வேறுபாடின்மை.
அபோதம் — அறிவின்மை.
அப்தம் - ஆண்டு.
அப்பணை - கட்டளை, பிணை.
அப்பிகை - ஐப்பசி.
அப்பியங்கனம் - எண்ணெயிட்டு முழுகுதல்.
அப்பியந்தரம் - இடையூறு.
அப்பியம் - தேவர்க்கிடும் பலி.
அப்பியாசம் - பழக்கம். பயிற்சி.
அப்பிரமாணம் - ஆதாரமற்றது.
அப்பிராணி - பேதை.
அப்பு - நீர். கடவுள். குப்பி. பாதிரி.
அப்புதல் - பூசுதல், ஒத்துதல்.
அப்புறம் - அதன்பின், அடுத்த பக்கம்.
அப்பை - கொன்றை, சிறுமீன் வகை.
அப்போஸ்தலன் - கிறிஸ்துவின் தலைமைச் சீடன்.
அப்போது - அந்தக் காலத்தில்.
அமங்கலம் - மங்கலமல்லாதது.
அமங்கலி - விதவை.
அமங்கலை - அமங்கலி.
அமஞ்சி - ஒழுங்கற்றது. கூலியில்லா வேலை.
அமட்டுதல் - மிரட்டுதல், மயக்குதல்.

*அமண்* - சமண மதம்.
*அமண்பாழி* - சமணர் பள்ளி.
*அமணம்* - சமண மதம், ஆடையின்மை.
*அமயம்* - சமயம், பொழுது.
*அமரகம்* - போர்க்களம்.
*அமரகோசம்* - ஒரு வடமொழி நிகண்டு.
*அமரசிங்கர்* - அமரகோசம் இயற்றிய ஆசிரியர்.
*அமரபக்கம்* - தேய்பிறை.
*அமரம்* - அமர கோசமாகிய நிகண்டு, படகைத் திருப்பும் தண்டு, தோணியின் பின் பக்கம், ஆயிரம் காலாட்களை ஆளுதல், கண்ணோய்.
*அமரர்* - மரணமில்லாதவர், தேவர், பகைவர்.
*அமராவதி* - இந்திரனது தலைநகர்.
*அமரி* - துர்க்கை, அமிர்தம், சிறுநீர், கற்றாழை.
*அமரிக்கை* - அமைதி.
*அமர்* - போர், விருப்பம்.
*அமர்தல்* - இருத்தல், அடங்குதல், விரும்புதல், மனம் ஒன்றுதல்.
*அமர்த்தல்* - அமரச் செய்தல், மாறுபடுதல்.
*அமலகம்* - நெல்லி.
*அமலன்* - கடவுள்.
*அமலுதல்* - நெருங்குதல், செறிதல், நிறைதல், பெருகுதல்.
*அமலை* - ஆரவாரம், சோற்றுத் திரளை, கட்டி, கூத்து, தேவி, போரில்பட்ட அரசனை நெருங்கி வீரர் திரண்டு பாடும் பாட்டு.
*அமல்* - அதிகாரம், மேல் விசாரணை, நிறைவு.
*அமளி* - ஆரவாரம், படுக்கை.
*அமளை* - கடுகுரோகணி.
*அமாத்தியன்* - மந்திரி.
*அமாவாசை* - சந்திரன் இல்லாத இரவுடைய நாள்.
*அமானம்* - அளவில்லாதது.
*அமானி* - அளக்கப்படாதது, பொது, புளியாரை.
*அமிசம்* - பங்கு, அதிருஷ்டம்.
*அமிசை* - அமைப்பு, தலையெழுத்து.
*அமிதசாகரர்* - யாப்பருங்கலக் காரிகை ஆசிரியர்.
*அமிர்தகவிராயர்* - ஒரு துறைக்கோவை யாசிரியர்.
*அமிர்தகலை* - சந்திரகலை.
*அமிர்தம்* - தேவருணவு, பால், மருந்து, இனிமை.
*அமிர்து* - அமிர்தம்.
*அமிழ்தம்* - அமிர்தம்.
*அமிழ்து* - அமிழ்தம்.
*அமிழ்தல்* - ஆழ்தல்.
*அமிழ்த்துதல்* - ஆழ்த்துதல்.
*அமீர்* - முகம்மதியத் தலைவன்.
*அமுக்கன்* - இரகசியமாய் வேலை செய்பவன்.
*அமுக்கு* - அழுத்து, மறை.

*அமுதம்* - அமிருதம்.
*அமுத கடிகை* - சுப கருமங்களுக்குரிய நாழிகை.
*அமுதசுரபி* - மணிமேகலை கையிலிருந்த உணவு வற்ருத பிச்சைப் பாத்திரம்.
*அமுதவல்லி* - சீந்திற்கொடி.
*அமுதவெழுத்து* - சொல் முதலில் வைக்கத் தக்க மங்கல வெழுத்து (அ, இ, உ, எ, க, ச, த, ந, ப, ம, வ.)
*அமுதன்* - கடவுள்.
*அமுது* - சோறு, அமிர்தம், பால், நீர்.
*அமுது செய்தல்* - உண்ணுதல்.
*அமுதுபடி* - அரிசி.
*அமுரி* - சிறுநீர், மூத்திரம்.
*அமூர்த்தன்* - சிவன்.
*அமேத்தியம்* - மலம்.
*அமை* - மூங்கில், பொருத்து என்னும் ஏவல், அழகு.
*அமைச்சன்* - மந்திரி.
*அமைச்சு* - மந்திரித் தன்மை.
*அமைதல்* - பொருந்துதல், அடங்குதல், தகுதியாதல், நிறைதல், போதியதாதல், சிறத்தல், ஏற்படுதல், உடன்படுதல், தங்குதல், முடிதல்.
*அமைதி* - அடக்கம், பொருத்தம், தன்மை, சமயம், சால்பு.
*அமைத்தல்* - சேர்த்தல், படைத்தல், பதித்தல்.
*அமைப்பு* - ஏற்பாடு, நிலை, விதி.
*அமையம்* - சமயம்.
*அமைவு* - இயல்பு, நிறைவு, அடங்குதல்.
*அமோகம்* - பெருந்தன்மை, இலக்குத் தப்பாமை, மழுங்கலின்மை, மிகுதி.
*அம்* - அழகு, நீர், மேகம், ஒரு சாரியை.
*அம்சம்* - பங்கு, அன்னப் பறவை.
*அம்பகம்* - கண், எழுச்சி, செம்பு, விடை.
*அம்பட்டன்* - நாவிதன்.
*அம்பணம்* - துலாக்கோல், மரக்கால், வாழை, யாழ் வகை, நீர் விழும் குழாய்.
*அம்பணவர்* - பாணர்.
*அம்பரம்* - வான், துகில், திசை, கடல், துயிலிடம்.
*அம்பரவாணம்* - எண்காற் புள்.
*அம்பபரை* - நிமிளை.
*அம்பர்* - ஓர்க்கோலை, அவ்விடம், அப்பால்.
*அம்பலக்காரன்* - ஊர்த் தலைவன், கள்வர்குலப் பட்டப் பெயர்.
*அம்பலக்கூத்தன்* - சிவன்.
*அம்பலச்சாவடி* - கிராமப் பஞ்சாயத்து மண்டபம்.
*அம்பலம்* - சபை, வெளி, பொதுவிடம், சிதம்பர க்ஷேத்திரம்.
*அம்பலவாண கவிராயர்* - அறப்பளீசுர சதக ஆசிரியர், ஒரு புலவர்.

அம்பலவாணன் - சிவன்.
அம்பலி - ஒரு வாத்தியம்.
அம்பல் - சிலர் அறிந்து புறங் கூறும் மொழி, அலர், பழிமொழி.
அம்பறுத்தூணி - அம்புகள் வைக்கும் புட்டில்.
அம்பா - தேவி.
அம்பாரம் - பெருங்குவியல்.
அம்பாரி - யானை மேலமைத்த இருக்கை.
அம்பாலிகை - தரும தேவதை, பாண்டு மன்னனின் தாய்.
அம்பால் - தோட்டம்.
அம்பாவாடல் - தைந்நீர் ஆடல்.
அம்பாள் - தேவி.
அம்பி - ஓடம், மரக்கலம், இறை கூடை, நீர்ப்பொறி, கள், மிடா.
அம்பிகாபதி - சிவபிரான், கம்பர் மகன்.
அம்பிகை - தேவி.
அம்பிகை பாகன் - சிவன்.
அம்பு - பாணம், நீர், மேகம், தளிர், மூங்கில், எலுமிச்சை, உலகம், வளையல், திப்பிலி.
அம்புக்கூடு - அம்பறுத்தூணி.
அம்புசம் - தாமரை.
அம்புதம் - மேகம், கோரை.
அம்புதி - கடல்.
அம்புயம் - தாமரை.
அம்புராசி - கடல்.
அம்புலி - சந்திரன்.
அம்புலிப்பருவம் - பிள்ளைத் தமிழ் உறுப்புக்களில் ஒன்று, (சந்திரனைக் கூப்பிடும் பருவம்.)
அம்புலிமான் - சந்திரன், அதில் உள்ள மான்.
அம்பை - அம்பாள், தேவி.
அம்போதரங்கம் - கலிப்பா வுறுப்புக்களில் ஒன்று.
அம்போதி - கடல், காற்று.
அம்போருகம் - தாமரை.
அம்ம - கேள் என்னும் குறிப்பு, ஓர் அசை.
அம்மணம் - நிர்வாணம்.
அம்மணி - பெண்ணைக்குறிக்கும் மரியாதைச் சொல்.
அம்மம் - முலை, ஸ்தனம், நகில்.
அம்மனை - அம்மானை, தாய், நெருப்பு.
அம்மன் - தேவி.
அம்மா - தாய், அதிசயக் குறிப்பு, ஓர் அசைச்சொல்.
அம்மாமி - மாமன் மனைவி.
அம்மார் - கப்பற் கயிறு.
அம்மானை - ஒருவிளையாட்டு. ஒரு வகைப்பாடல், கலம்பக வுறுப்பு.
அம்மான் - தாயுடன் பிறந்தவன், தந்தை, கடவுள்.
அம்மான்சேய் - மாமன் மகன்.
அம்மி - அரை கல்.
அம்மிக்குழவி - அம்மியில் அரைக்கும்கருவியாகியகல்.
அம்முதல் - வெளிக்காட்டாமல் ஒலித்தல், மூடுதல், பரவிப் படர்தல்,
அம்மை - தாய், அழகு,

வைசூரி, முற்பிறப்பு, வரு பிறப்பு, பாவ்கை, தேவி.

*அம்மை குத்தல்* - வைசூரி வாராது தடுக்கும் சிகிச்சை (அம்மைப் பாலை உடலில் குத்திச் சேர்த்தல்.)

*அம்மையப்பர்* - உமை யோடுகூடியசிவபெருமான்.

*அயக்காந்தம்* - ஊசிக் காந் தம், ஒரு மருந்து.

*அயசு* - இரும்பு.

*அயநம்* - வரையறை, எல்லை, வழி.

*அயம்* - ஆடு, இரும்பு, குதிரை, சுனை, நல்வினை, விழா, ஐயம்.

*அயர்தல்* - தளர்தல், மறத் தல், செய்தல், விரும்புதல், கொண்டாடுதல்.

*அயர்தி* - மறதி.

*அயர்வு* - சோர்வு, மயக்கம்.

*அயலி* - வெண் கடுகு.

*அயல்* - அயலிடம், அயலார், பக்கம், வேறு.

*அயவணம்* - ஒட்டகம்.

*அயவி* - சிற்றரத்தை.

*அயறு* - புண்ணினின்று வடி யும் நீர்.

*அயன்* - பிரமன்.

*அயா* - வருத்தம், தளர்ச்சி.

*அயாவுயிர்த்தல்* - பெரு மூச்சு விடுதல், வருத்தம் நீங்குதல்.

*அயிராணி* - இந்திராணி.

*அயிராவணம்* - இந்திரன், வெள்ளை யானை.

*அயிராவதம்* - அயிராவணம்.

*அயிரை* - ஒருவகை மீன் நுண்மணல், சேரநாட் டுள்ள ஒரு மலை, ஓர் ஆறு.

*அயிர்* - நுண்மை, சந்தே கம், நுண்மணல், சருக் கரை, வாசனைப்பொருள்.

*அயிர்த்தல்* - ஐயப்படுதல்.

*அயிலான்* - முருகன்.

*அயிலுழவன்* - வீரன்.

*அயிலை* - ஒருவகை மீன்.

*அயில்* - கூர்மை, வேல். கோரை, கலப்பை, அழகு, உண் என்னும் ஏவல்.

*அயிற்பெண்டு* - ஒருவகைக் கூத்து.

*அயினி* - சோறு, உணவு, நீராகாரம்.

*அயுத்தம்* - தகுதியின்மை.

*அயுதம்* - பதினாயிரம்.

*அயோக்கியம்*-தகுதியற்றது

*அர* - பாம்பு.

*அரக்கன்* - இராக்கதன்.

*அரக்கி* - இராக்கதப் பெண்

*அரக்கு* - சிவப்பு, செம் மெழுகு, சாதிலிங்கம், தேன், சாராயம்.

*அரக்குதல்* - தேய்த்தல், சிதைத்தல், தள்ளுதல், அழித்தல்.

*அரங்கநாதன்* - ஸ்ரீரங்கத் தில் எழுந்தருளியுள்ள திரு மால்.

*அரங்கம்* - நாடகசாலை, போர்க்களம், மன்றம், சிலம்பக் கூடம், ஆற் றிடைக் குறை, ஸ்ரீரங்க க்ஷேத்திரம், அவை.

*அரங்கு* - நாடகசாலை, மன்றம், சூதாடுமிடம்.
*அரங்கேற்றல்* - புதியவாக இயற்றப்பட்ட நூல்களைச் சபை கூட்டி ஏற்குமாறு வகை செய்தல்.
*அரசவாகை* - அரசர் இயல்பை மிகுத்துக் கூறும் புறத்துறை.
*அரசன்* - நாடாள்வோன்.
*அரசாட்சி* - அரசு புரிதல்.
*அரசாணி* - அரசி, மணப் பந்தலில் அரசங்கால் நாட்டும் மேடை.
*அரசி* - இராணி.
*அரசியல்* - அரசாட்சிமுறை.
*அரசிருக்கை* - சிங்காதனம், அரசன் கொலு வீற்றிருக்குமிடம்.
*அரசிறை* - கப்பம், அரசர்க்கரசன்.
*அரசு* - அரசன், இராச்சியம், அரசமரம்.
*அரசுகட்டில்* - சிங்காதனம்.
*அரசுவா* - பட்டத்து யானை, அரச யானை.
*அரட்டன்* - வீண் பேச்சுப் பேசுவோன், கொள்ளையடிப்பவன், சிற்றரசன், துஷ்டன்.
*அரட்டல்* - பயமுறுத்தல்.
*அரட்டி* - அச்சம்.
*அரட்டு* - குறும்பு, அச்சம், கருவம்.
*அரணம்* - காவல், கோட்டை, மதில், வேலி, செருப்பு, கவசம், கருஞ்சீரகம்.
*அரணி* - தீக்கடைகோல், சூரியன், கவசம், காடு, மதில்.
*அரணியம்* - காடு.
*அரணை* - பல்லி போன்ற ஒரு வகைப் பிராணி, செந்து வகை.
*அரண்* - கோட்டை, காவற்காடு, காவல்.
*அரண்மனை* - அரசன் வீடு.
*அரதனம்* - இரத்தினம்.
*அரதி* - வேண்டாமை.
*அரதேசி* - உண்ணுமல் திரிபவன்.
*அரத்தம்* - சிவப்பு, இரத்தம், அரக்கு, செம்பரத்தம், பொன், கடம்பு.
*அரத்தன்* - செவ்வாய்.
*அரத்தை* - துன்பம், குறிஞ்சியாழிசை, ஒரு மருந்துச் சரக்குச் செடி வகை.
*அராகம்* - பாவின் உறுப்பு, இச்சை, சிவப்பு, இச்சையின்மை.
*அரப்பொடி* - இரும்புத்தூள்.
*அரமகள்* - தெய்வப்பெண்.
*அரமனை* - அரண்மனை.
*அரமியம்* - நிலா முற்றம், மேன்மாடம்.
*அரம்* - அராவும் கருவி, கீழ் உலகம்.
*அரம்பு* - தீமை, குறும்பு.
*அரம்பை* - தெய்வப்பெண், நடனமாது, வாழை, ஓமம்.
*அரலை* - கடல், விதை, குற்றம், கழலை, கொடி முறுக்கு, ஒரு குன்றம்,

பருக்கைக் கல்.
*அரவணை* - பாம்புப் படுக்கை (சேஷசயனம்)
*அரவணைத்தல்* - ஆதரித்தல், தழுவுதல்.
*அரவம்* - ஒலி, ஆரவாரம், சிலம்பு, பாம்பு, ஆயிலியம்.
*அரவிந்தம்* - தாமரை.
*அரவு* - பாம்பு, ஒலி, நாக மரம், ஆயிலியம்.
*அரளி* - அலரி, பீ நாறி.
*அரற்றல்* - அழுதல், ஒலித்தல்.
*அரன்* - சிவன்.
*அரா* - பாம்பு.
*அராகம்* - ஆசை, ஆசையின்மை, பாலையாழ்த்திறம், கலிப்பாவின் ஓர் உறுப்பு, சிவப்பு, அடங்காமை.
*அராக்கோள்* - இராகுகேதுக்கள்.
*அராந்தாணம்* - அருகர் கோயில்.
*அராபதம்* - வண்டு.
*அராமம்* - சோலை, பசிய பயிர்.
*அராமி* - கொடியவன்.
*அராவல்* - உராய்தல்.
*அராவான்* - அருச்சுனனுக்கும் நாககன்னிகை ஒருத்திக்கும் பிறந்த மகன்.
*அரி* - நெற்கதிர், வண்டு, கோடு, திருமால், சிங்கம், பகைவன், பாம்பு, பகை, அழகு, மரவயிரம், சந்திரன் தேர், பரற்கல், பறை, மூங்கில், குரங்கு, குதிரை, மழைத்தூவல், தவளை, விதை, சிலம்பின் பரல்.
*அரிகண்டம்* - கழுத்தில் மாட்டப்படும் இரும்பு வட்டம், துன்பம், தலையிற்று வீழ்வதைப் பந்தயமாகக் கொண்டு சமிசையைப்பூர்த்திசெய்யும் வகையில் பாடுதல்.
*அரிகரபுத்திரன்* - ஐயனார்.
*அரிகால்* - அரிந்துவிட்ட தாள்.
*அரிகூடம்* - கோபுர வாயில்.
*அரிசனம்* - மஞ்சள்.
*அரிசி* - நெல்லினுள் மணி.
*அரிசில்கிழார்* - பதிற்றுப் பத்துள் 8-ஆம் பத்தைப் பாடிய புலவர்.
*அரிச்சுவடி* - நெடுங் கணக்குப் பயிற்றுவிக்கும் நூல்.
*அரிட்டம்* - கேடு, வேம்பு, கள், காரிகை, மோர், முட்டை.
*அரிணம்* - மான், யானை, சிவப்பு, பொன், வெள்ளை.
*அரிணை* - கள்.
*அரிதகி* - கடுக்காய் மரம்.
*அரிதம்* - திசை, பொன்னிறம், பச்சை.
*அரிதாரம்* - ஒரு மருந்துச் சரக்கு.
*அரிதாள்* - கதிர் அறுக்கப்பட்ட தாள்.
*அரித்தல்* - தின வெடுத்தல், கையால் திரட்டிச் சேர்த்தல், காய்ச்சுதல், துன்பப்படுத்தல்.
*அரித்தை* - துன்பம்.

அரித்தமன் - பகைவரை அழிப்பவன், திருமால்.
அரிப்பரித்தல் - கொழித்தல், ஆராய்தல்.
அரிப்பு - தினவு, சினம், அரித்தெடுத்தல்.
அரிமா - ஆண் சிங்கம்.
அரிமா நோக்கு - முன்னும் பின்னும் தொடர்பு பட நிற்கும் சூத்திர நிலை.
அரிமான் - சிங்கம்.
அரியகம் - காற்சரி என்னும் நகை, கொன்றை மரம்.
அரியம் - வாத்தியம்.
அரியல் - கள் தேன்.
அரியாசம் - ஒரு வாசனைப் பொருள்.
அரியாசனம் - சிம்மாசனம்.
அரியாயோகம் - அரைப் பட்டிகை.
அரியேறு - ஆண் சிங்கம்.
அரில் - குற்றம், பகை, சிறுதூறு. சிறுகாடு, மூங்கில்.
அரிவரி - நெடுங்கணக்கு.
அரிவாள் - வெட்டுங் கருவி.
அரிவாள்மணை - கறி அரியும் கருவி.
அரிவி - கதிர்ப் பிடி.
அரிவை - பெண், இருபது முதல் இருபத்தைந்து வயதுவரை உள்ள பெண்.
அரு - உருவம் அற்றது.
அருகம் - தகுதியானது, சமணமதம்.
அருகல் — குறைதல்.
அருகன் - சமணன், தகுதியுடையவன், தோழன்.
அருகியல் - பண்வகை.
அருகு - பக்கம்.
அருகுதல் - சுருங்குதல், அருமையாதல், நோவுண்டாதல், குறிப்பித்தல்.
அருக்கம் - எருக்கு, பொன், சூரியன், நீர்க் காக்கை, அருமை, குறைவு.
அருக்கணிப்பு - அருவருப்பு.
அருக்கன் - சூரியன், சுக்கு.
அருக்காணி - அருமை, அழுத்தம்.
அருக்கியம் - அர்க்கியம் மந்திர நீர் இறைத்தல்.
அருங்கதி - வீடு பேறு.
அருங்கலம் - நகை, அழகு செய்யும் பொருள்.
அருங்கிடை - நோயாய்ப் படுத்துக் கிடத்தல்.
அருங்கேடு - கேடின்மை.
அருச்சகன் - பூசாரி.
அருச்சனை - மலர்தூவிப் பூசித்தல்.
அருச்சி - மலர் தூவிப் பூசை செய்.
அருச்சுனம் - வெண்மை, எருக்கு, மருதமரம், பொன்.
அருஞ்சுரம் - கொடிய பாலைவனம்.
அருட்குறி - சிவலிங்கம்.
அருட்டு - அச்சுறுத்து.
அருட்பா - இராமலிங்க சுவாமிகள் அருளிய பாடல்களின் தொகுதி.
அருணகிரிநாதர் - திருப்புகழ் பாடியவர்.

அருணம் - சிவப்பு, மான், ஆடு, எலுமிச்சை.
அருணன் - சூரியன், சூரியன் தேர்ப்பாகன், புதன், அருணாசலம், திருவண்ணாமலை.
அருணி - மான் சாதிப்பெண்.
அருணோதயம் - விடியற்காலம்.
அருண்மொழித்தேவர் - சேக்கிழார்.
அருத்தநாரீச்சுரன் - உமையொருபாகன், சிவபெருமான்.
அருத்தநூல் - பொருள்நூல்.
அருத்தம் - சொற்பொருள், செல்வம், அரைப்பங்கு.
அருத்தாபத்தி - சொல்லியதைக் கொண்டு சொல்லாததையறிதல், ஔவை.
அருத்தி - ஆசை, கூத்து.
அருத்து - உண்பி.
அருநெறி - செல்லுதற்கரிய வழி.
அருந்தல் - உண்ணுதல், அருமை.
அருப்பம் - அரண், மருதநிலத்து ஊர், கள், வழுக்குநிலம், நோய், அருமை, பிட்டு, மோர்.
அருப்பலம் - அனிச்சமரம்
அருப்பு - அரும்பு, காட்டரண்.
அருமந்த - மிக்க அருமையான.
அருமருந்தன்ன - அருமந்த.
அருமருந்து - தேவாமிர்தம்.
அருமை - கிடைத்தற்குக் கடினமான தன்மை, இன்மை, இயற்றுதற்குக் கடினமான தன்மை.
அரும்பர் - அரும்பு
அரும்பல் - தோன்றுதல், முளைத்தல்.
அரும்பு - முளை, மொட்டு.
அருவம் - உருவம் இன்மை.
அருவர் - தமிழர்.
அருவாநாடு - பன்னிரண்டு கொடுந் தமிழ் நாடுகளில் ஒன்று.
அருவா வடதலை நாடு-பன்னிரண்டு கொடுந் தமிழ்நாடுகளில் ஒன்று.
அருவருப்பு-மிக்கவெறுப்பு.
அருவி - மலையினின்றும் இழியும் சிற்றாறு, நீரோட்டம், ஒழுங்கு.
அருவு - துன்பம், உருவமின்மை.
அருவுதல்-துன்பப் படுதல், கண்கரித்தல், நெருங்குதல்.
அருளிச்செய்தல் - கூறுதல்.
அருளிப்பாடு - கட்டளை.
அருளுதல்-கருணை செய்தல், கட்டளையிடுதல், கொடுத்தல்.
அருள் - கருணை, சத்தி.
அருவம் - உருவமின்மை.
அரேணுகம் -கடுக்காய்வேர், வால்மிளகு,
அரை - பாதி, இடை, அடிமரம், வயிறு, மேகலை.
அரைகுறை - முற்றுப் பெறுதநிலை.

*அரைக்கச்சு* - இடைப்பட்டிகை.
*அரைக்காணி* - நூற்று அறுபதில் ஒரு பங்கு.
*அரைக்கால்* - எட்டிலொரு பங்கு.
*அரைசன்* - அரசன்.
*அரைசு* - அரசன், அரசாட்சி.
*அரைஞாண்* - இடுப்பிற் கட்டும் கயிறு.
*அரைநாண்* - அரைஞாண்.
*அரைப்பட்டிகை* - மாதரிடையிற் கட்டும் அணிவகை.
*அரைப்பு* - சாந்து, இலுப்பைப் பிண்ணுக்கு.
*அரைமா* - நாற்பதில் ஒருபங்கு
*அரையர்* - விஷ்ணு கோவில்களில் பிரபந்தம் பாடித் தொண்டு செய்பவர்.
*அரோ* - ஓர் அசைச் சொல்.
*அரோசிகம்* - உருசியற்ற தன்மை, அருவருப்பு.
*அர்ச்சகன்* - பூசாரி.
*அர்ச்சனை* - மலர்தூவுதல், பூசை.
*அர்ச்சியசிஷ்டர்* - பூசிக்கத் தக்கவர்.
*அர்ச்சை* - மூர்த்தி, விக்ரகம்.
*அர்த்த சந்திரம்* - பாதி வட்ட வடிவமான அணிவகுப்பு, பாதிவட்ட துணியையுடைய அம்புவகை, அஷ்டமி சந்திரன்.
*அர்த்தசாமம்* - நடு இரவு.
*அர்த்தநாரீச்சுரன்* - உமையை ஒரு பாதியில் கொண்ட சிவன்.
*அர்த்தமண்டபம்* - கோயில் கர்ப்பக் கிரகத்தையடுத்த மண்டபம்.
*அர்த்தரதன்* - சாமானிய ரத வீரன்.
*அர்ப்பணம்* - பிறருக்கு உரிமைப் படுத்துதல்.
*அலகிடுதல்* - தூசு போக்குதல், சீர்பிரித்தல், கணக்கிடுதல், விளக்குதல், பெருக்குதல்.
*அலகு* - பறவை மூக்கு, துடைப்பம், கதிர், கூரான பாகம், ஆயுதங்களின் உலோகப் பாகம், இலைவடிவம், பலகறை, அளவு.
*அலகை* - கற்றாழை, பேய், உரையாணி, தலையளவு.
*அலக்கண்* - துன்பம்.
*அலக்கழித்தல்* - துன்புறுத்தல்.
*அலக்கு* - துரட்டுக் கோல், வரிச்சு, தனிமை.
*அலங்கடை* - அல்லாத விடத்து.
*அலங்க மலங்க* - பொறி கலங்க.
*அலங்கம்* - அரண், கொத்தளம்.
*அலங்கரித்தல்* - சிங்காரித்தல்.
*அலங்கல்* - பூமாலை, அசையுங் கதிர்.
*அலங்காரம்* - அழகு, அணி, சிறப்பு.

*அலங்கிருதம்* - அழகு செய்யப்பட்டது, சிங்காரம்.
*அலங்குதல்* - அசைதல், ஒளி செய்தல், இலங்குதல்.
*அலங்கை* - துளசி.
*அலங்கோலம்* - சீர் கேடு.
*அலசுதல்* - கழுவுதல், வருத்துதல்.
*அலட்சியம்* - கவனமின்மை, மதியாதிருத்தல்.
*அலட்டுதல்* - துன்புறுத்தல், அங்கலாய்த்தல், பிதற்றுதல்.
*அலத்தகம்*-செம்பஞ்சுக் குழம்பு.
*அலத்தல்* - வறுமையுறுதல்.
*அலத்தி* - மின்மினி
*அலந்தலை* - துன்பம்.
*அலத்தை* - துன்பம், குளம்.
*அலமரல்* - அஞ்சுதல், தடுமாறுதல், சுழலுதல், வருந்துதல்.
*அலமாப்பு* - துன்பம், வறுமை.
*அலமாரி* - அடுக்குடைப் பெட்டி.
*அலமுகம்* - கலப்பை நுனி.
*அலம்* - கலப்பை, துன்பம். அமைவு, தேள்.
*அலம்பல்* - கழுவுதல், ஒலித்தல். ஆரவாரம், துன்பம்.
*அலம்பு* - வறுமை.
*அலம்வருதல்* - சுழலுதல், வருந்துதல்.
*அலரவன்* - பிரம்மதேவன்.
*அலரி* - ஒரு பூஞ்செடி, சூரியன், கண்வரி, தேனீ, நீராவி, கோதுமை.
*அலர்* - மலர், பலர்கூறும் பழிமொழி, நீர்.
*அலர்தல்*- மலர்தல், விரிதல், மகிழ்தல், சுரத்தல்.
*அலர்த்தல்* - மலரச் செய்தல்.
*அலவலை* - கலக்கம், புலம்பல், ஆராயாது செய்வது, விடாது பேசுபவன்.
*அலவல்* - வியபிசாரம்,இழை நெருக்கமில்லாமல் நெய்யப் பட்டது.
*அலவன்* - ஆண் நண்டு, சந்திரன்.
*அலவாங்கு* - கடப்பாரை.
*அலவாட்டு* - வழக்கம்.
*அலவு* - மனத்தடுமாற்றம்.
*அலவுதல்* - சிந்துதல், அலைதல், சுழலுதல்.
*அலவை* - வியபிசாரம்.
*அலறல்* - கதறல், அழுதல்.
*அலன்* - பலராமன்.
*அலாதம்*-கடைக் கொள்ளி.
*அலாதி* - தனியானது.
*அலாபு* - சுரைக்கொடி.
*அலாயுதன்* - பலராமன்.
*அலாரிப்பு* - நாட்டிய ஆரம்பத்தில் பாடும் சொற்கட்டு.
*அலி* - ஆண்பேடி, எமன், உழவன், நறுவிலிமரம்.
*அலிகம்* - நெற்றி, பொய்,
*அலீகம்* - அலிகம்.

*அலுக்குதல்* - பிலுக்குப்பண்ணுதல், அசைத்தல்.
*அலுத்தல்* - இளைத்தல், சலித்துக் கொள்ளுதல், சிறிது அசைத்தல்.
*அலுப்பு* - சலிப்பு, தளர்வு.
*அலுவல்* - வேலை, தொழில்.
*அலை* - நீர்த்திரை, கடல், வருத்து என்னும் ஏவல், அலைந்து திரி.
*அலைக்கழித்தல்* - அலைத்து வருத்துதல்,
*அலைசுதல்* - கழுவுதல்.
*அலைதல்* - திரிதல், வருந்துதல்.
*அலைத்தல்* - வருத்துதல், அசைத்தல்.
*அலைநீர்* - கடல்.
*அலைப்பு* - வருத்தம்.
*அலைமகள்* - திருமகள்.
*அலைவாய்* - கடல், திருச்செந்தூர்.
*அலைவு* - அசைவு, வருத்தம், திரிதல்.
*அல்* - இரவு, இருள், வறுமை, அன்மை, ஓர் இடைச்சொல்.
*அல்கந்தி* - அந்திப்பொழுது.
*அல்கல்* - சுருங்குதல், தங்குதல், இரவு, தினம், வறுமை.
*அல்கு* - சிறுமை, இரவு.
*அல்குதல்* - சுருங்குதல், தங்குதல், அழிதல், நிலைத்து நிற்றல்.
*அல்குல்* - பக்கம், பெண்குறி.
*அல்லகண்டம்* - துன்பம்.
*அல்லகம்* - நீலோற்பலம்.
*அல்லங்காடி* - அந்திக்கடை.
*அல்லது* - தீங்கு, வேறானது.
*அல்லம்* - இஞ்சி.
*அல்லல்* - துன்பம்.
*அல்லவை* - பாவம்.
*அல்லாட்டம்* - அலைச்சல்.
*அல்லாத்தல்* - வருந்துதல், மகிழ்தல்.
*அல்லாப்பு* - வருத்தம்.
*அல்லி* - அகவிதழ், பூந்தாது, காயா, ஆம்பல், அல்லியரசி.
*அல்லிப்பிஞ்சு* - பூ விழாத பிஞ்சு.
*அல்லியம்* - திருமால் கூத்து, இடையர் ஊர், கொட்டி.
*அல்லியன்* - கூட்டத்தைப் பிரிந்த யானை.
*அல்லியாமரம்* - படைகவலிக்கும் தண்டு.
*அல்லியான்* - பிரமன்.
*அல்லிருள்* - மிக்க இருள்.
*அல்லும்பகலும்* - இரவும் பகலும், நாள் முழுதும்.
*அல்லை* - தருகொடி.
*அல்லோலகல்லோலம்* - மிகுந்த ஆரவாரம், கலவரம்.
*அல்லோன்* - சந்திரன்
*அல்வழி* - தகாத வழி, வேற்றுமையல்லாத வழி.
*அவகடம்* - வஞ்சகம், தாறுமாறு.
*அவகதி* - தாழ்ந்த நிலை.
*அவகாசம்* - சமயம், தக்க இடம்.
*அவகீர்த்தி* - பழிச்சொல்.

*அவகுண்டனம்* - முகம் மறைக்கும் துணி.
*அவகேசி* - பூத்தும் காய்க்காத மரம்.
*அவகேடு* - பெருந் தீங்கு.
*அவசகுனம்* - கெட்ட நிமித்தம்.
*அவசம்* - பரவசம், தன் வசப்படாமை.
*அவசரம்* - விரைவு, கோலம், மிகு தேவை.
*அவண்* - அவ்விடம்.
*அவதந்திரம்* - அநியாய வழி, சதியோசனை.
*அவதாரம்* - பிறத்தல், மேலிருந்து கீழே இறங்குதல்.
*அவதாரிகை* - முகவுரை, முன்னுரை.
*அவதானம்* - மறதியின்மை, கவனம்.
*அவதி* - துன்பம், எல்லை, அளவு, கணக்கு.
*அவதூதன்* - முழுதும் துறந்தவன்.
*அவதூறு* - பழிச்சொல்.
*அவத்தம்* - பொய், கேடு.
*அவத்தை* - வேதனை, நிலை.
*அவந்தரை* - சீர்கேடு.
*அவப்பொழுது* - வீண் பொழுது.
*அவமதிப்பு* - இகழ்ச்சி.
*அவமானம்* - அவமதிப்பு.
*அவமிருத்து* - துர்மரணம்.
*அவம்* - பயனற்ற தன்மை.
*அவயங்காத்தல்* - அடைகாத்தல்.
*அவயம்* - அடைக்கலம்.
*அவயவம்* - உறுப்பு.
*அவயவி* - அவயவத்தை யுடையது.
*அவயோகம்* - தீமை நேர்தல்.
*அவரை* - ஒரு கொடி.
*அவரோகணம்* - இறங்குதல், திருப்பிச் சொல்லுதல்.
*அவரோகம்* - அவரோகணம்.
*அவரோதம்* - அந்தப்புரம்.
*அவர்* - உயர்திணைப் பன்மைப் பெயர், உயர்வுப் பன்மை.
*அவலச்சுவை* - சோகரசம், அழுகைச் சுவை.
*அவலட்சணம்* - அழகற்ற தன்மை.
*அவலம்* - துன்பம், அழுகை, பயன்படாதொழிதல், மாயை.
*அவலம்பித்தல்* - சார்ந்து நிற்றல்.
*அவலோகிதன்* - பௌத்த முனிவருள் ஒருவன்.
*அவல்* - நெல்லையிடித் துண்டாக்கிய சிற்றுண்டி, பள்ளம், விளைநிலம், குளம்.
*அவனிகை* - திரைச்சீலை.
*அவவு* - ஆசை.
*அவனி* - உலகம்.
*அவனிகேள்வன்* - திருமால், பூதேவி கணவன்.
*அவனிபன்* - அரசன்.
*அவா* - ஆசை.

*அவாச்சியம்* - சொல்ல இயலாதது.

*அவாந்தரம்* - இடையிலுள்ளது, உதவியின்மை, வெறுவெளி.

*அவாய்நிலை* - ஒன்றை வேண்டி நிற்கும் நிலை.

*அவாவல்* - ஆசை கொள்ளுதல்.

*அவி* - வேள்விப் பொருள், தேவருணவு.

*அவிகற்பம்* - ஐயமின்மை.

*அவிசாரி* - வியபிசாரி.

*அவிசு*-உப்பின்றிச் சமைத்த சோறு, தேவருணவு.

*அவிச்சை* - அறியாமை, மாயை.

*அவிட்டம்* - ஒரு நட்சத்திரம்.

*அவிதல்*-அணைந்து போதல், அழிதல், பாகமாதல், ஓய்தல்.

*அவித்தல்* - வேகவைத்தல், அணைத்தல், மாற்றுதல்.

*அவித்தை* - அறியாமை, மாயை.

*அவிநயம்* - அபிநயம்.

*அவிப்பலி* - தெய்வபலி, வீரர் தம்மைத் தாமே பலியாக்கிக் கொள்ளுதல்.

*அவியல்* - ஓர் உணவுப் பொருள்.

*அவிரோதம்* - விரோதமில்லாத தன்மை.

*அவிர்தல்* - பிரகாசித்தல்.

*அவிர்ப்பாகம்* - வேள்வியிடத்துக் கொடுக்கும் தேவருணவு.

*அவிவு* - அழிதல், ஒழிவு.

*அவிவேகம்* - மூடத்தனம்.

*அவிழகம்* - மலர்ந்த பூ.

*அவிழ்* - சோறு, அவிழென்னேவல், பருக்கை.

*அவிழ்தல்* - நெகிழ்தல்.

*அவிழ்தம்* - மருந்து.

*அவின்* - கசகசாச் செடியின் பால்.

*அவுணன்* - அசுரன்.

*அவுரி* - நீலிச்செடி.

*அவை* - சபை, அஃறிணைப் பன்மைச் சுட்டுப் பெயர்.

*அவைத்தல்* - குற்றுதல், நெரித்தல்.

*அவையடக்கம்* - சபையிடத்துத் தன்னைத் தாழ்த்திப் பேசுதல்.

*அவையம்* - சபை.

*அவையல்* - குற்றலரிசி.

*அவையல்கிளவி* - சபையில் கூறத்தகாத சொல்.

*அவ்வது* - அவ்வாறு.

*அவ்வயின்* - அவ்விடம்.

*அவ்வித்தல்* - பொறாமை கொள்ளுதல்.

*அவ்வியம்* - வஞ்சகம், பொறாமை.

*அவ்வை* - தாய், கிழவி, கல்வியிற் சிறந்த தமிழ் மூதாட்டி.

*அழகர்*-திருமாலிருஞ் சோலை மலைத் திருமால்.
*அழகு* - கண்டோர் விரும்பும் தன்மை.
*அழன்* - பிணம்.
*அழலவன்* - சூரியன், செவ்வாய்.
*அழலை*- தொண்டைக்கரப்பு, களைப்பு, சூடு.
*அழலோம்பல்* - ஓமம் செய்தல்.
*அழல்* - நெருப்பு, வெப்பம், விஷம்.
*அழல்தல்* - எரிதல், கோபித்தல், பொருமை கொள்ளுதல்.
*அழறு* - சேறு.
*அழற்காய்* - மிளகு.
*அழற்குட்டம்* - கார்த்திகை நாள்.
*அழற்சி* - சூடு, கொதிப்பு, அழுக்காறு, கோபம்.
*அழற்றுதல்* - சுடுதல்.
*அழனம்* - நெருப்பு.
*அழாஅல்* - அழுதல்.
*அழி* - அழியென்னேவல், கேடு, வைக்கோல், மிகுதி, இரக்கம்.
*அழிஞ்சில்* - செம்மரம்.
*அழிதகவு*- துன்பம், துக்கம்.
*அழிதலை* - தலையோடு.
*அழிதல்* - ஒழிதல், வருந்துதல்.
*அழிபாடு* - அழிவு.
*அழிபெயல்* - பெருமழை.
*அழிமதி* - கெடுபுத்தி.
*அழிம்பு* - தீச் செய்கை, புரட்டு.
*அழியல்* - மனச் சஞ்சலம்.
*அழிவழக்கு* - அக்கிரம வழக்கு.
*அழிவு* - கேடு, வறுமை, சாவு.
*அழுகல்* - பதனழிதல், பதனழிந்தது, அசுத்தம்.
*அழுகுணி* - அழும்பிள்ளை.
*அழுக்கம்* - கவலை.
*அழுக்கறுத்தல்*- பொருமை கொள்ளுதல்.
*அழுக்கன்* - உலோபி.
*அழுக்காறு* - பொருமை.
*அழுக்கு* - மாசு, மலம், பொருமை.
*அழுங்கல்* - துன்பம், இரக்கம், ஆரவாரம்.
*அழுங்கு* - ஒருவிலங்கு, பாலையாழ்த் திறவகை.
*அழுங்குதல்* - வாய்விட்டு அழுதல், ஆரவாரித்தல், தாமதித்தல்.
*அழுத்தம்*-இறுக்கம், உறுதி.
*அழுத்தல்* - பதித்தல், அழுந்தச் செய்தல்.
*அழுத்துதல்* - அழுத்தல்.
*அழுவமாரி* - பெரு மழை.
*அழுவம்* - பள்ளம், கடல், அரண், நாடு, பரப்பு, காடு, போர், போர்க்களம், முரசு, மிகுதி.
*அழைத்தல்* - கூப்பிடுதல், ஒலித்தல்.
*அள* - அளவிடு.
*அளகபாரம்*-கூந்தற் கற்றை.

*எட்டிகம்* - காஞ்சிரை, ல்.

*எட்டிப்புரவு* - வாணிகத்தால் சிறந்தவர்க்கு அரசன் கொடுக்கும் நிலம்.

*எட்டிப்பூ* - எட்டிப்பட்டம் பெற்றவர்க்கு அரசன் கொடுக்கும் பொற்பூ.

*எட்டு* - எட்டு என்னும்

*எட்டுக்காற்பூச்சி* - சிலந்திப் பூச்சி.

*எட்டுணை* - எவ்வளவு.

*எட்டுதல்* - கிட்டுதல், அகப் படுதல், புலப்படுதல், தாவிப் பாய்தல், விலகுதல், நெருங்குதல், நீளம் போதிய தாதல்.

*எட்டுத்தொகை* - சங்க காலத்துத் தொகை நூல் கள்.

*எண்* - கணக்கு, தல், ஆலோசனை, மனம், சோதிட நூல், மதிப்பு, வரையறை, தருக்கம், மந் திரம், எட்டு.

*எண்காற்புள்* - சரபப்புள், சிம்புள்.

*எண்கு* - கரடி.

*எண்குணத்தான்* - எட்டுக் யுடைய கடவுள்.

*எண்குணன்* அருகன், சிவன்.

*எண்கோவை* - காஞ்சி யென்னும் அரையணி.

*எண்சுவடி* - பெருக்கல் வாய்பாட்டு நூல், கணக்கு நூல்.

*எண்டோளன்* — சிவன்.

*எண்ணம்* — நினைவு, நாடிய பொருள், சூழ்ச்சி, கணிதம்.

*எண்ணர்* - தருக்கநூலோர், கணிதர், மந்திரிகள்.

*எண்ணலர்* - பகைவர்.

*எண்ணலளவை* - இலக்கத் தால் எண்ணும் அளவு.

*எண்ணல்* — கணக்கிடுதல், நினைத்தல்.

*எண்ணூர்* - எண்ணலர், பகைவர்.

*எண்ணிக்கை* - எண், கணக் கிடுதல்.

*எண்ணியார்* — எண்ணங் கொண்டவர்.

*எண்ணிலார்* - கணக்கற்ற வர், பகைவர்.

*எண்ணிறந்தது* - கணக் கற்றது.

*எண்ணுதல்* - நினைத்தல், ஆலோசித்தல், கணக்கிடு மதி தல்.

*எண்ணூல்* - கணித நூல்.

*எண்ணெய்* - நல்லெண் ணெய், எண்ணெய்ப் பொது.

*எண்ணெய்க்காப்பு* - எண் ணெய் முழுக்கு.

*எண்பதம்* - எளிய சமயம், தக்க காலம், புல், வரகு, சாமை, இறுங்கு, துவரை.

*எண்பேராயம்* - அரசர்க்குற்ற எட்டுத் துணைவர்.
*எண்பொருள்* - எ... அடையும் பொருள்.
*எண்மயம்* - எண்வகைச் செருக்கு.
*எண்மானம்* - எண்ணினை எழுத்தால் எழுதுதல்.
*எண்மை* - எளிமை, இலேசு.
*எதார்த்தம்* - உண்மை.
*எதி* — துறவி.
*எதிராளி* - பகைவன்.
*எதிரி* - எதிராளி.
*எதிரிடை* — சமமானது, போட்டி, பகை, எதிர்ச் செயல்.
*எதிரூன்றல்* - போருக்கு எதிர் நிற்றல்.
*எதிரேறு* - வலிமை, எதிர் கொள்ளல்.
*எதிரேற்றல்* — எதிர் கொண்டு வரவேற்றல், எதிர் நிற்றல்.
*எதிரொலி* - பிரதித் தொனி.
*எதிர்* — முன், முன்னுள்ளது, வருங்காலம், மறுமொழி, ஒப்பு, முரண், போர்.
*எதிர்காலம்* - வருங்காலம்.
*எதிர்கொள்ளுதல்* - வர

*எதிர்கோள்* - எதிர்கொள்ளு

*எதிர்செலவு* - வரவேற்க எழுந்து செல்லுதல்.
*எதிர்தல்* - முன்னே தோன்றுதல், மாறுபடுதல், எதிர்த்தல், உண்டாதல், மலர்தல், பொருந்துதல், ஏற்றுக் கொள்ளுதல்.
*எதிர்த்தல்* - தாக்குதல், சந்தித்தல், தடுத்தல்.
*எதிர்நூல்* — பிறர் கொள்கையை மறுக்கும் நூல்.
*எதிர்ந்தோர்* — பகைவர்.
*எதிர்ப்பார்த்தல்* - வரவு பார்த்தல், ஒன்றை நோக்கியிருத்தல்.
*எதிர்ப்படுதல்* - முன்னே தோன்றுதல்.
*எதிர்ப்பாடு* — சந்தித்தல்.
*எதிர்ப்பு* - திருப்பிக் கொடுப்பது.
*எதிர்மறை* - மாறுபாடு, முரண்.
*எதிர்முகம்* - முன்னிலை, மாறுபாடு.
*எதிர்மை* - எதிர்காலத்தில் நிகழ்வது.
*எதிர்மொழி* - மறுமொழி, மறுப்பு.
*எதிர்வரவு* - பிற்காலத்து வருகை.
*எதிர்வழக்கு* - பிரதி வாதம், எதிர் வியாச்சியம்.
*எதிர்வாதம்* - பிரதிவாதியின் வாதம்.
*எதிர்வினை* — எதிர்காலத்துச் செய்கை.
*எதிர்வு* - எதிர்ப்படுதல், எதிர்காலம்.

*எதுகை* - செய்யுளடிகளிலாயினும் சீர்களிலாயினும் இரண்டாமெழுத்து ஒன்றி வருவது.

*எதேச்சை* - விருப்பம் போல்.

*எத்தனம்* - முயற்சி.

*எத்தனித்தல்* - முயலுதல்.

*எத்தனை* - எவ்வளவு.

*எத்து* - வஞ்சகம், உபாயம்.

*எந்திரக்கிணறு* - நீரை நிறைத்தற்கும் வடித்தற்கும் உரிய பொறியையுடைய கிணறு.

*எந்திர நாழிகை* - ஒரு வகை நீர் வீசும் கருவி.

*எந்திரப்பொருப்பு* – பல்வகைப் பொறிகள் அமைத்த செய்குன்று.

*எந்திரம்* – சூத்திரப் பொறி, ஆலை, செக்கு, குயவன் சக்கரம், மந்திரச் சக்கரம், மதிற்பொறி, திக்கடைகோல்.

*எந்திர வாவி* - நீரை நிரப்பவும் வடிக்கவும் உரிய பொறியையுடைய நீர்நிலை.

*எந்திரவில்* - தானே எய்யும் விற்பொறி.

*எந்திரவூர்தி* - சூத்திரத்தால் தானே இயங்கும் வாகனம்.

*எந்திரி* - பாவையை ஆட்டுவோன்.

*எந்து* - என்ன, எப்படி, ஏன்.

*எந்தை* - என் தந்தை, என் தமையன், என் தலைவன்.

*எப்படி* - எவ்வாறு.

*எப்பொழுது* – எக்காலம், எப்போது, எந்த நேரம், எச்சமயம்.

*எப்போது* - எப்பொழுது.

*எப்போழ்து* - எப்பொழுது.

*எப்பொழுதும்* - எல்லாக் காலமும், எந்நேரமும்.

*எமகிங்கரன்* - எமனுடைய வேலையாள்.

*எமதருமன்* - எமன்.

*எமரங்கள்* - எம்மவர்கள், எம்முடைச் சுற்றத்தார்.

*எமர்* - எம்மவர்.

*எமன்* - எம்மைச் சேர்ந்தவன், கூற்றுவன்.

*எமி* – தனிமை, கூடியிருப்பவன்.

*எம்பரும்* - எவ்விடத்தும்.

*எம்பி* – என் தம்பி.

*எம்பிராட்டி* - எம்முடைய [illegible]

*எம்பிரான்* – எங்கள் தலைவன், கடவுள்.

*எம்பெருமான்* - எம்முடைய கடவுள்.

*எம்மனை* - எங்கள் தாய்.

*எம்மனோர்* - எங்களை யொத்தவர்.

*எம்மான்* - எங்கள் கடவுள், எங்கள் தந்தை, என் மகன்.

*எம்முன்* - எம்முடைய தமையன்.

*எம்மை* - எம்முடைய தலைவன், எப்பிறப்பு, எவ்வுலகு, [illegible]

*எயில்* - மதில், அரண், நகரம்.

*எயிறலைத்தல்* - கோபத்தால் பல்லைக் கடித்தல்.
*எயிறு* - பல், யானை பன்றிகளின் வாய்க்கொம்பு, தந்தம், பல்லின் அடிப்பாகம்.
*எயிறுதின்றல்* - சினத்தால் பற்கடித்தல்.
*எயிற்றம்பு* - அலகம்பு.
*எயிற்றி* – வேடப் பெண்.
*எயினன்* - வேடன்.
*எயின்* - வேட்டுவச் சாதி.
*எய்*-முள்ளம்பன்றி, துன்பம், அம்பு, ஓர் உவமவுருவு.
*எய்த* - நிரம்ப, நன்றாக.
*எய்தல்* - அம்பைச் செலுத்தல்.
*எய்துதல்* - அணுகுதல், அடைதல், நீங்குதல், பணிதல், உண்டாதல், போதியதாதல்.
*எய்த்தல்* - இளைத்தல், உடல் வருந்துதல், சோம்புதல், குறைவடைதல், அறிதல்.
*எய்ப்பன்றி*- முள்ளம்பன்றி.
*எய்ப்பினில்வைப்பு* - முதுமைக் காலத்தில் பயன்படுதற்கெனச் சேமித்து வைக்கும் பொருள்.
*எய்ப்பு*- இளைப்பு, வறுமைக் காலம்.
*எய்ப்போத்து* - ஆண் முள்ளம் பன்றி.
*எய்யாமை* .– அறியாமை. வருந்தாமை, இளையாமை.
*எரி* - நெருப்பு, அக்கினித்தேவன், ஒளி, நரகம், புனர்பூசம், கார்த்திகை, கேட்டை, கந்தகம், இடபராசி.
*எரிகதிர்* - சூரியன்.
*எரிகரும்பு* - விறகு.
*எரிகாசு* - காசுக்கட்டி.
*எரிகொள்ளி* - கடைக்கொள்ளி.
*எரிசுடர்* - எரியும் நெருப்பு, மிக்க ஒளி.
*எரிச்சல்* - எரிவு,பொறாமை, கோபம், அழற்சி.
*எரிதல்* - சுவாலை யுண்டாதல், பிரகாசித்தல், கோபித்தல், துயரமடைதல், மூதிர்தல்.
*எரிதூவுதல்* – தீப்பற்றுதல்.
*எரித்தல்* - தீயில் வேகச் செய்தல், அழற்றுதல், சீரணிக்கச் செய்தல், விளக்கை எரியச் செய்தல்.
*எரிநகை* - வெட்சிமலர்.
*எரிநாள்* - கார்த்திகை.
*எரிபந்தம்* – தீவர்த்தி.
*எரிபொத்துதல்* – நெருப்பு மூட்டுதல்.
*எரிப்பு* - எரிக்கை, கார்ப்புச் சுவை, பொறாமை.
*எரிமலர்* – செம்முருக்கமலர், செந்தாமரை.
*எரிமுகி* - செங்கொட்டை.
*எரியல்* - எரிகை, ஒளிவிடுதல்
*எரியூட்டுதல்* - நெருப்பு மூட்டுதல்.

*எரியோம்புதல்* - ஓமம் செய்தல்.
*எரியோன்* - அக்கினித் தேவன்.
*எரிவந்தம்* - எரிச்சல், கோபம், நோய்.
*எரிவனம்* - சுடுகாடு.
*எரிவிழித்தல்* - கோபித்து நோக்குதல்.
*எரிவிளக்குறுத்தல்* — குற்றவாளியின் தலையின்மேல் எரியும் விளக்கை வைத்து நகரைச் சுற்றிவரச் செய்யும் தண்டனை.
*எரிவு* - எரிச்சல், எரிதல், பொறாமை, கோபம், காய்ச்சல் நோய்.
*எரு* - உரம், மலம், சாணம்.
*எருக்கு* - எருக்கஞ்செடி, அடி.
*எருக்குதல்* — வருத்துதல், கொலலுதல், அடித்தல், வெட்டுதல், சுமத்தல், அழித்தல், தாக்கி ஒலியெழச் செய்தல்.
*எருக்குரல்* — தட்டுதலால் ஏற்படும் ஒலி.
*எருது* - மாடு, இடப ராசி.
*எருத்தடி* - ஏற்றயலடி.
*எருத்தம்* — கழுத்து, தோள், பிடர், ஏற்றயல்.
*எருத்தன்* — காளைபோன்ற வலிமையுடையவன்.
*எருத்து* - கழுத்து, ஏற்றயல்.
*எருந்தி* - இப்பி, கிளிஞ்சில்.
*எருந்து* - எருந்தி.
*எருமணம்* — செங்குவளை.
*எருமன்றம்* — மாடுகள் கூடுமிடம்.
*எருமுட்டை* - வறட்டி.
*எருமை* - எருமை மாடு.
*எருமைமறம்* - பிறர் உதவியின்றிப் பகைவரை நவன் தான் எதிர்த்து நிற்கும் புறத்
*எருமையூர்தி* - எமன்.
*எருவை* - தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும் பருந்து, கழுகு, செம்பு, பஞ்சாய்க்கோரை, கோரைக்கிழங்கு, கொறுக்காந்தட்டை.
*எலா* - நண்பரை விளிக்கும் ஒரு விளிச்சொல்.
*எலி* — ஒரு சிறு நாற்காற்பிராணி, கள், கள்ளி.
*எலிச்செவி* - ஒருவகைச் செடி.
*எலிப்பகை* - பூனை.
*எலியாலங்காய்* - காட்டாமணக்கு விதை.
*எலியோடி* - நடுமுகட்டிலே வைக்கும் உருட்டுமரம்.
*எலு* - கரடி, பிஞ்சு.
*எலுமிச்சை* - ஒரு மரம்.
*எலும்புருக்கி* - ஒருவகை நோய்.
*எலுவல்* - தோழன்.
*எலுவன்* - தோழன்.
*எலுவை* - தோழி.
*எல்* - ஒளி, சூரியன், வெயில், பகல், நாள், இரவு, பெருமை, இகழ் மொழி.

*எல்லம்* - _ _
*எல்லரி* - ஒருவகைப் பறை.
*எல்லவன்* - சூரியன்.
*எல்லா* - தோழியைக் குறிக்கும் முன்னிலைப் பெயர், விளிப்பெயர்.
*எல்லாம்* - முழுவதும்.
*எல்லாரும்* - யாவரும்.
*எல்லார்* - தேவர்.
*எல்லி* - பகல், இரவு, இருள்.
*எல்லிநாதன்* - சந்திரன்.
*எல்லிமனை* - தாமரை.
*எல்லியறிவன்* - சேவல்.
*எல்லிருள்* - விடியற்காலத்து இருள்.
*எல்லீரும்* - எல்லா நீங்களும்.
*எல்லெண்* - பன்னிரண்டு.
*எல்லே* - தோழியை விளிக்கும் சொல், வெளியே.
*எல்லேமும்* - எல்லா நாங்களும்.
*எல்லை* - வரப்பு, பொழுது, இடம், கூப்பிடு தூரம், அளவை, சூரியன், முடிவு, ]டம்.
*எல்லைகட்டுதல்* - வரையறுத்தல்.
*எல்லோன்* - சூரியன்.
*எல்வளி* - பெருங்காற்று.
*எவண்* - எவ்விடம்.
*எவர்* - யார்.
*எவன்* - யாவன், என்ன, யாது.
*எவ்வது* - எவ்வாறு.
*எவ்வம்* - துன்பம், இழிவு, குற்றம், கபடம், வெறுப்பு.
*எவ்வுதல்* - தாவுதல், உயர்தல்.
*எழல்* - தோன்றுதல், புறப்படுதல், உதித்தல், கிளர்ச்சி.
*எழாநிலை* - யானை கட்டும் கூடம்.
*எழார்* - வல்லூறு, யாழ்சை, மக்கள் மிடற்றிசை.
*எழிலி* - மேகம்.
*எழிலிய* - அழகுபொருந்திய.
*எழில்* - அழகு, இளமை, உயர்ச்சி, வலிமை.
*எழினி* - இருதிரை, உறை, கடையெழு வள்ளல்களுள் ஒருவன்.
*எழு* - படைக்கல வகை, தூண், கணையமரம், கதவைத் திறக்க இயலாது தடுக்கும் குறுக்குமரம்.
*எழுகூற்றிருக்கை* - பாடல் வகை.
*எழுச்சி* - புறப்பாடு, எழுதல், பள்ளியெழுச்சிப் பாட்டு, முயற்சி, தொடக்கம்.
*எழுதகம்* - சித்திர வேலை.
*எழுதல்* - எழுந்திருத்தல், மேல் எழும்புதல், புறப்படுதல், தோன்றுதல், மிகுதல், மனங்கிளர்தல், பரவுதல், தொடங்குதல், வளர்தல், எழுதுதல்.
*எழுதாக்கிளவி* - வேதம்.
*எழுதுதல்* - வரைதல், இயற்றுதல், விதியேற்படுத்துதல், பாவை முதலியன நிருமித்தல், பதிதல்.

*எழுதுகோல்* - வரையும் கோல்.
*எழுத்தாணி* - ஓலையில் எழுதும் கருவி, ஒருவகைப் பூண்டு.
*எழுத்தாளன்* - எழுதுவோன், புலவன்.
*எழுத்தானந்தம்* – செய்யுட் குற்றங்களுள் ஒன்று.
*எழுத்தியல்* - எழுத்திலக்கணம் கூறும் நூற் பிரிவு.
*எழுத்தின்கிழத்தி* - சரசுவதி.
*எழுத்து* – அக்கரம், இலக்கணம், கல்வி, கையெழுத்து, ஆதாரச் சீட்டு, கடிதம், மந்திரம்.
*எழுத்தூசி* - எழுத்தாணி.
*எழுநரகம்* - ஏழுவகை நரக லோகம்.
*எழுநா* - நெருப்பு, கொடி.
*எழுநிலைமாடம்* - ஏழடுக்கு மாளிகை.
*எழுந்தருளல்* - வருதல், புறப்படுதல்.
*எழுபவம்* - ஏழுவகைப்
*எழுபிறப்பு* - மேல் வரும் பிறப்பு, ஏழுவகைப் பிறப்பு.
*எழுபோது* - உதயகாலம்.
*எழுப்பம்* – எழுதல்.
*எழுப்பல்* – எழச்செய்தல்.
*எழுமதம்* - நூலாசிரியர்க்குரிய எழுவகைக் கொள்கை, யானை மதம்.
*எழுமலை* - உதயகிரி.
*எழுமீன்*-சப்தரிஷிமண்டலம்.
*எழுமுடி* – ஏழு அரசர் முடியால் செய்த சேரன் மாலை.
*எழுமுரசு* - அரசன் பிரயாணத்தை அறிவிக்கும் முரசு.
*எழுமை* - ஏழு பிறப்பு, உயர்ச்சி, ஏழுவகை.
*எழுவாய்* - உற்பத்தி, முதல், கருத்தா, முதல் வேற்றுமை.
*எழுவான்* - கிழக்குத் திசை.
*எழுவுதல்* - எழச்செய்தல், ஓசையுண்டாக்கல்.
*எளிஞர்* - எளியவர்.
*எளிதரவு* - தாழ்மை, வறுமை.
*எளிதல்* - எளிமையடைதல்.
*எளிதாதல்* - இலகுவாதல்.
*எளிது* - இலகு, தாழ்ந்தது.
*எளித்தல்* - தாழ்த்திக் கூறு
*எளிமை* - வறுமை, இலகு, தாழ்வு, வலியின்மை, தளர்வு.
*எளியன்* - வறியன், இலகுவாய் அடையப்படுபவன், வலியில்லாதவன், அறிவில்லாதவன்.
*எளிவருதல்* - இலகுவாதல் எளிதில் கிடைத்தல், இழிவடைதல்
*எளிவு* - சுலபம்.
*எள்* - ஒரு வகைச் செடி, ஒரு சிறிய அளவு, இகழ்.
*எள்குதல்* - இகழ்தல், அஞ்சுதல், எய்த்தல், வருந்துதல், கூசுதல்.

எள்ளல் — இகழ்தல்.
எள்ளு - எள், இகழ்.
எள்ளுதல் — இகழ்தல், ஒப்பாதல், கூசுதல், அஞ்சுதல்.
எள்ளுநர் - இகழுபவர்.
எள்ளுரை - இகழ்ச்சியுரை.
எறி - வீசு, அடி.
எறிதல் - வீசியடித்தல், வெட்டுதல், முறித்தல், அறுத்தல், அழித்தல், ஓட்டுதல், வெல்லுதல், வீசுதல்,
எறித்தல் - ஒளிவீசுதல், தைத்தல், பரத்தல், உறைத்தல்.
எறிபடை — கைவிடுபடை, வேல்.
எறிபுலம் - வெட்டிச்சுட்ட கொல்லை.
எறிப்பு — கடுவெயில், பிரகாசம்.
எறிமணி - சேகண்டி, சேமகலம்.
எறியால் - மீன்வகை.
எறும்பி - யானை.
எறும்பு - ஒருவகைப் பூச்சி.
எறுழம் - தண்டாயுதம், தூண், வலிமை.
எறுழி - காட்டுப் பன்றி.
எறுழ் - வலிமை, தூண், மரவகை, தண்டாயுதம்.
எறுழ்வலி-மிகுந்த வலிமை, வீரம்.
எற்பாடு - காலை, பிற்பகல்.
எற்பு - எலும்பு.
எற்புச்சட்டகம் - உடல்.
எற்றம் - மனத்துணிவு.
எற்றித்தல் - இரங்குதல்.
எற்று - எத்தன்மையது, அதிசய இரக்கக் குறிப்புச் சொல்.
எற்றுதல் - உதைத்தல், அடித்தல், மோதுதல், வெட்டுதல், நீக்குதல், எழுப்புதல், இரங்குதல்,
எற்றுநூல் - மரமறுக்க அடையாளம் காட்டும் நூல்.
எற்றைக்கும் - என்றென்றைக்கும்.
என - என்று.
எனவ - என்னுடையவை.
எனு - என்று.
எனின் - என்றால்.
எனை - என்ன, எவ்வளவு.
எனைத்து - எவ்வளவு, எத்தன்மையது
எனைத்துணை - எவ்வளவு.
எனைத்தும் - சிறிதும், எவ்வளவும், முழுதும்.
எனைப்பல - எத்தனையோ பல.
எனையவர் - யாவர், எத்தனை பேர்.
என் - என்ன, யாது.
என்கை — சொல்லுகை.
என்ப - என்று சொல்லுவர், என்று சொன்னார், ஓர் அசைச் சொல்.
என்பிலி - எலும்பில்லாத உடம்பு, புழு.
என்பு - எலும்பு, உடம்பு.

*என்மர்*-என்று சொல்லுவர்.
*என்மனோர்* - என்மர்.
*என்றாலும்* - எனினும், ஆயினும்.
*என்று* — என்றைக்கு, என்று சொல்லி.
*என்றும்* - என்றைக்கும்.
*என்றூழ்* - வெயில், கோடைக் காலம், சூரியன்.
*என்ன* - யாது, ஓர் உவம உருபு.
*என்னணம்* — எப்படி.
*என்னர்* - யாவர், சிறிதும்.
*என்னாதி* - என்று சொல்லாதே, என்ன செய்யக் கடவாய், எவ்வாறு வாழ்கின்றாய்.
*என்னும்* - சிறிதும், யாவும்.
*என்னே*-என்ன, ஓர் அதிசய இரக்கக் குறிப்புச் சொல்.
*என்னை* - என் தலைவன், என் தந்தை, என் தாய், யாது.
*என்னோ* - என்னவோ.
*என்னோரும்* - எத்தன்மையோரும், எல்லோரும்.

**ஏ** - ஓர் எழுத்து, அம்பு, பெருக்கம், இறுமாப்பு, மேல் நோக்குதல், எய்யும் தொழில், ஒரு விளிக்குறிப்பு, ஓர் இகழ்ச்சிக் குறிப்பு, இரக்கக் குறிப்பு.
*ஏஎ* - இரக்கக் குறிப்பு, சாமவேதம்.
*ஏககுண்டலன்* - பலராமன்.
*ஏகசக்கராதிபதி* - தனி ஆணை செலுத்தும் அரசன்.
*ஏகதண்டி* - ஒற்றைக் கோல் தரிக்கும் சந்நியாசி.
*ஏகதந்தன்* - விநாயகர்.
*ஏகதேசம்* - ஒருபுடை, சிறுபான்மை, அருமை, நிந்தை.
*ஏகத்துவம்* — ஒன்றாக இருக்கும் தன்மை.
*ஏகபாதம்* - ஒரு வகைச் சித்திரகவி, ஒற்றைக்காற் பிராணி.
*ஏகபாவம்*-ஒத்த எண்ணம்.
*ஏகபிங்கலன்* - குபேரன்.
*ஏகபோகம்* - தனக்கேயுரிய அனுபோகம், ஒருபோகம்.
*ஏகம்* - ஒன்று, ஒப்பற்றது, வீடு, மொத்தம், தனிமை, திப்பிலி,எட்டு அக்குரோணி கொண்ட சேனை, மிகுதி.
*ஏகம்பம்* - காஞ்சி நகரிலுள்ள சிவன்கோயில்.
*ஏகராசி* - அமாவாசை.
*ஏகல்* - போதல், கடத்தல்.
*ஏகவசனம்*-ஒருமைச்சொல்.
*ஏகவடம்* - ஓர் அணிகலன்.
*ஏகவல்லி* - ஏகவடம்.
*ஏகவாணை* - தனியரசு.
*ஏகவாரம்* - ஏகவடம்.
*ஏகவேணி* - மூதேவி.
*ஏகன்* - ஒருவன், கடவுள்.
*ஏகாங்கி* - குடும்பமில்லாதவன், சந்நியாசி, திருமால் அடியாருள் ஒரு வகையார்.
*ஏகாசம்* — மேலாடை.
*ஏகாட்சி* - ஒற்றைக் கண்ணன், காகம்.
*ஏகாண்டம்* - முழுப் பங்கு, முழுதும்.

*ஏகாதிபத்தியம்*–தனியரசு.
*ஏகாந்தம்* - தனிமை, இரகசியம், தனியிடம், நாடிய ஒரே பொருள்.
*ஏகாலி* - வண்ணான்.
*ஏகாவலி* - ஒற்றை வடம்.
*ஏகி* – தனியன், கைம்பெண்.
*ஏகுதல்* - போதல், கடத்தல்.
*ஏகை* - உமை, வயிரக் குற்றங்களுள் ஒன்று.
*ஏகோபித்தல்* - ஒன்றுபடுதல்.
*ஏக்கம்* - துக்கம், கவலை.
*ஏக்கழுத்தம்* - இறுமாப்பு, தலையெடுப்பு, வீற்றிருக்கை.
*ஏக்கறவு* - இச்சை, எக்கறுதல்.
*ஏக்கறுதல்* - ஆசையால் தாழ்தல், விரும்பி நிற்றல், இளைத்து இடைதல்.
*ஏக்கெறிதல்*- அச்சமுறுதல், கவலை யொழிதல்.
*ஏக்கை* - இக
*ஏங்கல்* - கவலைப்படல், அழுகை, மயிலின் குரல், ஆரவாரிக்கை, யாழ் நரம்பின் ஓசை.
*ஏங்குதல்* - மனம் வருந்துதல், ஒலித்தல், இளைத்தல், அழுதல், அஞ்சுதல்.
*ஏசம்* – வெண்கலம்.
*ஏசல்*-இகழ்தல், பழிச்சொல் ஒருவரை யொருவர் பரிகாசம் செய்துகொள்ளும் பாட்டுவகை.
*ஏசறவு* - துக்கம், விருப்பம், தோத்திரம், நாணம்.
*ஏசறுதல்* – வருந்துதல், பழித்தல், ஆசைகொள்ளுதல்.
*ஏசி* – இளி.
*ஏசு* - இகழ், குற்றம்.
*ஏசுதல்* – பழித்தல்.
*ஏச்சு* - இகழ்ச்சி, பழிப்பு.
*ஏட* - தோழனை விளித்தல் மொழி.
*ஏடகணி* – ஓலையீர்க்கு.
*ஏடகம்* - தெங்கு, பனை, பூ, ஒருவகைத் துகில்.
*ஏடணை* - ஆசை.
*ஏடல்* - கருத்து.
*ஏடன்* – தொழும்பன், நண்பன்.
*ஏடா* - தாழ்ந்தவரை விளிக்கும் சொல்.
*ஏடாகூடம்* - தாறுமாறு.
*ஏடி* – பெண்பாலாரை விளிக்கும் சொல்.
*ஏடு* – பூவிதழ், ஓலை, கண்ணிமை, புத்தகவிதழ், பாலாடை, உடல், மேன்மை, குற்றம்.
*ஏடுகோளாளன்*-கணக்கன்.
*ஏடை* - ஆசை.
*ஏட்சி* - உதயம், திடம்.
*ஏட்டுச்சுரைக்காய்* – உலக அனுபவம் அற்ற கல்வி.
*ஏட்டை* – வறுமை, துன்பம், இளைப்பு.
*ஏணம்* - மான், நிலை பேறு.

*ஏணி* – ஏறுதற்குரிய கருவி, அடுக்கு, எல்லை, பாசறை, மான்கன்று, நாடு, எண்.
*ஏணை* - நீலை, புடைவைத் தொட்டில்.
*ஏண்* - எல்லை, திண்மை, பெருமை, பெருமைப் பேச்சு.
*ஏதண்டை* - நீர்த்துறையில் கட்டிய பரண், பலகைத் தூக்கு.
*ஏதப்பாடு* – குற்றம்.
*ஏதம்* - குற்றம், கேடு, நோய், துன்பம்.
*ஏதவன்* - பகைவன்.
*ஏதன்*-மூலகாரணன்,கடவுள்
*ஏதி* - வாட்படை, ஆயுதப் பொது, துண்டம்.
*ஏதிலார்* - அன்னியர், பகைவர், பரத்தையர், வறியோர்.
*ஏதின்மை* - அன்னியம், பகைமை, முன்னறியாமை.
*ஏதீடு* - தலைவி தலைவன் செய்த நன்மைகளைக் கூறும் புறத்துறை.
*ஏது* - காரணம், யாது.
*ஏதும்* - சிறிதும்.
*ஏதை* - பேதை.
*ஏத்து* - புகழ், ஆழமின்மை
*ஏத்துதல்*-துதித்தல், வாழ்த்துதல்.
*ஏந்தல்* - கையேந்துதல், தாங்குதல், ஆழமின்மை, தேக்கம், அழகின்மை, உயர்ச்சி, பெருமை, சிறந்தோன், அரசன், வாத நோய்.

*ஏந்திசை* - செய்யுளோசை வகை.
*ஏந்திரம்* - திரிகை, கரும்பாலை, பொறி.
*ஏந்திலை* - வேல்.
*ஏந்திழை* - அழகிய ஆபரணம், பெண்.
*ஏந்துதல்* - கை நீட்டல், தாங்குதல், பூணுதல், சுமத்தல், மிகுதல், சிறத்தல்.
*ஏந்தெழில்* - மிக்க அழகு.
*ஏப்பம்* - தேக்கெறிவு, ஏப்பமிடல்.
*ஏப்பாடு* - அம்பு வீழும் எல்லை.
*ஏப்புழை* - அம்பெய்வதற்காக மதிலில் அமைக்கப் பட்ட துவாரம்.
*ஏமகூடம்* - எட்டு மலைகளுள்

*ஏமந்தம்* - பனி.
*ஏமந்தருது* - முன்பனிப் பருவம்.
*ஏமம்* - பாதுகாவல், இன்பம், களிப்பு, மயக்கம், உன்மத்தம், திருநீறு, சேமநிதி, இடுதிரை, இரா, பொன்.
*ஏமருதல்* - களிப்புறுதல், காக்கப்படுதல்
*ஏமவதி* - கடுக்காய்.
*ஏமன்* - யமன்.
*ஏமாத்தல்* - ஆசைப்படுதல், பாதுகாவலாதல், இன்புறுதல்,செருக்கடைதல்,கலக்கமடைதல், நிச்சயித்தல்.
*ஏமாப்பு* - பாதுகாப்பு, வலியுறுதல், இறுமாப்பு.

*ஏமார்த்தல்* - பலப்படுதல், காப்புச் செய்தல்.
*ஏமாறுதல்* - மனங்கலங்குதல், மோசம் போதல்.
*ஏமாற்றம்* - வஞ்சகம், மனக்கலக்கம், வஞ்சகத்துக்குள்ளாதல்.
*ஏமுறுதல்* - மகிழ்வுறுதல், வருந்துதல், தன்மை திரிதல், இறுமாப் படைதல், பயித்தியமடைதல், மயக்கமுறுதல்,பொருத்தமுறுதல், பாதக மடைதல்.
*ஏம்* - இன்பம், பாதுகாப்பு, மயக்கம்.
*ஏம்பல்* - ஆரவாரம், வருத்தம், அவா, களிப்பு.
*ஏம்புதல்* - வருந்துதல், களித்தல்.
*ஏயம்* - தள்ளத்தக்கது.
*ஏயர்* - ஏயவம்சத்தவர்.
*ஏயான்* - தொழில் செய்யத் தகாதவன்,
*ஏயில்* - இசை.
*ஏஏ* - பரிகாசக் குறிப்பு.
*ஏய்தல்* - பொருந்துதல், ஒத்தல், எதிர்ப்படுதல், அடைதல், தகுதல்.
*ஏய்த்தல்* - பொருந்தச் சொல்லுதல், ஒத்தல், வஞ்சித்தல், தழுவல்.
*ஏய்ப்பு* - வஞ்சகம், ஒப்பு.
*ஏய்த* - உவமை
*ஏரடித்தல்* - உழுதல்.
*ஏரணம்* - தருக்கநூல்.
*ஏரண்டம்* - ஆமணக்கு, தலைப் புள்.
*ஏரம்பம்* - ஒரு கணித நூல்.
*ஏரம்பன்* - விநாயகர்.
*ஏரல்* - கிளிஞ்சில், நத்தை.
*ஏரா* - கப்பலின் அடி, பொருத்துமரம்.
*ஏராண்மை* - உழவுத் தொழில்.
*ஏராளம்* -
*ஏராளர்* - உழவர்.
*ஏரி*-நீர்நிலை, எருத்துத் திமில்.
*ஏரோர்* - உழவர்.
*ஏர்* - கலப்பை, உழவு மாடு, உழவு, அழகு, எழுச்சி, நன்மை, ஒப்பு.
*ஏர்க்களம்* - நெற்களம்.
*ஏர்க்கால்* - கலப்பையின் ஒரு பகுதி.
*ஏர்ச்சீர்* - உழவுத்தொழிலுக்குரிய கருவிகள்.
*ஏர்பு* - எழுச்சி.
*ஏர்மங்கலம்* - பொன்னேர் பூட்டிப் பாடும் மங்கலப் பாட்டு.
*ஏல* - முன்னமே, பொருந்த.
*ஏலக்காய்* - ஏலச்செடியின் காய்.
*ஏலப்பாட்டு* - தோணிப் பாட்டு, மணப்பாடலில் ஒரு வகை.
*ஏலம்* - செடிவகை, ஒரு வாசனைப் பொருள், மயிர்ச் சாந்து, விலை கூறுதல்.
*ஏலரிசி* - ஏலக்காய் விதை.
*ஏலா* - தோழரை முன்னிலைப் படுத்தும் சொல்.
*ஏலாமை* - இயலாமை, பொருந்தாமை.

*ஏலி* - கள்.
*ஏல்* - யாசி, பொருத்தம், மன வெழுச்சி, ஒரு விகுதி.
*ஏல்வை* - நாள், பொழுது.
*ஏவதும்*-எதுவும், ஒவ்வோன்றும்.
*ஏவம்* - குற்றம், இகழ்ச்சி.
*ஏவல்* - கட்டளையிடுதல், பணி, பணியாள், தூண்டுதல், வறுமை.
*ஏவறை* - ஏப்பம், மதில் மேலுள்ள அம்பெய்தற்குரிய துவாரம்.
*ஏவன்* - யாவன்.
*ஏவு* - கட்டளையிடு, அம்பு.
*ஏவுண்ணுதல்* - அம்பு பாயப் பெறுதல்.
*ஏவுதல்* - கட்டளையிடுதல், செலுத்துதல், தூண்டுதல்.
*ஏவை* - நாள், பொழுது, நீர்

*ஏழகம்* - செம்மறி யாட்டுக் கடா.
*ஏழிசை* - ஏழ்வகைச் சுரம் (குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் ஆகியவை).
*ஏழிலைக்கிழங்கு* - மரவள்ளி.
*ஏழில்* - இசை, ஏழிலைப்பாலை, ஒரு மலை.
*ஏழை* - வறியவன், அறிவில்லாதவன்.
*ஏழைமை* - வறுமை, அறியாமை.
*ஏழ்* - ஏழு.
*ஏழ்மை* - வறுமை, ஏழு.
*ஏளனம்* – இகழ்ச்சி.
*ஏளினம்* - ஏளனம்.
*ஏற* - அதிகமாக, முழுவதும், முற்பட, உயர.
*ஏறக் கட்டுதல்* - சரிக்கட்டுதல், குவித்துச் சேர்த்தல், நிலை நாட்டல்.
*ஏறக்குறைய* - முன்பின், ஓரளவு ஒத்த.
*ஏறங்கோள்* - ஏறுகோட் பறை.
*ஏறடுதல்* - மேற்கொள்ளுதல், மேல் வைத்தல்.
*ஏறப்போதல்* - குறித்துப் போதல்.
*ஏறவாங்குதல்* - முழுதும் விலைக்குப் பெறுதல், நயமாக வாங்குதல், விலகியிருத்தல்.
*ஏறாண்முல்லை* - வீரக்குடியின் ஒழுக்கத்தைப் புகழும் புறத்துறை.
*ஏறுவழக்கு* - அடாவழக்கு.
*ஏறுவேணி* - கோக்காலி.
*ஏறிடுதல்* - உயர்த்துதல், நாணேற்றுதல், ஏறியிருத்தல்.
*ஏறிட்டுப்பார்த்தல்* - நிமிர்ந்து பார்த்தல்.
*ஏறு* - எருது, உயரம், நந்திதேவர், இடபராசி, விலங்குகளின் ஆண், சிங்கம், இடி, எறிகை, அடிக்கை, அழிக்கை, தழும்பு.
*ஏறுகடை* - முடிவு.
*ஏறுகோட்பறை*-ஏறு தழுவுதற்குரிய முல்லை நிலப்பறை.
*ஏறுகோள்* - ஏறுதழுவுதல்.

*ஏறுதல்* - இவர்தல், உயர்தல், மேலே செல்லுதல், மிகுதல், முற்றுப் பெறுதல், ஆவேசித்தல், வளர்தல், உட்செல்லுதல், மோதுதல்.
*ஏறு தழுவுதல்* - கட்டாத எருதைத் தழுவிப்பிடித்தல்.
*ஏறுபொழுது* - முற்பகல்.
*ஏறுமாறு* - தாறுமாறு.
*ஏறுமுகம்* - வளரும்
*ஏறெடுத்தல்* - நிமிர்தல்.
*ஏற்க* - பொருந்த.
*ஏற்கெனவே* - முன்னமே.
*ஏற்கை* - வாங்குதல், அங்கிகரித்தல்.
*ஏற்ப* - பொருந்த.
*ஏற்படுதல்* - உண்டாதல், தலைப்படுதல்.
*ஏற்படுத்துதல்* - உண்டு பண்ணுதல், இணங்கச் செய்தல்.
*ஏற்பது* - பிச்சையெடுப்பது.
*ஏற்பாடு* - ஒழுங்கு, உடன்படிக்கை, நியமனம்.
*ஏற்பு* - பிச்சையெடுத்தல், பொருத்தம்.
*ஏற்புழி* - ஏற்குமிடத்து.
*ஏற்போன்* - யாசிப்பவன்.
*ஏற்றுக்கால்* - துலாவைத் தாங்கும் கால்.
*ஏற்றணை* - சிங்காசனம்.
*ஏற்றம்* - உயர்வு, மேடு, நீர்ப்பெருக்கு, அதிகப்படி, மேன்மை, நீரிறைக்கும் கருவி, துணிவு, புகழ்.
*ஏற்றரவு* - முதல், மிகக் கிட்டின காலம்.
*ஏற்றிழிவு* - பெருமைசிறுமை, மேடு பள்ளம்.
*ஏற்றுக் கொள்ளல்* - அங்கீகரித்தல்.
*ஏற்றுதல்* - உயர்த்துதல், சுமத்துதல், ஏறச்செய்தல், அடுக்குதல், துணிதல்.
*ஏற்றுத் தொழில்* - பாகர் தொழில்.
*ஏற்றுப்பனை* - ஆண்பனை.
*ஏற்றுமதி* - வெளிநாடுகட்குச் சரக்கை அனுப்புதல், வெளிநாட்டுக்கு அனுப்பும் சரக்கு.
*ஏற்றூண்* - பிச்சையுணவு
*ஏற்றெழுதல்* - மயக்கம் தீர்தல், துயிலினின்றெழுதல், சோம்பல் விட்டெழுதல்.
*ஏற்றை* - விலங்கின் ஆண்.
*ஏன* - பிற.
*ஏனப் படம்* - பன்றிமுகக் கேடகம்.
*ஏனம்* - பாத்திரம், பன்றி, ஓலைக்கலம்.
*ஏனல்* - தினை, கருந்தினை, தினைப்புனம், தினைக்கதிர்.
*ஏனாதி* - படைத் தலைவன், மறவன், நாவிதன்.
*ஏனும்* - என்றாலும்.
*ஏனென்னுதல்* - ஆபத்துதவ முற்படுதல்.
*ஏனை* - மற்றை.
*ஏன்* - பன்றி.
*ஏன்றுகொள்ளல்* - ஏற்றுக் கொள்ளல், வினைச்சொல்.
*ஏன்றுகோள்* - ஆதரித்தல்.

**ஐ**-வியப்பு, அழகு, மேன்மை, கோழை, நுண்மை, தலைவன், கபவியாதி, கணவன், தமையன், பிதா, அரசன், குரு, கடவுள், ஐந்து, ஐயம், ஓர் உருபு, ஓர் அசை.

*ஐக்கியம்* - ஒற்றுமை.

*ஐங்கணை* - மன்மதனுடைய ஐந்து அம்புகள் (மல்லிகை, முல்லை, அசோகு, முழுநீலம், சண்பகம் ஆகியவை).

*ஐங்கணைக் கிழவன்* - மன்மதன்.

*ஐங்கரன்* - விநாயகர்.

*ஐங்குரவர்* - மதிப்பிற்குரிய ஐவர் (அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை, தமையன் ஆகியோர்).

*ஐங்குறுநூறு* - எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று.

*ஐசுவரியம்* - செல்வம், ஈசுவரத் தன்மை.

*ஐஞ்ஞூறு* - ஐந்நூறு.

*ஐதிகம்* - கேள்வி வழக்கு.

*ஐது* - அழகானது, மெல்லியது, வியப்புடையது, நுண்ணியது, செறிவில்லாதது.

*ஐந்தரு* - தேவலோகத்து ஐந்து மரங்கள் (மந்தாரம், பாரிசாதம், அரிசந்தனம், சந்தானம், கற்பகம் ஆகியவை).

*ஐந்தவத்தை* - ஐந்து வகை நிலை (சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் ஆகியவை).

*ஐந்தவித்தல்* - ஐந்து பொறிகளையும் அடக்குதல்.

*ஐந்தார்* - பனை.

*ஐந்திணை* - ஐவகை நிலம் (குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகியவை).

*ஐந்திரம்* - வடமொழியிலக்கண நூல்களுள் ஒன்று,

*ஐந்து* - ஐந்தென்னும் எண்.

*ஐந்துகில் போர்ப்போர்* - பௌத்தர்.

*ஐந்தெழுத்து* - பஞ்சாக்கர மந்திரம்.

*ஐந்தை* - கடுகு.

*ஐந்தொகை*- வரவு, செலவு, இருப்பு, விழுமுதல், ஆதாயம் இவற்றின் விவரமடங்கிய கணக்கு.

*ஐப்பசி* - ஏழாம் மாதம்.

*ஐமிச்சம்* - சந்தேகம், அச்சம்.

*ஐம்படை* - பஞ்சாயுதம் (சங்கு, சக்கரம், கதை, வாள், வில் முதலிய விஷ்ணுவுக்குரிய ஆயுதங்கள்).

*ஐம்படைத் தாலி* – சிறுவர் அணிதற்குரிய பஞ்சாயுத

*ஐம்பால்* - ஐந்து பால்கள் (ஆண், பெண், பலர், ஒன்று, பல ஆகியவை), ஐந்துவகையாக முடிக்கப்படும் மகளிர் கூந்தல்,

*ஐம்புலம்* - ஐந்து பொறிகளுக்குரிய உணர்ச்சிகள் அல்

லது விஷயங்கள் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்).

***ஐம்பெருங்குழு*** - ஐந்து வகைப்பட்ட கூட்டத்தார் (மந்திரியர், புரோகிதர், சேனாபதியர், தூதர், சாரணர் என்போர்).

***ஐம்பொறி*** - ஐந்து வகை இந்திரியங்கள் (மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவை).

***ஐம்பொன்*** - ஐந்துவகை முக்கிய உலோகங்கள் (பொன், வெள்ளி, ஈயம், செம்பு, இரும்பு ஆகியவை).

***ஐம்முகன்*** - சிவன்.

***ஐம்மை*** - தகட்டு வடிவம், நொய்ம்மை.

***ஐய*** - அழகிய, வியக்கத்தக்க, நுண்ணிய, அதிசயக் குறிப்பு, இரக்கக் குறிப்பு, ஒரு விளிச் சொல்.

***ஐயகோ*** - துக்கக் குறிப்பு.

***ஐயக்கடிஞை*** - பிச்சைப்பாத்திரம்.

***ஐயங்கவீனம்*** - வெண்ணெய்.

***ஐயஞ்சு*** - நிலப்பனை.

***ஐயப்பாடு*** - சந்தேகம்.

***ஐயம்*** - பிச்சை, சந்தேகம், சிறுபொழுது.

***ஐயர்*** - பெரியோர், முனிவர், வேதியர், தேவர்.

***ஐயவி*** - வெண் சிறு கடுகு, துலாமரம், கடுக்காய், ஒரு நிறை.

***ஐயவித்துலாம்*** - தலைகளைத் திருகும் ஒரு மதிற்பொறி.

***ஐயவுணர்வு*** - நிச்சயமில்லா அறிவு.

***ஐயறிவுயிர்*** - ஐம்பொறிகளாலும் அறியும் உயிர் (மக்கள்).

***ஐயனூர்*** - அரிஅரபுத்திரர்.

***ஐயன்*** - முனிவன், ஆசான், தந்தை, வேதியன்.

***ஐயா*** - ஐயன் என்பதன் விளி.

***ஐயானனம்*** - சிங்கம், சிங்க

***ஐயுணர்வு*** - ஐம்புல அறிவு.

***ஐயுறவு*** - சந்தேகம்.

***ஐயெனல்*** - அதிசயம், வருத்தம், உடன்பாடு, விரைவு, அதட்டல்.

***ஐயே*** - ஐயன் என்பதன் விளி, ஓர் ஒலிக்குறிப்பு.

***ஐயை*** - துர்க்கை, காளி, தவப்பெண், குருபத்தினி, தலைவி, மகள்.

***ஐராவணம்*** - இந்திரன் பட்டத்து யானை, யானை.

***ஐராவணன்*** - இந்திரன்.

***ஐராவதம்*** - இந்திரன் பட்டத்து யானை.

***ஐவகைத் தாயர்*** - ஈன்ற தாய், ஊட்டுந்தாய், முலைத் தாய், கைத் தாய், செவிலித் தாய் ஆகிய ஐந்துவகைத் தாய்மார்.

***ஐவகையாகம்*** - கரும யாகம், தவ யாகம், சப யாகம், தியான யாகம், ஞான யாகம் என்னும் ஐந்துவகை வேள்விகள்.

*ஐவண்ணம்* - மருதோன்றி.
*ஐவர்ணம்* - பரவைமகளிர் கால் விரல்களிற் பூணும் —
*ஐவனம்* - மலைநெல்.
*ஐவாய்மான்* - சிங்கம்.
*ஐவிரலி*-கொவ்வை, ஐவேலி.
*ஐவேசு* - சொத்து.

ஒ - ஓர் எழுத்து; ஒவ்வு என் பதன் பகுதி.
*ஒஃகுதல்* - பின்வாங்குதல்.
*ஒகரம்* - மயில்.
*ஒக்க* - சமமாக, ஒருசேர.
*ஒக்கடித்தல்*-தாளங்கொட்டு தல், செப்பனிடுதல்.
*ஒக்கம்* - ஓமம்.
*ஒக்கலித்தல்*-ஆரவாரித்தல், உறவினருடன் கலந்து பேசு தல், உறவினரைப் பாது காத்தல், ஆவலங்கொட் டுதல்.
*ஒக்கலை* - இடுப்பு.
*ஒக்கல்* - சுற்றத்தார்.
*ஒக்குதல்* - ஒத்திருத்தல்.
*ஒசிதல்* - ஒடிதல், முறிதல், நாணுதல், வருந்துதல், சாய் தல், வளைதல்.
*ஒசித்தல்* - முறித்தல்.
*ஒச்சம்* - குறைவு, நாணம்.
*ஒச்சியம்* - நிந்தை, கூச்சம், சரசமொழி.
*ஒஞ்சட்டி* - ஒல்லி, மெலிவு.
*ஒஞ்சரித்தல்* - ஒரு பக்கம் சாய்தல்.
*ஒஞ்சி* - மூலை.
*ஒஞ்சிதல்* - நாணுதல்.
*ஒடிசில்* - கவண்.
*ஒடிதல்* - இடையறுதல், முறி தல், கெடுதல்.
*ஒடித்தல்* - முறித்தல், அழித் தல், ஒளிசெய்தல்.
*ஒடியல்*- முறிதல், கேலி செய் தல்.
*ஒடிவு* - முறிதல், தவிர்தல், குறைவு.
*ஒடிவை* - இடையறவு.
*ஒடு* - நிலப்பாலை, முது புண், உடன், ஒரு வேற்றுமை யுருபு.
*ஒடுக்கம்* - குறுக்கம், சுருக் கம், மறைவிடம், முடிவு, அடக்கம்.
*ஒடுக்கு* - இடுக்கு மூலை, நெளிவு, அடக்கம்.
*ஒடுக்குதல்* - சுருக்குதல், கீழ்ப்படுத்துதல், அடக்கு தல், வருத்துதல், குறைத் தல்.
*ஒடுங்கல்* - தடை, சுருங்கு தல்.
*ஒடுங்கி* - ஆமை,
*ஒடுங்குதல்* - அடங்குதல், கீழ்ப்படிதல், சுருங்குதல், குவிதல், சோர்தல், தங்கு தல்.
*ஒடுவடக்கி* - குப்பைமேனி.
*ஒட்ட* - அடியோடு, இறக.
*ஒட்டகம்* - ஒரு விலங்கு.
*ஒட்டகை* - ஒட்டகம்.
*ஒட்டங்கி*-உலையாணிக்கோல்.
*ஒட்டடை* - நூலாம்படை (சிலந்தி வலையும் தூசும்).
*ஒட்டம்* - பந்தயப் பொருள்.

**ஒட்டர்** - மண் வேலை செய்வோர், ஒட்டர தேசத்தார்.
**ஒட்டலர்**- பகைவர்.
**ஒட்டல்** - ஒன்று சேர்த்தல், உடன்பாடு.
**ஒட்டறை** - ஒட்டடை.
**ஒட்டாரம்** - பிடிவாதம்.
**ஒட்டார்** - பகைவர்.
**ஒட்டியாணம்** - மாதர் இடையணி.
**ஒட்டு** - நட்பு, மறைவு, இணைப்பு, அற்பம், மரப் பட்டை, ஓர் அலங்காரம்.
**ஒட்டுதல்** - இணைத்தல், பந்தயம் கட்டுதல், ஆணையிடுதல், கிட்டுதல், பதுங்கி நிற்றல்.
**ஒட்டுநர்** - நண்பர்.
**ஒட்டுப்பற்று** - ஆசாபாசம்.
**ஒட்டுப்புதவம்** - இரட்டைக் கதவு.
**ஒட்டை** - ஒட்டகம்.
**ஒட்டோலக்கம்** -ஆடம்பரம், பெருங்கூட்டம்.
**ஒட்பம்** - அறிவு, ஒளி, அழகு.
**ஒண்டன்** - நரி,
**ஒண்டி** - ஒன்றி, தனிமை, ஊற்றுணி என்னும்கலப்பை யுறுப்பு.
**ஒண்டுதல்** - ஒன்றுதல், சார்தல், பதுங்குதல், சரண்புகுதல்.
**ஒண்ணுதல்** - இயலுதல்,சாத்தியமாதல், தக்கதாதல்.
**ஒண்மை** - விளக்கம், சிறப்பு, கூர்ந்த அறிவு, அழகு, நன்மை, ஒழுங்கு.

**ஒதி** - ஒரு மரம்.
**ஒதுக்கம்** - தனியிடம், தனிமை,மறைவிடம்,இருப்பிடம், ஓர் அபசுரம், நடை.
**ஒதுக்கல்** - நீக்கல், எழுச்சி.
**ஒதுக்கிடம்** - மறைவிடம், புகலிடம்.
**ஒதுக்கு** - விலகியிருப்பது, ஒண்டுக்குடியிருத்தல், புகலிடம், மறைவிடம்.
**ஒதுக்குதல்** - விலக்குதல், மறைத்தல்.
**ஒதுங்குதல்** - விலகுதல், சார்தல், அடைக்கலம் புகுதல்.
**ஒத்தது** - ஒப்பானது, தகுதியானது.
**ஒத்தல்** - ஒப்பாதல், தகுதியாதல், ஒன்றுதல்.
**ஒத்தறுதல்** - தாளவரையறை செய்தல்.
**ஒத்தாசை** - உதவி.
**ஒத்தி**-ஒற்றி,நிலத்தை அடகு [illegible]

[illegible]கை - ஒத்திடுகை, சரி பார்த்தல், உதவி, நாடக[illegible]கை.
**ஒத்திக்கை** - ஒத்திகை.
**ஒத்து** - தாளவொத்து, நாகசுரத்தில் சுருதி போடும் கருவி, கையணிவகை.
**ஒத்துதல்**-ஒற்றுதல், தாளம் போடுதல், தாக்குதல்.
**ஒத்துக்கொள்ளல்** - சம்மதித்தல், உடன்படல்.
**ஒப்படை**- ஒப்புக்கொடுத்தல், கட்டளையை நிறைவேற்றுதல்.

*ஒப்படைத்தல்* - சேர்ப்பித்தல்.
*ஒப்பந்தம்* - உடன்படிக்கை.
*ஒப்பம்* - கைச்சாத்து, ஒரு தன்மை, அலங்காரம், மெருகு.
*ஒப்பல்* - உடன்படல்.
*ஒப்பனை* - அலங்காரம், உவமை, சமம், பாவனை.
*ஒப்பாரி* -அழுகைப் பாட்டு, போலி, ஒப்பு.
*ஒப்பித்தல்* - மனப்பாடம் செய்து கூறுதல்,ஒப்படைத்தல்.
*ஒப்பிடுதல்* - உவமித்தல்.
*ஒப்பு* - போலுதல், அழகு, கவனம், ஒரு தன்மை, ஏற்புடையது, உடன்படு,
*ஒப்புதல்* - சம்மதித்தல், ஏற்றுக்கொள்ளுதல், உடன்படல்.
*ஒப்புமை* - உவமானம், ஒத்

*ஒப்புரல்* - உலக நடை, உதவி, ஒற்றுமை.
*ஒப்புவித்தல்* - ஒப்பித்தல்.
*ஒதை* - மா, ஊர்ப்பேச்சு, ஓமல்.
*ஒயில்*-ஒய்யாரம், ஒருவகைக்

*ஒய்* - யானையைப் பழக்கப் பாகர் கூறும் ஓர் ஆரிய மொழி.
*ஒய்தல்* - செலுத்தல், இழுத்தல், விட்டொதுங்குதல், தப்புதல், கொடுத்தல்.
*ஒய்யல்* - செலுத்துதல்
*ஒய்யாரம்* - ஆடம்பரம், உல்லாச நிலை.
*ஒய்யென*-விரைவாக,மெல்ல.
*ஒரணை* - இரண்டு.
*ஒராங்கு* - ஒரு புடை.
*ஒரால்* - ஒருவுதல், நீங்குதல்.
*ஒராஒரு* - ஏதோ ஒன்று.
*ஒரீஇ* - நீக்கி, ஒன்றும் பொருளுடைய அடைமொழி.
*ஒரு* - ஒன்று, ஒப்பற்ற, ஆடு, அழிஞ்சில்.
*ஒருகால்* - ஒரு முறை, ஒரு வேளை, சில வேளை.
*ஒருகுல்* - ஒரு முறை.
*ஒருகை* - ஒரு கட்சி, ஒரு பட்சம்.
*ஒருகை பார்த்தல்* - வெல்ல முயலுதல்.
*ஒருக்க* - எப்பொழுதும், முழுதும்.
*ஒருக்கணித்தல்* - ஒரு பக்கமாகச் சாய்தல்.
*ஒருக்கம்* - மன வொடுக்கம், ஒரு தன்மை.
*ஒருக்கால்* - ஒருகால் என்பதன் வழு வடிவம்.
*ஒருக்குதல்* - ஒன்று சேர்த்தல், அடக்குதல்,அழித்தல்.
*ஒருங்கு* - முழுவதும், முழுமை, அடக்கம்.
*ஒருங்கே* - ஒரு சேர.
*ஒருங்குதல்* - ஒருபடியாதல், ஒன்று கூடுதல், அழிதல்.
*ஒரு சந்தி* - ஒரு நாளைக்கு ஒரு முறை உணவுகொள்ளும் விரதம்.

ஒரு சாயல் - வடிவால் ஒத்திருத்தல்
ஒரு சாரார் - சிலர்.
ஒருசார் - ஒரு பக்கம், ஒரு கட்சி.
ஒரு சிறிது - அற்பம்.
ஒரு சிறை - ஒரு பக்கம், வேறிடம்.
ஒரு சேர - ஒரு மிக்க.
ஒரு சொல் - உறுதிச்சொல்.
ஒருதலை - நிச்சயம், ஒரு சார்பு
ஒருத்தல் - விலங்கின் ஆண், எருமைக் கடா, களிறு, ஆண் பன்றி, ஆண் புலி, ஆண் கரடி.
ஒருத்து - மனவொருமைப்பாடு.
ஒருநாயகம் - தனி ஆட்சி.
ஒருபடி - ஒருவாறு, ஒருவிதம்.
ஒருபாட்டம் - ஒரு முறை பொழியும் மழை, ஒருசால் உழவு.
ஒருபால் - ஒரு பக்கம்.
ஒருபான் - பத்து.
ஒருபிடி - விடாப்பிடி, உறுதி, ஒருகையளவு.
ஒருபுடை - ஒரு பக்கம், ஏக தேசம்.
ஒருபோகு - கொச்சகக் கலிப்பாவுறுப்பினுள் ஒன்று, ஆண்டுக்கொரு முறை பயிரிடுதல்.
ஒருப்படுதல் - உடன்படுதல், ஒரு தன்மையாதல், துணிதல், முயலுதல், ஒன்று கூடுதல்.
ஒருப்படுத்துதல் - ஒன்று கூட்டுதல், முடிவு செய்தல், வழிவிடுதல், சம்மதிக்கச் செய்தல்.
ஒருப்பாடு - உடன்பாடு, முயற்சி, ஒன்றிநிற்றல், மனத்திண்மை, ஒருதன்மையாதல்.
ஒருமனப்பாடு - மனத்தை ஒருவழிப்படுத்துதல்.
ஒருமா-இருபதில் ஒரு பங்கு.
ஒருமிக்க - ஒருசேர.
ஒருமித்தல் — ஒன்றுசேர்தல்.
ஒருமிப்பு - ஒற்றுமைப்படுதல்.
ஒருமுகம் - நேர் வழி, ஒற்றுமை.
ஒருமை - ஒரு பிறப்பு, ஒரு தன்மை, ஒற்றுமை, தனிமை, மெய்ம்மை.
ஒருமொழி - ஆணை.
ஒருவந்தம் - உறுதி, நிலைபேறு, தனியிடம்.
ஒருவன் — ஓர் ஆண் மகன், ஒப்பற்றவன்.
ஒருவாமை — பிறழாமை, நீங்காமை.
ஒருவாறு - ஒருவிதமாக.
ஒருவு - நீங்கு, ஆடு.
ஒரூஉ — ஒருவு.
ஒரோவழி - சிறுபான்மை.
ஒலி - ஓசை, சொல், இடி, காற்று.
ஒலிதல் — தழைத்தல்.
ஒலித்தல் - ஓசையுண்டாக்கல், தழைத்தல், ஆடை வெளுத்தல், விளக்குதல்.

*ஒலிப்பு* - பெருஞ்சத்தம்.
*ஒலிமுகவாயில்* - கோயில் கோட்டைகளின் முன்புற வாயில்.
*ஒலியல்* - மாலை, தளிர், தழைக்கை, ஈயோட்டுங் கருவி, தெரு, மேலாடை, நதி, பீலிக்குஞ்சம்.
*ஒலியன்* — ஆடை.
*ஒலுங்கு* - பெருங் கொசுகு.
*ஒல்* - முடிவிடம், ஒலிக் குறிப்பு.
*ஒல்குதல்* - மெலிதல், தளர் தல், சுருங்குதல், அசைதல், ஒதுங்குதல், வறுமைப்படு தல், அடங்குதல், நாணு தல், கொடுத்தல், எதிர் கொள்ளுதல்.
*ஒல்லல்* - இயலுதல்.
*ஒல்லாங்கு* — பொருந்தும் வழி.
*ஒல்லார்* - பகைவர்.
*ஒல்லி* - மெலிவு, மெலிந்த வன்.
*ஒல்லுதல்*-இயலுதல், உடன் படுதல், தகுதல், பொருந்து தல், விரைதல்.
*ஒல்லென* - விரைவாக, வெளியாக.
*ல்லை* - விரைவு, பழமை, சிறுமை, ஒவ்வாமை.
*ஒவ்வுதல்* - ஒத்திருத்தல், பொருந்துதல்.
*ஒழிகடை* - பெரும்பான்மை, முடிந்த நிலை.
*ஒழிச்சுதல்* - போக்குதல்.
*ஒழிதல்* - தீர்தல், அழிதல்,
*ஒழித்தல்* - நீக்குதல், அழித் தல், முடித்தல்.
*ஒழிந்தார்* - மற்றவர்.
*ஒழிபு* - எஞ்சியது, மற்றது, பிரிந்தது.
*ஒழிப்பு* - நீக்குதல், அழித் தல், விலக்குதல்.
*ஒழிய* - தவிர
*ஒழிவு* - முடிவு, மிச்சம், பற்றின்மை.
*ஒழுக* - மெதுவாக.
ல் - நடக்கை, நீர்பாய் தல்.
*ஒழுகலாறு* - நடத்தை.
*ஒழுகிசை* - மெல்லிசை.
*ஒழுகு* - நில வரலாறு கூறும் கணக்கு.
*ஒழுகுதல்* - நீர்பாய்தல், நடத் தல், சொட்டுதல்.
*ஒழுகு மாடம்* - உடம்பு.
*ஒழுகை* - வரிசை, வண்டி.
*ஒழுக்கம்* - நன்னடக்கை, செல்லுதல், வழி, உயர்ச்சி, குலம்,
*ஒழுக்கு* - நீரோட்டம், வரிசை, ஒழுக்கம்.
*ஒழுங்கீனம்* - சீர்கேடு.
*ஒழுங்கு* - வரிசை, நேர்மை முறை, நன்னடை.
*ஒழுங்கை* - இடுக்கு வழி, கட்டிய முகப்பு.
*ஒளி* - பிரகாசம், விளக்கு, சூரியன், சந்திரன், விண் மீன், கட்புலன், அறி புகழ், அழகு, பெருமை.

ஒளிதல் - மறைதல், தவிர்தல்
ஒளித்தல் - மறைத்தல், பதுங்குதல், மனத்திலடக்
ஒளிப்பு - ஒளித்தல்.
ஒளிமரம் - சோதிவிருக்ஷம்.
ஒளியர் - ஒளிநாட்டு வேளாளர், அறிவுடையவர்.
ஒளியவன் - சூரியன்.
ஒளிர்தல் - விளங்குதல்.
ஒளிர்வு - பிரகாசம்.
ஒளிவட்டம் - கண்ணாடி, சக்கராயுதம், பிரபை, சந்திரன்.
ஒளிவு - மறைவிடம்.
ஒளிவைத்தல் - கண்ணிவைத்தல், பார்வை மிருகம்
ஒளிறு - பிரகாசம்.
ஒளிறுதல் - விளங்குதல்.
ஒள் - ஒளி, அழகு, மேன்மை, உண்மை, அறிவு.
ஒள்ளியன் - அறிவுடையவன், புகழுடையவன், நல்லவன்.
ஒறுத்தல் — தண்டித்தல், அழித்தல், வெறுத்தல், துன்புறுத்தல்.
ஒறுப்பு - தண்டனை, கடிதல், வெறுப்பு.
ஒறுவாய் - ஒடிந்த விளிம்பு.
ஒறுவு - வருத்தம்.
ஒற்கம் - வறுமை, குறைவு, தளர்ச்சி, அடக்கம், பஞ்சம்.
ஒற்குதல் — குறைதல், தளர்தல்.
ஒற்றடம் - சூடுபட ஒற்றுதல்.
ஒற்றறுத்தல் - தாளத்தை அறுதியிடல்.
ஒற்றன் - வேவுகாரன்.
ஒற்றாடல் — வேவு பார்த்தல், வேவுகாரனைக் கொண்டு வினை செய்தல்.
ஒற்றி - அடைமானம்.
ஒற்றித்தல் - ஒற்றையாயிருத்தல், ஒற்றுமைப்படுதல், வேவுபார்த்தல்.
ஒற்றிப்போடுதல் - தவணை, தள்ளிப் போடுதல்,
ஒற்று - மெய்யெழுத்து, வேவு, வேவு பார்ப்போன்.
ஒற்றுதல் -தாளம்போடுதல், மோதுதல், ஒற்றடம்போடுதல், ஒன்றிற்படச் சேர்தல், உய்த்துணர்தல், உளவறிதல், அடுத்தல், கட்டுதல், நினைதல், அமுக்குதல், துடைத்தல், ஒட்டிக்கொள்ளுதல், முத்திரையிடுதல், அடித்தல், வீழ்த்துதல்.
ஒற்றுக் கேட்டல் - பிறர் பேச்சை மறைந்துநின்று கேட்டல்.
ஒற்றுமை - ஒன்று சேர்ந்திருக்கும் தன்மை, ஒரு நிலைப்படுதல்.
ஒற்றுறுப்பு-யாழின் உறுப்பு வகை, ஒற்றாகிய உறுப்பு.
ஒற்றை - ஒன்று, ஒற்றைப்பட்ட எண், தனிமை.
ஒன்றலர் - சேராதவர், பகைவர்.

*ஒன்றுக* - ஒரு பொருளாக, நிச்சயமாக, ஒருமிக்க.
*ஒன்றுதல்* — ஒற்றுமைப்படுதல், முதலாதல், இணையின்

*ஒன்றுமை* - சேராமை, பொருந்தாமை, பகைமை.
*ஒன்றார்* - சேரார், பொருந்தார், பகைவர்.
*ஒன்றி* — சேர்ந்து, பொருந்தி, தனிமை, தனித்த ஆள்.
*ஒன்றித்தல்* - பொருந்துதல்.
*ஒன்று* - ஓர் எண், மதிப்புக்குரிய பொருள், ஒற்றுமை, வாய்மை, முத்தி.
*ஒன்றுதல்* - ஒன்றுதல், மனங்

சம்மதித்தல், பொருந்துதல், உவமையாதல், கலத்தல்.
*ஒன்றுநர்* - நண்பர்.
*ஒன்றுமொழிதல்* - சபதங்

*ஒன்னலர்*-பகைவர், ஒன்னார்.
*ஒன்னார்* - பகைவர்.
*ஒன்னுதல்* — பொருந்துதல், பொறுத்தல்.

**ஓ** - ஓர் எழுத்து, சென்று தங்குதல், மதகு நீர் தாங்கும் பலகை, ஒழிவு, (கழிவிரக்கம், மகிழ்ச்சி, வியப்பு, ஞாபகம், எதிர்மறை, வினா, ஐயம், அசைநிலை முதலியவற்றை யுணர்த்தும் ஓரிடைச் சொல்).
*ஓகம்* - பெருங்கூட்டம், வெள்ளம்.
*ஓகாரம்*-ஓஎன்னும் எழுத்து, மயில்.
*ஓகை* - உவகை, மகிழ்ச்சி.
*ஓகோ* - அதிசயவிரக்கக் குறிப்பு.
*ஓக்கம்* - பெருமை, உயர்ச்சி.
*ஓக்காளம்* - வாந்தி.
*ஓக்குதல்* - உயர்த்துதல், அறுதியிடுதல், எறிதல், ஆக்குதல், எழும்பச் செய்தல்.
*ஓங்கல்* — உயர்ச்சி, எழுச்சி, மலை, மலையுச்சி, தலைவன், வலியோன், யானை, மூங்கில், சாதகப் புள்.
*ஓங்காரம்* - பிரணவம், ஓம்.
*ஓங்குதல்* - உயர்தல், பரவுதல், வளர்தல், பெருமையடைதல், பெருகுதல்.
*ஓசம்* - பிரகாசம், கீர்த்தி.
*ஓசரி* - கேடு, அதிசயம்.
*ஓசனித்தல்* - பறவை சிறகடித்தல்.
*ஓசனை*- யோசனை, நாற்காதம், எண்ணம்.
*ஓசன்* - குரு.
*ஓசி* - ஆசாரியன் மனைவி. விலையில்லாமற் பெறுவது.
*ஓசு* - வலி.
*ஓசுநன்* - பரவசாதியான், எண்ணெய் வாணிகன், மீகாமன், வலியோன்.
*ஓசை* - ஒலி, புகழ், இடம், பாம்பு, வாழை.
*ஓச்சம்* - உயர்வு, புகழ்.
*ஓச்சல்* - உயர்வு, தளர்ச்சி.
*ஓச்சன்* - பிடாரி கோவில் பூசாரி.

**ஓச்சுதல்** - எறிதல், உயர்த்துதல், செலுத்துதல், ஓங்குதல், பாய்ச்சுதல்.

**ஓடதி** - மருந்துச்செடி, ஆண்டில் ஒருமுறை காய்த்து அழியும் செடி.

**ஓடதிநாதன்** - சந்திரன்.

**ஓடம்** – தோணி, நெசவுநாடா, செங்கருங்காலி, ஓடப்பாட்டு.

**ஓடல்** - ஓடுதல், குலைதல், கெடுதல், ஒரு மரம்.

**ஓடவிடுதல்** - புடமிடுதல்.

**ஓடி** - ஒருவகை நிலம்.

**ஓடியம்** - சபைக்குத் தகாத பேச்சு.

**ஓடியவோடம்** - கிளிஞ்சில்.

**ஓடு** - பழம் முதலியவற்றின் கோது, ஆமை முதலியவற்றின் முதுகோடு, வீடுவேயும் ஓடு, மட்பாத்திர உடைசல், இரப்போர் கலம்.

**ஓடுகால்** - நீரோடும் கால்வாய்.

**ஓடுதல்** - ஓட்டமாகச் செல்லுதல், வருந்துதல், நீளுதல், விரைதல், பறத்தல்.

**ஓடுபடம்** - இடுதிரை.

**ஓடை** - நீரோடை, குளம், நெற்றிப்பட்டம், அகழி, சந்தனம் வைக்கும் மடல், குடைவேல்மரம், கிலுகிலுப்பை, ஒடுங்கிய நிலம்.

**ஓட்டம்** - ஓடுகை, தோல்வி, வருவாய், மேலுதடு, உருக்கிச் சுத்தம் செய்தல், உதடு.

**ஓட்டன்** - நடந்து செல்லும் ...

**ஓட்டாங்குச்சு** - மட்கலவோடு.

**ஓட்டாண்டி** - பிச்சைக்காரன்.

**ஓட்டி** - ஓட்டுகிறவன், பாட்டிக்குப் பாட்டி.

**ஓட்டு** - ஓடுதல், புறங்காட்டியோடுதல்.

**ஓட்டுதல்** - செலுத்துதல், புறத்துதல், அழித்தல், காலந்தாழ்த்தல், நீங்கச்செய்தல்.

**ஓட்டை** - துவாரம், சிதைவு.

**ஓணம்** - நதி, திருவோணநட்சத்திரம்.

**ஓதப்புரோதம்** - நெசவின் நெட்டிழை குறுக்கிழைகள்.

**ஓதம்** - ஈரம், கடல், கடல் நுரை, வெள்ளம், அண்டவாதம்.

**ஓதல்** - கல்வி பயிலுதல்.

**ஓதவனம்** - கடல்.

**ஓதனம்** - சோறு, உணவு.

**ஓதனை** - காசுக்கட்டி.

**ஓதா** - யாகம் செய்யும் ஆசிரியருள் ஒருவன்.

**ஓதி** - ஞானம், ஓந்தி, ஓதுபவன், கல்வி, செறிவு, பெண் மயில், அன்னம், கூந்தல்.

**ஓதிமம்** - அன்னம், மலை, புளிய மரம், கவரிமா.

**ஓதிமன்** - பிரமன்.

*ஓதியிடுதல்* - திருமணம் முதலியவற்றில் மொய்யிடுதல்.
*ஓது* - படி, பூனை.
*ஓதுதல்* - படித்தல், ஜபம் செய்தல், பாடுதல், சொல்லுதல், இரகசியத்தில் போதித்தல்.
*ஓதுவார்* - கோவிலில் தேவாரம் பாடுவோர்.
*ஓதை* - ஒலி, மதில், மதிலின் மேல் வழி, ஆரவாரம், காற்று.
*ஓத்திரி* - யாகம் செய்வோன்.
*ஓத்து* - ஓதுதல், வேதம், நூற்பிரிவு, விதி, நூல்.
*ஓநாய்* - கோநாய், காட்டு நாய்.
*ஓந்தி* - ஓணான்.
*ஓபாதி* - அவித்தை, அம்சம், உவம உருபு.
*ஓபு* - கதவு.
*ஓப்புதல்* - ஓட்டுதல், உயர எடுத்தல், துரத்துதல்.
*ஓமகுண்டம்* - வேள்விக்குழி
*ஓமப்பொடி* - திருநீறு, ஓமஞ் செய்த சாம்பல், ஒரு தின் பண்டம்.
*ஓமம்* - ஒரு மருந்துச் சரக்கு, வேள்விவகை.
*ஓமலிப்பு* - ஊர்ப்பேச்சு.
*ஓமல்* - ஓமலிப்பு.
*ஓமவல்லி* - கர்ப்பூரவல்லிப் பூண்டு.
*ஓமறத்தல்* - ஒழிவறுதல்.
*ஓமாலிகை* - வாசனை நீரில் இடும் சரக்கு.
*ஓமித்தல்* - ஓமம் செய்தல்.
*ஓமியம்* - யாகம்.
*ஓமை* - மாமரம், உகாமரம்.
*ஓம்* - பிரணவம்.
*ஓம்படுத்தல்* - பாதுகாக்குமாறு சேர்த்தல், பரிகரித்தல், உறுதிகூறுதல்.
*ஓம்படை* - பாதுகாப்பு, பரிகாரம், மறவாமை, பாதுகாக்குமிடம்.
*ஓம்படைக்கிளவி* - தலைவியைப் பாதுகாத்துக் கொள்ளெனத் தலைவிக்குத் தோழி கூறும் கூற்று.
*ஓம்புதல்* - பாதுகாத்தல், பரிகரித்தல், வளர்த்தல், மனத்தை ஒடுக்குதல், நீக்குதல், சீர்தூக்குதல், உபசரித்தல்.
*ஓய்* - ஒரு விளிக்குறிப்பு.
*ஓய்ச்சல்* - தளர்ச்சி.
*ஓய்தல்* - உள்ளதன் நுணுக்கம், முடிதல், மாறுதல், தளர்தல், இளைப்பாறுதல், செயல், தவிர்தல், அழிதல்.
*ஓய்வு* - தளர்வு, முடிவு, அழிவு.
*ஓரகத்தி* - கணவனுடன் பிறந்தான் மனைவி.
*ஓரம்* - விளிம்பு, ஒருபக்கஞ் சார்ந்து பேசுதல், பக்கம்.
*ஓரவாரம்* - பட்சபாதம்.
*ஓராங்கு* - ஒரு சேர, ஒன்று போல, இடைவிடாமல்.
*ஓராட்டு* - தாலாட்டு.
*ஓராயம்* - சாய்வு, இணைப்பு.
*ஓராஞெரு* - ஏதோவொன்று.

*ஓரி* - ஆண் நரி, குதிரைப் பிடரிமயிர், தேன்முதிர்த லால் பிறக்கும் நீலநிறம், ஆண் தேவாங்கு, ஒரு வள் ளல்.
*ஓரிதழ்த்தாமரை* - ஒரு பூண்டு.
*ஓரிசு* - தீர்மானம்.
*ஓரும்* - ஓர் அசைச் சொல்.
*ஓரை*-மாதர் கூட்டம், மாதர் விளையாட்டு, குரவை, இரண் டரை நாழிகைப்பொழுது, முகூர்த்தம், சித்திரான்னம், கூகை, இராசி.
*ஓர்* - ஒன்று, ஓர் அசைச் சொல்.
*ஓர்ச்சி*-ஆராய்ச்சி, உணர்ச்சி, அறிவு.
*ஓர்தல்* - ஆராய்தல், நினைத் தல், அறிதல்.
*ஓர்த்தல்*- கூர்ந்து கேட்டல், தெரிந்தெடுத்தல், நினைத்தல், கேட்டல்.
*ஓர்பு* - ஆராய்கை.
*ஓர்ப்பு* - பொறை, துணிவு, தெளிவு, நினைவு.
*ஓர்மை* - ஒற்றுமை, ஆடம் பரம், துணிவு, நினைவு.
*ஓர்வு* - ஓர்பு.
*ஓலக்கம்* - சபாமண்டபம், அத்தாணிக்காட்சி.
*ஓலமிடுதல்* - அபயங் கூறு தல், அழுதல்.
*ஓலம்* - சத்தம், அபயமொழி, பாம்பு.
*ஓலை* - பனை தென்னை முதலிய வற்றின் இலை, திருமுகம், ஓலைக்குடை, காதணி.
*ஓலைக்கணக்கர்* - பள்ளியில் படிப்போர்.
*ஓலைத்தூக்கு* - சீட்டுக்கவி.
*ஓலைநாயகன்* - சோழரது தலைமைக் காரிய நிர்வாகி.
*ப்பாசுரம்* - சீட்டுக்கவி.
*ப்புறம்* - கட்டளை.
*ஓலைப்பூ* - தாழம்பூ.
*ஓதை* - ஒலி, தாலாட்டு, ஒரு விளியுருபு.
*ஓவம்* - சித்திரம்.
*ஓவர்* - சித்திரக்காரர், ஏத்தா ளர், கம்மாளர்.
*ஓவாவருதல்* - ஒழிதல்.
*ஓவாமை* - ஒழியாமை, இடைவிடாமை.
*ஓவியகாயம்* - புலி.
*யம்* - சித்திரம், அழகு.
*யன்* -
*ஓவு* - ஒழிதல், சித்திரம்.
*ஓவுதல்* - ஒழிதல், நீக்குதல், முடிதல், ஓய்தல்.
*ஓளி* - ஒழுங்கு, யானைக்கூடடம்,
*ஓற்பலம்* - கோங்கு.

**ஔ** - ஔ என்னும் எழுத்து.

*ஔகம்* - இடைப்பாட்டு.
*ஔசித்தியம்* - தகுதி.
*ஔடதம்* - மருந்து.
*ஔதா* - அம்பாரி.
*ஔதாரியம்* - உதாரகுணம்.
*ஔபாசனம்* - இல்லறத்தார் காலையிலும் மாலையிலும் செய்யும் ஓமச் சடங்கு.

**ஔரசன்** - சொந்த புத்திரன்.
**ஔவித்தல்** - அழுக்காறு கொள்ளல்
**ஔவியம்** - பொறாமை
**ஔவை** - தாய், தவப்பெண், ஆரியாங்கனை யாட்டி, ஔவை என்னும் பெயருடையார்.
**ஔவைநோன்பு** - செவ்வாய் நோன்பு.

**ஃ** - ஆய்த எழுத்து.

**க** - ஓர் எழுத்து, தமிழ் எண்ணின் குறிப்பு, அக்கினி, வியங்கோள் விகுதி.
**க:சு** - காற்பல அளவு.
**ககணி** - வானநூலறிந்தோன்.
**ககபதி** - கருடன்.
**ககம்** - பறவை, அம்பு.
**ககனசாரி** - ஆகாயத்தில் சஞ்சரிப்பவன்.
**ககனம்** - வானம், வாயு மண்டலம், காடு, சேனை.
**ககுத்து** - திமில்.
**ககுபம்** - திசை.
**ககுளம்** - ஒருவகை இசையளவை.
**ககேசன்** - கருடன், சூரியன்.
**ககோதரம்** - பாம்பு.
**ககோளம்** - வானமண்டலம்.
**கக்கம்** - அக்குள்.
**கக்கரி** - முள் வெள்ளரி.
**கக்கல்** - வாந்தியெடுத்தல்.
**கக்கு** - ஒருவகை இருமல் நோய்.
**கக்குதல்** - கக்கல்.
**கக்குவான்** - கக்கிருமல் நோய்.
**கங்கணம்** - காப்புநாண், கைவளை.
**கங்கதம்** - சீப்பு.
**கங்கபத்திரம்** - பருந்தின் சிறகு, அம்பு.
**கங்கம்** - கழுகு, பருந்து, சீப்பு, ஒரு தேசம்.
**கங்காணி** - கண்காணிப்பவன்.
**கங்காளம்** - எலும்புக்கூடு, ஒரு வகைப் பாத்திரம்.
**கங்காளன்** - சிவன்.
**கங்காணி** - காளி, பார்வதி.
**கங்கு** - வயல்வரம்பு, அணை, எல்லை, கழுகு, பருந்து, கருந்தினை, பனைமட்டையின் அடிப்புறம்.
**கங்குல்** - இரவு, இடையாமம், பரணிநாள், இருள்.
**கங்குல்வாணர்** - அரக்கர்.
**கங்கைகுலம்** - வேளாளர் குலம்.
**கங்கைதனயன்** - முருகக் கடவுள்.
**கங்கைபெற்றோன்** - விநாயகர்.
**கசகசத்தல்** - வியர்த்தல், ஒலித்தல்.
**கசகசா** - அபினிச்செடி, கசகசா விதை.
**கசகம்** - வெள்ளரி.
**கசகர்ணம்** - காதாட்டும் வித்தை, பெருமுயற்சி.
**கசகர்ணி** - ஒரு செடி.

***கசகுதல்*** - தளர்தல், பின் வாங்குதல்.
***கசக்கல்*** - கசங்கச்செய்தல்.
***கசக்குதல்*** - நெருக்குதல், கைப்புச் சுவை.
***கசங்குதல்*** - குழைதல், மனம்நோதல், நிலைகெடுதல்.
***கசங்கு*** - ஈந்து.
***கசடன்*** - குற்றஞ்செய்தவன், கீழ்மகன்.
***கசடு*** - குற்றம், அழுக்கு, அடிமண்டி, வடு.
***கசதி*** - கஷ்டம்.
***கசத்தல்*** - கைப்புச்சுவை தோன்றுதல், வெறுப்படைதல்.
***கசபுடன்*** - நூறு எரு முட்டையிட்டு எரிக்கும் புடம்.
***கசப்பி*** - வேம்பு, மயிர்ச் சிகை, காசித்தும்பை, வல்லாரை.
***கசப்பு***-ஒரு சுவை, வெறுப்பு.
***கசம்*** - யானை, குளம், மிகுதி, தலைமயிர், இரண்டுமுடி அளவு.
***கசரத்து*** - உடற்பயிற்சி.
***கசர்*** - சிவப்புக்கல்லின் குற்றம், மீதப்பட்டது.
***கசவம்*** - கடுகு.
***கசனை*** - உப்புப்பற்று, ஈரம்.
***கசாகூளம்*** - தாறுமாறு, பல சாதிக்கலப்பு.
***கசாக்கிரம்*** - மயிர்நுனி.
***கசாப்பு*** - ஆடுமாடுகளைக் கொல்லுதல்.
***கசாயம்*** - கஷாயம், குடிநீர்.
***கசிதம்*** - ஊறுதல், சிறு அகப்பை, ஈரமூறுதல், வியர்த்தல், இளகுதல்.
***கசிவு*** - ஈரம், ஊறுதல், மன நெகிழ்ச்சி, வருத்தம், ஒழுகுதல்.
***கசு*** - காற்பலம்.
***கசுமலம்*** - அசுத்தம்.
***கசுமலர்*** - அசுத்தம்.
***கசை*** - அடிக்கும் சவுக்கு, மயிர்மாட்டி, கவசம், பசை.
***கச்சகம்*** - குரங்கு.
***கச்சங்கம்*** - ஒப்பந்தம்.
***கச்சபம்*** - ஆமை, நவநிதியுள் ஒன்று.
***கச்சபி*** - சரஸ்வதியின் வீணை.
***கச்சம்*** - மரக்கால், அளவை, ஒப்பந்தம், ஒரெண்ணுப் பெயர், இறகு, கடுகுரோகணி, யானைக் கழுத்திலிடும் கயிறு, ஊற்று.
***கச்சவடம்*** - வியாபாரம்.
***கச்சா*** - தாழ்மை, ஒரு நிறை.
***கச்சாயம்*** - ஒருவகைச் சிற்றுண்டி.
***கச்சால்***- மீன்பிடிக்கும் கூடு.
***கச்சான்*** - மேற்குக் காற்று.
***கச்சி*** — சிரட்டை, காஞ்சிபுரம்.
***கச்சிதம்*** — ஒழுங்கு.
***கச்சு*** - அரைப்பட்டி, பெண்கள் சட்டை, நூற்கயிறு.
***கச்சுரி*** - நெருப்பு.
***கச்சூரம்*** - பேரீந்து, கழற்காய்.

**கச்சேரி** - அலுவற் கூட்டம், ஆடல் பாடல் நிகழ்ச்சி.
**கச்சை** - அரைப்பட்டிகை, தழும்பு, கயிறு, யானைக்கீழ் வயிற்றில் கட்டும் கயிறு, கவசம்.
**கச்சைகட்டுதல்** - ஆடையை இறுகக்கட்டுதல், ஒன்றைச் செய்ய முற்படுதல்.
**கச்சோதம்** - மின்மினி.
**கச்சோரம்** – பூலாங்கிழங்கு.
**கச்சோலம்** - ஒருவகை வாசனைப்பொருள், சிறுபாத்திரம்.
**கஞலுதல்** - விளங்குதல், எழுதல், நெருங்குதல், சிறப்படைதல், மிகுதல், சினங் கொள்ளுதல்.
**கஞறம்** - கள்.
**கஞற்றுதல்** - நிரப்புதல். செய்தல்.
**கஞ்சகம்** - கறிவேம்பு, கச்சின் தலைப்பு.
**கஞ்சகாரம்** - கன்னான்.
**கஞ்சக்கருவி** - வெண்கலத்தால் செய்ததாளவாத்தியம்.
**கஞ்சங்குல்லை** - கஞ்சாங் கோரை.
**கஞ்சம்** - தாமரை, நீர், அப்பவருக்கம், துளசி, கைத்தாளம், வெண்கலம், வஞ்

**கஞ்சல்** - குப்பை, கூளம்.
**கஞ்சனம்** - கைத்தாளம், கண்ணாடி, கரிக்குருவி.
**கஞ்சனை** - கண்ணாடி, தாபகவசம்.
**கஞ்சன்** - பிரமன், கம்சன், மூடவன், குறவன், உலோபி.
**கஞ்சா** - செடி, ஒருவகைச் ஒரு மருந்துப் பொருள்.
**கஞ்சாங்கோரை** - திருநீற்றுப் பச்சை, நாயத்துளசி.
**கஞ்சி** - சோற்றின் வடிநீர், காஞ்சிபுரம்.
**கஞ்சிகை** - பரிபூண்ட தேர், மணிபதித்த பல்லக்கு, உருவுதிரை, ஆடை.
**கஞ்சிரா** - ஒரு வாத்தியம்.
**கஞ்சுகம்** - சட்டை, அதிமதுரம், முருக்கு.
**கஞ்சுகன்** - சட்டையணிந்த வேலையாள், வைரவன்.
**கஞ்சுகி** - 'மெய்க்காப்பாளன், பாம்பு, திரைச்சீலை, சட்டை.
**கஞ்சுளி** – சட்டை.
**கடகடத்தல்** - ஆட்டங் கொடுத்தல்.
**கடகத்தண்டு** - சிவிகை.
**கடகநாதன்** - சேனாதிபதி.
**கடகம்** - காப்பு, வாகுவலயம் பனையோலையால் முடைந்த கூடை, கங்கணம், கைவளை, அபிநயம். கேடகம், சேனை, மதில், கர்க்கடகராசி, மலைப் பக்கம், ஆடி, யானைத்திரள், ஓர் எண்.
**கடகன்** - வல்லவன், காரியத்தைக் கைகூடச்செய்பவன்.
**கடகு** - கேடகம்.
**கடத்தல்** - கடந்துபோதல் அளத்தல், போர்செய்தல்

வெல்லுதல், அழித்தல், க
**கடத்துதல்** - செலுத்துதல், கடங் கொண்டுசெல் லல், காலம் போக்குதல்.
**கடப்பந்தார்** - கடப்பமாலை.
**கடப்பாடு** - கடமை, முறை, கொடை, திறை, ஒப்புரவு, மிகுதல்.
**கடப்பாரை** - கட்டப்பாரை.
**கடப்பு** - கடத்தல், இடுக்கு மரம், மிகுதியானது.
**கடமணை** - தேர் அல்லது வண்டியின் முன்னுறுப்பு.
**கடமா** - காட்டுப்பசு, மத யானை.
**கடமுனி** - அகத்தியர்.
**கடமை** - கடப்பாடு, குடி யிறை, ஒருவகை மான், பெண்ணுடு, காட்டுப்பசு.
**கடம்** - கடன், இடுக்குவழி, பாவம், காடு, யானை மதம், பாலைநிலவழி, மலைச் சாரல், கடமை, கோபம், குடம், உடம்பு, முறைமை, மஞ்சள்.
**கடம்படுதல்** - நேர்ந்துகொள் ளுதல், கோபங்கொள்ளுதல்.
**கடம்பம்** - வெண்கடம்பு, வாளுறுவை.
**கடம்பன்** - முருகன்.
**கடம்பி** - கெட்டவன்.
**கடம்பு** - திங்கு, கடம்பமரம்.
**கடம்பை** - கடமா, ஒரு வகைக் குளவி.
**கடயம்** -
**கடரி** - மரமஞ்சள்.
**கடலகம்** - ஆமணக்கு, ஊர்க்குருவி.
**கடலமிழ்து** - உப்பு.
**கடலுப்பு** - கரியுப்பு.
**கடலை** - ஒரு தானியம்.
**கடலோடி** - கடற் பிரயாணி.
**கடல்** - சமுத்திரம், ஒரு பேரெண், சதயநாள், மிகுதி.
**கடல்படுதிரவியம்** - ஓர்க் கோலை, சங்கு, பவளம், முத்து, உப்பு முதலியன.
**கடவது** - செய்யவேண்டுவது
**கடவல்லி** - ஓர் உபநிடதம்.
**கடவன்** - கடமைப்பட்ட வன், எசமானன்.
**கடவாத்தியம்** - தாளக் கருவி யாகப் பயன்படுத்தும் மட் பானை.
**கடவு** - அருவழி, எருமைக் கடா, ஆட்டுக்கடா.
**கடவுட்சடை** - கூத்துவகை.
**கடவுணதி** - கங்கை.
**கடவுண்மங்கலம்** - தெய்வப் பிரதிட்டை.
**கடவுண்மண்டிலம்** - சூரியன்
**கடவுண்மை** - தெய்வத் தன்மை.
**கடவுதல்** - செலுத்துதல், கேட்டல், முடுக்குதல்
**கடவுளர்** - செலுத்துவோர்.
**கடவுள்** - இறைவன், முனி வன், தெய்வத் தன்மை, நன்மை.
**கடவை** - கடத்தல், வாயில், வழி, ஏணி.
**கடறு** - காடு, மலைச்சாரல், பாலைநிலம், அருவழி.

**கடற்கோ** - வருணன்.
**கடற்கோடு** - கடற்கரை.
**கடற்படை** - கப்பற் சேனை.
**கடற்பிணா** - நெய்தல் நிலப் பெண்.
**கடனிறுத்தல்** - கடனைக் கொடுத்தல், கடமை செய்தல்.
**கடனாளி** - கடன்பட்டவன்.
**கடனுரை**-ஒருவகைக் கடல் மீன் ஓடு.
**கடன்** - கடமை, இரவற் பொருள், குடியிறை, இயல்பு, மானம், வைதிகக் கிரியை, உபசாரம்.
**கடன்மரம்** - மரக்கலம்.
**கடன்மல்லை** - மகாபலிபுரம்.
**கடன்முரசோன்** - மன்மதன்.
**கடன்முறை** - பெரியோர்க்குச் செய்யும் மரியாதை.
**கடன்மை** - தன்மை.
**கடா** - வினா, ஆட்டின்பொது, ஆணாடு, ஆணெருமை.
**கடாகம்** — உலகவுருண்டை, கொப்பரை.
**கடாக்களிறு** - மதயானை.
**கடாசலம்** - யானை.
**கடாசுதல்** - எறிதல், ஆப்படித்தல்.
**கடாட்சம்** - கடைக்கண் பார்வை, அருள்.
**கடாம்** - யானை மதநீர், யானையின் மதம் தோன்றும் துளை.
**கடாரம்** - கொப்பரை, பர்மா நாடு, காழகம், பெருநாரத்தை.
**கடாரி** — ஈனா இளம் பசு, ஓர் ஆயுதம்.
**கடாவிடுதல்** - மாடுகளால் உழக்கச் செய்தல்.
**கடாரி** - செலுத்துகை.
**கடாத்தல்** - செலுத்துதல், அறைதல், வினவுதல், தூண்டுதல்.
**கடி** - காவல், கூர்மை,மணம், விளக்கம், அச்சம், சிறப்பு, கலியாணம், புதுமை, ஆர்த்தல், காரம், பேய், மிகுதி, பல்லால் கடித்த வடு,கடி என் ஏவல். விஷக்கடி. ஊறுகாய், கம், பூசை, அதிசயம், இன்பம்.
**கடிகாரம்** - நேரங்காட்டும்
**கடிகுரங்கு** - ஒரு மத பொறி.
**கடிகை** - துண்டம். கழுத்துப் பட்டை, காம்பு, குத்துக்கோல், நீக்குதல், தாழ்ப்பாள், கேடகம். நாழிகை, முகூர்த்தம், தோள்வளை, மங்கலப்பாடகர், விதிப்பவன், வேகமாகச் செல்லுதல், உண்கலம், சபை.
**கடிகைமாக்கள்** - மங்கலப் பாடகர்.
**கடிகையர்** - பறை மூலம் அரசாணையை அறிவிப்போர்.

**கடிகோல்** - பறவை யோட்டுங் கழி.
**கடிசரி** — கூத்து நிலைகளுள் ஒன்று.
**கடிசு** - சடுமை, நிமிர்வு.
**கடிசூத்திரம்** - அரைஞாண்.
**கடிசை** - பாய்மரம் தாங்கி.
**கடிஞை** - பிச்சைப் பாத்திரம்.
**கடிதடம்** - இடுப்பு, நிதம்பம்.
**கடிதம்** - ஓலை, திருமுகம், ஏடுபசைக், கூழ் தடவிய
**கடிதல்** — கோபித்தல், தல், விரைதல், அழித்தல். கொல்லுதல், தண்டித்தல், அடக்குதல், ஓட்டுதல், வெட்டுதல்.
**கடிது** — விரைவாக, கடுமையானது.
**கடித்தல்** -பல்லால் கடித்தல், துண்டித்தல்.
**கடிங்தோன்** - முனிவன்.
**கடிப்பகை** - வேம்பு, வெண்கடுகு.
**கடிப்பம்** -கெண்டி, காதணி, செப்பு, பூண், கொள்கலம், ஆபரணம்.
**கடிப்பிணை** - காதணிவகை.
**கடிப்பு** - குறுந்தடி, துருத்தியின் கைப்பிடி, குமிழ்,
**கடிமரம்** - காவல்மரம்.
**கடிமனை** - காவலிடம்.
**கடிமாடம்** - காவலமைந்த கன்னி மாடம்.
**கடிமூலம்** — முள்ளங்கி.
**கடியன்** - கடுமையுள்ளவன்.
**கடியிருக்கை** -திருமண மண்டபம்.
**கடிவாய்** - கடித்த இடம்.
**கடிவாளம்** — குதிரைவாயில் மாட்டும் இரும்புக் கருவி.
**கடிவை** - யானை.
**கடிறு** - யானை.
**கடினம்** - இலகுவின்மை, மிருது வின்மை.
**கடு** - விஷம், கடுக்காய், கசப்பு, பாம்பு, முள், வெறுப்பு, துவர்ப்பு.
**கடுக** —
ல் — கோபித்தல்,
**கடுகடுப்பு**-கோபித்தல்,மிக்க உறைப்பு.
**கடுகம்** - கார்ப்பு, சுக்கு, திப்பிலி, மிளகு.
**கடுகு** - ஒரு தானியம்.
**கடுகுதல்** - விரைதல், மிகுதல், குறைதல்.
**கடுகுரோகணி** - ஒரு மருந்துச் சரக்கு.
**கடுகென** - விரைவாக.
**கடுக்கம்** - விரைவு.
**கடுக்கன்** - காதணி வகை.
**கடுக்காய்** - ஒரு மருந்துச் சரக்கு.
**கடுக்குதல்** - வலித்தல், மூலாம் பூசுதல், ஒதுக்குதல், கோபக்குறிகாட்டுதல், சுளித்தல்.
**கடுக்கை** — கொன்றை, மருது.
**கடுங்கண்**- கொடுமை, அஞ்சாமை.
ல் - முதற் கருப்பம்

**கடுஞ்சொல்** - கொடிய வார்த்தை.
**கடுதல்** - களைபிடுங்குதல்.
**கடுதாசி** — காகிதம்.
**கடுத்தல்** — நோவெடுத்தல், உறைத்தல், விரைந்தோடுதல், உளைதல், மிகுதல், கோபித்தல், வெறுத்தல், ஐயுறுதல், ஒத்தல்.
**கடுநகை** — ஏளனச் சிரிப்பு, பெருஞ்சிரிப்பு.
**கடுப்ப** - ஒப்ப.
**கடுப்பு** - நோதல், வெகுளி, வேகம், ஒப்பு, செருக்கு.
**கடுமரம்** — எட்டி, கடுக்காய் மரம்.
**கடுமா** - சிங்கம், யானை, விரைந்து ஓடும் விலங்கு.
**கடுமான்** — சிங்கம்.
**கடுமீன்** — சுறா.
**கடுமுள்** - போராயுதம்.
**கடுமை** -கொடுமை, வேகம், கண்டிப்பு, மிகுதி, சினம், வெம்மை.
**கடும்பு** - சும்மாடு, சுற்றம், சீம்பால்.
**கடுவழி**— கடத்தற்கரிய வழி.
**கடுவளி** — பெருங்காற்று.
**கடுவன்**— ஆண்குரங்கு, ஆண் பூனை.
**கடுவாய்** - கழுதைப் புலி.
**கடுவினை** — தீவினை.
**கடுவெளி** - வானம், நிழலற்ற வெளியிடம்.
**கடுவை** - பறை வகை.
**கடூரம்** -கடினம், கொடுமை.
**கடை** - முடிவு, அங்காடி, இடம், எல்லை, இழிவு, வாயில், கைப்பிடி, பின், ஒரு வினையெச்ச விகுதி, வேற்றுமை உருபு.
**கடை கழி மகளிர்** - பொது மகளிர்.
**கடைகாப்பாளன்** - வாயில் காவலன்.
**கடைகூடுதல்** - கைகூடுதல்.
**கடை கொள்ளுதல்** - முடிவு பெறுதல்.
**கடைக்கண்** - கண்ணின் ஓரப் பார்வை, அருள், நுனியிடம்.
**கடைக்கணித்தல்** - அருளுதல்.
**கடைக்கருவி** - உடுக்கை
**கடைக்கனல்** - ஊழித் தீ.
**கடைக்காப்பு** - பதிகத்தின் இறுதிப் பாட்டு.
**கடைக்கால்** - ஊழிக்காற்று, அஸ்திவாரம், பின் வருங் காலம்.
**கடைக்குளம்** - உத்திராடம்.
**கடைக்கூடுதல்** - கை கூடுதல், சம்மதித்தல்.
**கடைக்கூட்டு** - இறக்குந் தறுவாய்.
**கடைக்கூட்டுதல்** - ஒருப்படுத்துதல், செய்து முடித்தல், சம்பாதித்தல்.
**கடைக்கொள்ளுதல்** — பின் செல்லுதல், உறுதியாகக் கொள்ளுதல், முடிவு பெறுதல், சேர்த்தல்.

**கடைக்கொள்ளி** - நுனியில் எரியும் கொள்ளிக்கட்டை
**கடைக்கோள்** - முடிவு பெறுதல்.
**கடைசி** - முடிவு.
**கடைசோரி** - அப்பக்கடை.
**கடைச்சரி** - முன்கைவளை.
**கடைச்சல்** - மரம் முதலியவற்றைக் கடைதல், கடையப்பட்ட பொருள்.
**கடைச்சன்** - கடைசிப்பிள்ளை
**கடைச்சி** - மருதநிலப்பெண்.
**கடைஞன்** - மருதநிலத்தான், இழிகுணமுடையவன்.
**கடைதல்** - மத்தால் கடைதல், மரம் முதலியன கடைதல், மசித்தல், மிகச்செய்தல், அரித்தல்.
**கடைதிறப்பு** - கதவுதிறத்தல்.
**கடைத்தலை** - தலைவாயில்.
**கடைத்தெரு** - ஆவண வீதி.
**கடைத்தேறுதல்** - ஈடேறுதல்.
**கடைநாள்** - ஊழிக்காலம், அழிவு காலம்.
**கடைநிலை** - புறவாயில், விகுதி, இறுதியில் நிற்பது, ஒரு புறத்துறை.
**கடைபோதல்** - முற்றுப் பெறுதல், நிலை நிற்றல்.
**கடைப்படுதல்** - இழிவாதல்,
**கடைப்பந்தி** - கடைசி வரிசை.
**கடைப்பிடி** - உறுதி, சித்தாந்தம், தேற்றம், அபிமானம், மறவாமை.
**கடைப்பிடித்தல்** - உறுதியாகப்பற்றுதல், மறவாதிருத்தல், விடாதொழுகுதல்.
**கடைமணி** - வேல் முதலியவற்றின் பூண், ஆராய்ச்சிமணி, கண்மணியின் கடைப்பக்கம், பரதவமகளிர் கையணிவகை.
**கடைமுகம்** - தலைவாயில்.
**கடைமுறை** - முடிவு, இழி
**கடைமை** - கீழ்மை.
**கடையம்** - இந்திராணி கூத்து.
**கடையர்** - வாயில்காப்போர், இழிந்தோர், மருதநில மக்கள்.
**கடையல்** - கடைதல், அலைக்கை.
**கடையாணி** - அச்சாணி.
**கடையுவா** - அமாவாசை.
**கடையூழி** - கலியுகம்.
**கடைவழி** - இறந்தபின் உயிர் செல்லும் வழி.
**கடைவாய்** - வாயின் கடை.
**கட்கண்** - ஊனக் கண்.
**கட்கம்** - வாள், அக்குள், காண்டாமிருகத்தின் கொம்பு.
**கட்குத்திக்கள்வன்** - விழித்திருக்கும்போதே ஏமாற்றுபவன்.
**கட்சி** - புகலிடம், காடு, பிளவு, பறவைக்கூடு, போர்க்களம், மக்கள் துயிலிடம், பக்கம். சார்பு.
**கட்செவி** - பாம்பு, ஆயில்யம்

***கட்டகம்*** - சித்திர வேலைப் பாடு, காந்தக் கல்.
***கட்டங்கம்*** - மழுவாயுதம்.
***கட்டங்கன்*** - சிவன்.
***கட்டடம்*** - கட்டிடம்.
***கட்டணம்*** - செலுத்தும் பணம், பல்லக்கு, பாடை.
***கட்டதரம்*** - மிகக் கொடியது.
***கட்டபாரை*** - இரும்புப்பாரை.
***கட்டம்*** - சிரமம், மலம், பீடை, காடு, நீராடுதுறை, கவருட்டத்து அறை, மோவாய், பகுதி.
***கட்டல்*** - களைபறித்தல், களவு, பறித்தல்.
***கட்டவிழ்தல்*** — முறுக்கு நெகிழ்தல்.
***கட்டழகு*** - பேரழகு.
***கட்டழல்*** - பெருநெருப்பு.
***கட்டழிதல்*** - கட்டுக்குலைதல், நிலைகெடுதல்.
***கட்டழித்தல்*** - காவலைக் கெடுத்தல், நிலைகெடுத்தல்.
***கட்டளை*** - அளவு, அச்சு, ஒன்றைப்போல் அமைக்கும் உரு, கோயிற்றருமம், விதி, துலாம், உரைகல், முறைமை, எல்லை, குதிரைக்குப் பூட்டும் கடிவாளம் முதலியன, உத்தரவு, கட்டுப்பாடு.
***கட்டளைக்கல்*** - உரைகல்.
***கட்டாடி*** - குறிசொல்வோன்,
***கட்டாணி*** - உலோபி, சமர்த்தன்.
***கட்டாண்மை*** - பெருவீரம்
***கட்டாந்தரை*** - வறண்டு இறுகிய தரை.
***கட்டாம்பாரை*** - மீன்வகை.
***கட்டாயம்*** - அவசியம், ஒரு பழைய வரி, பலாத்காரம்.
***கட்டாரி*** - குத்துவாள்.
***கட்டான்*** - ஒருவகை விளையாட்டு, சதுரக்கட்டம்.
***கட்டி*** - இறுகின பொருள், கற்கண்டு, வெல்லம், சிலந்திப் புண், பொன்.
***கட்டிக்காத்தல்*** - கவனித்துப் பாதுகாத்தல்.
***கட்டிக்கொடுத்தல்*** - கலியாணம் செய்துகொடுத்தல், பொதிந்து தருதல்.
***கட்டிக்கொள்ளுதல்*** - தழுவுதல், மணம் செய்துகொள்ளுதல், பற்றுதல், உடுத்தல்.
***கட்டிடம்*** - கட்டடம்.
***கட்டிலம்*** - உலோபம், கட்டுப்பாடு.
***கட்டியக்காரன்*** - கட்டியம் கூறிப் புகழ்வோன், கூத்தில் வரும் கோமாளி.
***கட்டியங்கூறுதல்*** — புகழ்
***கட்டியம்*** - அரசர் முதலியோரைக் குறித்துக் கூறும் புகழ் மொழித்தொடர்.
***கட்டில்*** - மஞ்சம், சிங்காதனம்.
***கட்டிளமை*** - காளைப்பருவம்.
***கட்டு*** - தளை, கட்டுப்பாடு, காவல், பொய்யுரை, வகுப்பு, உறுதி, குறிபார்த்தல், கற்பித்தல், வளைப்பு.

**கட்டுக்கடத்தல்** - வரம்பு கடத்தல்.
**கட்டுக்கதை**-கற்பனைக்கதை
**கட்டுக்கழுத்தி** - சுமங்கலி.
**கட்டுக்காரன்** - குறிசொல்லுவோன்.
**கட்டுக்காவல்** -கடுங்காவல்.
**கட்டுக்கிடை** - நாட்பட்ட சரக்கு, தேக்கம்.
**கட்டுச்சோறு** - வழிப் பயணத்துக்குக் கொண்டு செல்லும் சோறு.
**கட்டுதல்** - பிணித்தல், கற்பித்துக் கூறுதல், தடுத்தல், இயற்றுதல், அபசகுனமாதல், இறுகுதல், அமைத்தல், உகுத்தல், தழுவுதல், சூடுதல் வசப்படுத்தல், இறுத்தல்.
**கட்டுத்தறி** - விலங்குகளைக் கட்டும் தூண்.
**கட்டுப்படுதல்** - கட்டுக்குள் அடங்குதல், தடைப்படுதல்.
**கட்டுப்பாடு**-சமூக ஏற்பாடு, ஒப்பந்தம்.
**கட்டுப்புணை** - கட்டுமரம், மிதவை.
**கட்டுப்பெட்டி** - நாகரிகமறியாத தன்மை.
**கட்டுமரம்** - மிதவை.
**கட்டுமுகனை** - அதிகாரம்.
**கட்டுரை** -புனைந்துரை, உறுதிமொழி, பொய், வியாசம், பழமொழி.
**கட்டுரைத்தல்** -உறுதிகூறல்.
**கட்டுவாங்கம்** - மழு.
**கட்டுவிச்சி** - குறிகூறுபவள்.
**கட்டுவித்தி** - கட்டுவிச்சி.
**கட்டுவிரியன்** -பாம்புவகை.
**கட்டுறவி** - கட்டெறும்பு.
**கட்டூண்** - களவுசெய்து சீவித்தல், கட்டுச்சோறு.
**கட்டூர்** - பாசறை.
**கட்டெறும்பு** - எறும்புவகை.
**கட்டேறுதல்** ஆவேசம் வருதல்.
**கட்டை** - விறகு, தேய்ந்தது, திப்பி, உடல், குட்டை.
**கட்டைவிரல்** - பெருவிரல்.
**கட்டோடு** - முழுதும்.
**கட்படாம்** - யானைமுகத்து அணியும் முகமுடி.
**கட்பு**-களைபறித்தல், [illegible]
**கட்புலம்** - பார்வை.
**கணகணத்தல்** - வெப்பமுறுதல், ஒலித்தல்.
**கணகன்** - சோதிடன், கணக்கன்.
**கணக்கப்பிள்ளை** - ஊர்க்கணக்கன்.
**கணக்கழிவு** - நியாயவிரோதம்.
**கணக்காயர்** - ஆசிரியர்.
**கணக்கிடுதல்**- அளவிடுதல்.
**கணக்கு** - எண், கணித நூல், சூழ்ச்சி, அளவு, தொகை.
**கணந்துள்** - ஒரு பறவை.
**கணபங்கம்** - நொடியில் [illegible]
**கணப்பு** - தீச்சட்டி, குளிர் காயும் தீ.
**கணப்பெருமக்கள்** - ஊராட்சி மன்றத்தார்.
**கணப்பொழுது** - நொடிப் பொழுது.

*கணம்* - நொடி, கூட்டம், அற்பம், திப்பிலி, பேய், திரட்சி, பாரிடம்.
*கணவம்* - அரசமரம்.
*கணவன்*-தலைவன், புருஷன்.
*கணவர்* - கூட்டத்தார்.
*கணவாய்* - மலையிடுக்குவழி.
*கணவீரம்* - செவ்வலரி.
*கணனம்* - கிரகாதிகளைக் கணக்கிடுதல்.
*கணுதர்* - தார்க்கிகர், ஒரு வகை மதக்காரர்
*கணி* - சோதிடன், வேங்கை மரம், மருதநிலம், நூல் வல்லோன், சித்திரம் வல்லோன்.
*கணிகன்* - சோதிடன்.
*கணிகாரம்* - கோங்கு.
*கணிகை* - பொதுமகள்,
*கணிசம்* - அளவு, மதிப்பு, மேம்பாடு.
*கணிச்சி* - குந்தாலி, மழு, தோட்டி, உளி, கோடரி.
*கணிதம்* - கணக்கு நூல், அளவு, சோதிடம்.
*கணித்தல்* - கணக்கிடுதல், அளவு குறித்தல், மதித்தல், உண்டாக்குதல்.
*கணிப்பு* - அளவிடுதல்.
*கணிவன்* - சோதிடன்.
*கணு* - மரங்களின் கணு, அவயவப் பொருத்து, மூங்கில்.
*கணை* - திரட்சி, அம்பு, பூர நாள், திரண்ட வடிவு, காம்பு, சிவிகையின் வளைந்த கொம்பு, நோய் வகை, வளைதடி.
*கணைக்கால்* - முழங்காலிற்கும் பரட்டிற்கும் இடைப் பட்ட பாகம்.
*கணையமரம்* - கோட்டை மதில் வாயிலுக்கிடும் குறுக்கு மரம்.
*கணையம்* -கணையமரம், வளைதடி, தண்டாயுதம், யானைத் தூண், காவற்காடு, வாத்திய வகை.
*கணையாழி*-முத்திரை மோதிரம்.
*கண்* - விழி, பீலிக்கண், கண்றட்டம், இடம், துவாரம், அழகு, மூங்கில், முரசம் முதலிய வாத்தியங்களில் அடிக்குமிடம், பெருமை, ஞானம், ஏழாம் வேற்றுமை உருபு.
*கண்கட்டு வித்தை* - ஜால
*கண்காட்சி*-விநோதக்காட்சி
*கண்காணி* - மேல் விசாரணை செய்பவன், மேற்பார்வை செய்வோன்.
*கண்காணிப்பு* - மேற்பார்வை, காவல்.
*கண்கூடு* - நேரிற் காண்பது
*கண் சாய்தல்* - அறிவு தளர்தல், அன்பு குறைதல்
*கண்சிவத்தல்* - கோபித்தல்.
*கண்டகரப்பன்*-தொண்டை நோய்வகை.

**கண்டகம்** - முள், நீர்முள்ளி, வாள், கொடுமை, காடு, வயிரம்.

**கண்டகன்** - கொடியோன்.

**கண்டகி** - தீயவள், தாழை, மூங்கில், இலந்தை, ஒரு நதி.

**கண்டகசிலை** - சாளக் கிராமம்.

**கண்டசரம்** - கழுத்தணி வகை

**கண்டதுண்டம்** - பல துண்டம்.

**கண்டத்திரை** - பலநிறத் திரைச்சீலை.

**கண்டபடி** - மனம்போன விதம்.

**கண்டபேரண்டம்** - யானையைத் தூக்கிச் செல்ல வல்ல இருதலைப் பறவை.

**கண்டமாலை** - கழுத்தைச் சுற்றியுண்டாகும் புண், ஓர் கழுத்தணி.

**கண்டம்** - கழுத்து, குரல், கள்ளி, குன்றிவேர், தொண்டை, துண்டம், யானை கழுத்திலிடு கயிறு, பலநிறத் திரை, நிலத்தின் பெரும்பிரிவு, எழுத்தாணி, கவசம், கேந்திரம்.

**கண்டயம்** - வீரக்கழல்.

**கண்டல்** - தாழை, கடல்மீன் வகை, நீர்முள்ளி.

**கண்டறை** - கற்புழை.

**கண்டற்குயம்** - தாழை விழுது.

**கண்டனம்** - மறுப்பு.

**கண்டன்** - வீரன், கணவன், சோழர் பட்டப் பெயர்.

**கண்டாஞ்சி** - குடைவேல்.

**கண்டாபரன்** - குதிரைக் கழுத்துச் சுழிகள்.

**கண்டாமணி** - வீரக்கழல், பெருமணி.

**கண்டாவளி** - கழுத்துமாலை.

**கண்டாளம்** - எருதின் மேலிடும் பொதி.

**கண்டி** - உருத்திராக்கமாலை, கழுத்தணிவகை, எருமைக் கடா, ஒரு நிறையளவு, சிறுகீரை.

**கண்டிகை** - கழுத்தணி, வாகுவலயம், உருத்திராக்க மாலை, கடகம், நகைச் சிமிழ், ஒருவகைப் பறை.

**கண்டித்தல்** - துண்டித்தல், கடிந்து கூறுதல்.

**கண்டிப்பு** - கடிந்து கூறுதல், வரையறை, உ[illegible]

**கண்டியர்** - பாணர்.

**கண்டிருத்தல்** - தோன்றியிருத்தல்.

**கண்டீரவம்** - சிங்கம், சதுரக்கள்ளி.

**கண்டு** - கற்கண்டு, நூற் கண்டு.

**கண்டு பிடித்தல்** - தேடியறிதல்.

**கண்டுமுட்டு** - கண்டதனாலுண்டாகும் தீட்டு (இது சமணர் வழக்கு).

**கண்டுமுதல்** - மொத்த வரவு.

**கண்டுயிலுதல்** - தூங்குதல், பார்வை மங்குதல்.
**கண்டூதி** - தினவு.
**கண்டூயம்** - கண்டூ...
**கண்டை** - வீரக்கழல், சரிகை, நெசவுத்தாறு, யானையணி, சிறுதுகில், தோற்கருவி வகை.
**கண்ணயத்தல்** -விரும்புதல்.
**கண்ணயர்தல்** - உறங்குதல்.
**கண்ணராவி** - துக்க நிலை, கேவல நிலை.
**கண்ணரிதல்** - நீக்குதல்.
**கண்ணழித்தல்** - பதப்பொருள் கூறுதல்.
**கண்ணழிவு** - பதப்பொருள் கூறுதல், குறைவு, தாமதம்.
**கண்ணவர்** - அமைச்சர்.
**கண்ணறுதல்** - கருணையில்லாமற்போதல், நட்புக்குலை

**கண்ணறை** - துவாரம், குருடு, சிற்றறை, அகலம்.
**கண்ணறையன்** - கருடன், வன்னெஞ்சன்.
**கண்ணனன்** - புரோகிதன், கண்போன்றவன்.
**கண்ணாடி** - உருவம் பிரதிபிம்பிக்கும் பொருள்.
**கண்ணாம்பூச்சி** - ஒரு விளையாட்டு.
**கண்ணாடியிலை**-தார் விடுமுன் வாழைமரம் விடும் சிறிய இலை.
**கண்ணார்** - பகைவர்.

**கண்ணாளன்** - அன்பன், நாயகன்.
**கண்ணி** - தலைமாலை, போர்ப்பூ, பூங்கொத்து, பூமாலை, முடிச்சு, இசைப்பாட்டுவகை, கரிசிலாங்கண்ணி.
**கண்ணியம்** - கௌரவம், மரமஞ்சள்.
**கண்ணிரங்குதல்**-ஒலித்தல், அருள் செய்தல்.
**கண்ணிறை** - தூக்கம்.
**கண்ணிற்றல்** - எதிர்நிற்றல்.
**கண்ணுதல்** - கருதுதல், பொருந்துதல்,நெற்றிக்கண்ணுடைய சிவன்
**கண்ணுமை** - காட்சி.
**கண்ணுள்** - கூத்துவகை.

யக்காரன்.
**கண்ணுளன்** - கூத்தன்.
**கண்ணுளார்**- சித்திரக்காரர், கூத்தர், பாணர்.
**கண்ணுறுதல்**-எதிர்ப்படல், கிட்டுதல், பார்த்தல்.
**கண்ணுறுத்துதல்** பொருமையுண்டாதல்,கண்

**கண்ணுறை** - கறி, மசாலை, கண்ணுற்கண்டு அஞ்சும் அச்சம்.
**கண்ணூறு** - பார்வையால் உண்டாகும் தீங்கு, திருஷ்டிதோஷம்.
**கண்ணெழுத்தாளன்** – அரசனுடைய திருமுகம் எழுதுவோன்.

**கண்ணெறி** - கண்ணூறு, தோற் கருவிகளை வாசித்தல்.
**கண்ணேணி** - கணுக்களைப் படிகளாகக் கொண்ட மூங்கிலேணி.
**கண்ணேறு** - கண்ணூறு.
**கண்ணோட்டம்** - கண் பார்வை, தாட்சணியம், பார்வையிடுதல்.
**கண்திட்டி** - கண்ணூறு.
**கண்பஞ்சடைதல்** - கண்ணொளி மழுங்குதல்.
**கண்படல்** – தூங்குதல், பரவுதல், கண்ணோடுதல், கண் திருட்டியேற்படுதல்.
**கண்படை** - தூக்கம்.
**கண்பு** - சம்பங்கோரை.
**கண்பூத்தல்** - கண்ெ குன்றுதல்.
**கண்மணி** - கண்ணின் கரு மணி, உருத்திராக்கம்
**கண்மயக்கு** - கண்களாற் கவருதல், மாயத்தோற்றம்.
**கண்மாயம்** - கண்கட்டு
**கண்மாறல்** - தோன்றி மறைதல், நிலைகெடுதல், புறக் கணித்தல், புறங்கூறல்.
**கண்மிச்சில்** - கண்ணூறு.
**தண்முகில்** - இமை.
**கண்மை** - காட்சி, கண்ணோட்டம்.
**கண்வரி** - வெள்விழியிலுள்ள சிவந்த கோடு.
**கண்வளர்தல்** - தூங்குதல்.
**கண்விடுதூம்பு** - தோற் கருவி வகை.
**கண்விதுப்பழிதல்** - தலைவனைக் காண விரைந்து வருந்துதல்.
**கதண்டு** -
**கதம்** - கோபம், பாம்பு, ஓட்டம், வலி.
**கதம்பம்** - வெண்கடம்பு, மேகம், கலப்புணவு. வாசனைப்பொடி.
**கதம்பை** - தேங்காயின்மேல் மட்டைத் தும்பு.
**கதர்** - கைராட்டை நூலால் செய்த ஆடை.
**கதலி** - வாழை, தேற்றுமரம், காற்றுடி, துகிற்கொடி.
**கதலிகை** - ஆபரணவுறுப்பு,
**கதவம்** -
**கதவு** - காவல், மறைவு. வீட்டுக் கதவு.
**கதழ்தல்** - கோபித்தல், விரைதல், பிறத்தல், மிகுதல்.
**கதழ்வு** - விரைவு, மிகுதி, உக்கிரம், கலக்கம், ஒப்பு.
**கதறுதல்** - உரக்க அழுதல்.
**கதனம்** - கடுமை, கலக்கம்.
**கதாயுதம்** - தண்டாயுதம்.
**கதி** - நடை, வழி, புகலிடம், விரைவு, முத்தி, குதிரை நடை, உயிரொடுக்கம், இயல்பு, சாதனம், படலம்.
**கதித்தல்** - கோபித்தல், விரைதல், சொல்லுதல்,

நடத்தல், எழுதல், பருத்தல், அறிதல், மிகுதல்.
***கதிரகம்*** - கீழ்த்திசை.
***கதிரம்*** - அம்பு, கருங்காலி.
***கதிர்*** - கிரணம், ஒளி, சூரிய சந்திரர், பயிர்க்கதிர், நூல் நூற்கும் கரு, சக்கரத்தின் ஆர்.
***கதிர்க்கடவுள்*** - சூரியன்.
***கதிர்ச்சிலை*** - சூர்யகாந்தக் கல்.
***கதிர்த்தல்*** - பிரகாசித்தல், வெளிப்படுதல், மிகுதல், இறுமாத்தல்.
***கதிர்ப்பகை*** - இராகு கேதுக்கள், அல்லி.
***கதிர்ப்பு*** - பிரகாசம்.
***கதிர்வட்டம்*** - சூரியன்.
***கது*** - வடு, மலைப்பிளப்பு.
***கதுப்பு*** - கன்னம், கூந்தல், பசுக்கூட்டம்.
***கதுமெனல்*** - விரைவுக் குறிப்பு.
***கதுவாய்*** - குறைதல், வடுப்படுதல்.
***கதுவுதல்*** - பற்றுதல், பிரதிபலித்தல், கலங்குதல்.
***கதை*** - வரலாறு, தண்டாயுதம், பொய்வார்த்தை.
***கதைத்தல்*** - சொல்லுதல் பேசுதல்.
***கத்தனம்*** - கவசம்.
***கத்தபம்*** - கழுதை.
***கத்தம்*** - மலச்சேறு.
***கத்தரி*** - ஒரு செடி, கத்தரிக்கோல்.
***கத்தரிக்கோல்*** - கத்தரிக்கும் கருவி.
***கத்தரிகை*** - கத்தரிக்கோல்.
***கத்தரித்தல்*** - கத்தரியால் வெட்டிப் பிரித்தல், நெருக்குதல்.
***கத்தன்*** - செய்பவன், கடவுள்.
***கத்தா*** - கத்தன்.
***கத்தி*** - அறுக்கும் கருவி.
***கத்திகை*** - பூமாலை, குருக்கத்தி, கருக்கு, வாய்ச்சி, துகிற்கொடி.
***கத்தியம்*** - நல்லாடை வகை, வசனநடை.
***கத்தியோதம்*** - மின்மினி.
***கத்துதல்*** - சத்தமிடுதல், பிதற்றுதல்.
***கத்தூரி*** - மான்மதம்.
***கத்தூரிகை*** - வால்மிளகு.
***கந்தகம்*** - ஒருவகைத் தாதுப்பொருள், முருங்கை.
***கந்தசாலி*** - நெல்வகை.
***கந்தம்*** - கிழங்கு, வாசனை, வெள்ளைப்பூண்டு, பாதரசம்.
***கந்தரம்*** - கழுத்து, மேகம், கடற்பாசி, மலைக்குகை.
***கந்தருவநூல்*** - இசைநூல்.
***கந்தருவம்*** — ஒரு தேவசாதி, குதிரை, இசை, களவுமணம்.
***கந்தருவர்*** - ஒரு தேவசாதியார்.
***கந்தர்ப்பன்*** - மன்மதன்.
***கந்தம்*** - வாசனை.
***கந்தல்*** - கிழிந்த ஆடை.
***கந்தவகன்*** - வாயுதேவன்.
***கந்தவருக்கம்*** - வாசனைத் திரவியங்கள்.

**கந்தவாரம்** - அந்தப்புரம்.
**கந்தழி** - கடவுள்.
**கந்தளம்** - கவசம்.
**கந்தன்** - முருகக்கடவுள், அருகதேவன்.
**கந்தாயம்** - ஆதாயம், அறுவடைக்காலம், தவணை.
**கந்தாரம்** - கள், ஒரு பண்.
**கந்தி** - மரகதம், ஆரியாங்கனை, கந்தகம், துவரை, கமுகு, இடைச்செருகல்.
**கந்தித்தல்** - மணத்தல்.
**கந்திற்பாவை** - தூணில் பெண் வடிவாயமைத்த தெய்வம்.
**கந்து** - தூண், யானைகட்டும் தறி, பற்றுக்கோடு, ஆதீண்டுகுற்றி, தெய்வமுறையும் குறியிடம், பதர், குதிரையின் முழுப்பாய்சல்.
**கந்துகம்** - பந்து, குதிரை.
**கந்துகவரி** - மகளிர் பந்தாட்டப்பாட்டு.
**கந்துள்** - கரி.
**கந்தை** - கிழிந்த ஆடை.
**கபடநாடகம்** - போலிநடிப்பு.
**கபடம்** - வஞ்சகம்.
**கபம்** - கோழை, மார்ச்சளி, சிலேட்டுமம்.
**கபர்த்தம்** - சிவபிரான்சடை.
**கபர்த்தி** - சிவன்.
**கபளம்** - கவளம்.
**கபாடம்** - கதவு, காவல், பொதி.
**கபாத்து** - உடற் பயிற்சி.
**கபாய்** - நிலையங்கி.
**கபாலம்** - தலையோடு.
**கபாலி** - சிவன்.
**கபி** - குரங்கு.
**கபிஞ்சலம்** - காடை.
**கபித்தம்** - அபிநய வகை, விளாமரம்.
**கபிலம்** - பழுப்பு நிறம், கரிக்குருவி.
**கபிலர்** - உருத்திரர் புலவர்.
**கபிலன்** - ஒரு முனிவன், சங்க காலப் புலவருள் ஒருவர்.
**கபிலை** - பசு, ஏற்ற வகை.
**கபோதகத்தலை** - கொடுங்கையைத் தாங்கும் பலகை.
**கபோதகம்** - புரு, கொடுங்கை.
**கபோதம்** - கபோதகம்.
**கபோதி** - கண்ணிலான், அறிவிலி.
**கபோலம்** — கன்னம்.
**கப்படம்** - ஆடை, அரை.
**கப்பணம்** - இருப்பு முள், ஒரு கழுத்தணி, காப்புக்கயிறு, அரி கண்டம்.
**கப்பம்** - திரைப்பொருள்.
**கப்பரை** - பிச்சைக் கலம், மட்கலம், கிடாரம்.
**கப்பல்** - மரக்கலம்.
**கப்பி** - கயிறிழுக்கும் கருவி, தெள்ளி நீக்கும் பொருள்.
**கப்பித்தல்** - கவர்படுதல், பெருத்தல்.
**கப்பு** - கவர் கொம்பு, பிளவு, சிறு கிளை, சிறு தூண், தோள், கவர்ச்சி, ஆதாரம், சாயம்.

**கப்புதல்** - மூடிக் கொள்ளல், வாய் கொள்ளும் அளவும் இட்டு உண்ணல்.
**கப்புரம்** - கர்ப்பூரம்.
**கமகம்** - இசையுறுப்பு.
**கமஞ்சூல்** - நீர் நிறைந்த மேகம்.
**கமடம்** - ஆமை.
**கமண்டலம்** - கரகம்.
**கமண்டலு** - கரகம்.
**கமநம்** - நடை, சேர்தல்
**கமம்** - நிறைவு, விளை நிலம்.
**கமர்** - நிலப் பிளவு.
**கமலம்** - நீர், தாமரை, பட்டை தீர்ந்த வயிரம், ஒரு பேரெண்.
**கமழ்தல்** - மணத்தல், தோன்றுதல்.
**கமறுதல்** - மிகவேகுதல், மிக வொலித்தல்.
**கமித்தல்** - நடத்தல், தாங்குதல், பொறுத்தல்.
**கமுகு** - பாக்கு மரம்.
**கமுக்கட்டு** - அக்குள்.
**கமை** - பொறுமை.
**கம்** - நீர், மேகம், காற்று, பிரமன், வீட்டின்பம், தலை, தொழில், வானம், தேவலோகம், நறுமணக் குறிப்பு, ஆடு, விரைவு, வெண்மை.
**கம்பட்டம்** - நாணயம்.
**கம்பமா** - யானை.
**கம்பம்** - தூண், அசைவு, நடுக்கம்.
**கம்பம்புல்** - புல்வகை.
**கம்பலம்** - கம்பளி, மேற்கட்டி, பறவை வகை.
**கம்பலை** - ஒலி, ஆரவாரம், துன்பம், மருத நிலம்.
**கம்பல்** - ஆடை வகை, கம்முதல்.
**கம்பளம்** - கம்பளி, செம்மறிக் கடா.
**கம்பளர்** - மருதநில மக்கள், தொட்டிய சாதியார்.
**கம்பளி** - உரோம ஆடை.
**கம்பனம்** - அசைவு, நடுக்கம்.
**கம்பி** - காதணி வகை, உலோகக் கம்பி, கடிவாளம், ஆடையின் சிறு கரை.
**கம்பிதம்** - நடுக்கம்.
**கம்பித்தல்** - அசைதல், நடுங்குதல், முழங்குதல் அசைத்தல்.
**கம்பிநீட்டுதல்** - ஓடி விடுதல்.
**கம்பீரம்** - வீறு, ஆழம்,
**கம்பு** - கழி, ஒரு தானியம், சங்கு, சிறு கிளை.
**கம்புகட்டி** - ஏரி நீர்பாய்ச்சுபவன்.
**கம்புகம்** - அபின்.
**கம்புள்** - சம்பங்கோழி, வானம்பாடி, சங்கு.
**கம்பை** - ஏட்டுச் சுவடிச் சட்டம், சட்டம்.
**கம்மகாரர்** - கப்பலோட்டிகள், தொழில் செய்வோர்.
**கம்மம்** - கம்மியர் தொழில், சிற்பம்.

***கம்மல்*** - காதணி வகை, குரலடைப்பு, குறைவு, மந்தாரம்.
***கம்மாலை*** - உலோக செய்யுமிடம்.
***கம்மாளன்*** - உலோக வேலை செய்வோன்.
***கம்மிய நூல்*** - சிற்ப நூல்.
***கம்மியன்*** - கம்மாளன், நெய்பவன், தொழிலாளி.
***கய*** - பெரிய, மெல்லிய, பெருமை.
***கயக்கம்*** - வாட்டம், கலக்கம், இடையீடு.
***கயக்கு*** - கயக்கம்.
***கயத்தி*** - கொடியவள், கீழ்மகள்.
***கயந்தலை*** - யானைக்கன்று, மெல்லிய தலை.
***கயப்பூ*** - நீர்ப்பூ.
***கயமுனி*** - யானைக் கன்று.
***கயமை*** - கீழ்மை, கொடுமை.
***கயம்*** - குளம், பெருமை, மென்மை, ஆழம், மடு, குறைவு, ஒரு நோய், யானை, கீழ்மை, கீழ்மக்கள், கரிக் குருவி, தேய்வு.
***கயர்*** - துவர்ப்பு, கறையுண்டாக்கும் துவருள்ள பொருள்.
***கயல்*** - கெண்டை மீன்.
***கயவன்*** - கொடியவன், கீழ்மகன்.
***கயவாய்*** - கரிக் குருவி, எருமை, நதி முகம், பெரிய வாய்.
***கயவு*** - களவு, கரிக் குருவி, கீழ்மை.
***கயிரவம்*** - ஆம்பல்.
***கயிரிகம்*** - காவிக் கல், மலைத் தாது.
***கயில்*** - பிடர், பூட்டுவாய்.
***கயிறு*** - பாசம், மங்கல நாண், நூல், சாத்திரம்.
***கயிற்கடை*** - கோக்குவாய்.
***கயிற்றரவு*** - கயிற்றில் தோன்றும் பாம்புணர்ச்சி.
***கயினி*** - அந்த நாள்.
***கயினு*** - கைம் பெண்.
***கர*** - ஓராண்டு.
***கரகம்*** - கமண்டலம், ஆலங்கட்டி, கங்கை, நீர்த்துளி, பூங்குடம்.
***கரகரத்தல்*** - உறுத்துதல், அரிப்புண்டாதல்.
***கரகரப்பு*** - அலைக் கழிப்பு, தொண்டையரிப்பு.
***கரடகம்*** - வஞ்சகம்.
***கரடம்*** - யானை மதம் பாய் சுவடு, காக்கை.
***கரடி*** - ஒரு விலங்கு, சிலம்பம், புரட்டு, கரடிப்பறை.
***கரடிகை*** - கரடி கத்துவது போல் ஓசையுண்டாக்கும் பறை.
***கரடு*** - முரடு, மரக்கணு, ஒரு வகை முத்து, மணிக்கட்டு, காற்பரடு, வளர்ச்சியற்றது.
***கரடு முருடு*** - ஒழுங்கின்மை.
***கரணத்தான்*** - கணக்கன்.
***கரணத்தியலவர்*** - எண்பேராயத்தாருள் ஒரு சாரார்.

*கரணம்* - இந்திரியம், கைத்தொழில், அந்தக்கரணம், மணச் சடங்கு, மனம், கூத்து விகற்பம், கருவி, தலைகிழாய்ப்பாய்தல்.
*கரணன்* - கணக்கன்.
*கரணி* - மருந்து.
*கரணை* - துண்டு, கரண்டி.
*கரண்டகம்* - நீர்க்காக்கை, அணிகலச் செப்பு, கரண்டி, பூக்குடலை, சுண்ணும்புச்
*கரண்டி* - முகந்தெடுக்கும் கருவி.
*கரண்டுதல்* - சுரண்டுதல்.
*கரண்டை* - முனிவர் வாழிடம், குகை, கமண்டலம்.
*கரதலம்* - உள்ளங்கை.
*கரதலாமலகம்* - உள்ளங்கை நெல்லிக்கனி.
*கரந்துபடை* - நீர்க்கால், கற்படுத்து மூடப்பட்ட நகர்.
*கரந்தை* - திருநீற்றுப்பச்சை, நிரைமீட்சியாகிய துறை, கொட்டைக் கரந்தை.
*கரந்தையார்* - நிரைமீட்போர்.
*கரபம்* - யானை.
*கரப்பான்* - ஒருவகைப் பூச்சி, சொறி புண் வகை.
*கரப்பு* - மறைத்தல், வஞ்சகம், களவு, மீன் பிடிக்கும் கூடை, மத்து, கரப்பான் பூச்சி.
*கரமஞ்சரி* - நாயுருவி.
*கரம்* - கை, கழுதை, நஞ்சு, கிரணம், கப்பம்.
*கரம்பு* - பாழ்நிலம்,தரிசு.
*கரம்பை* - கரம்பு.
*கரவடம்* - வஞ்சகம், களவு.
*கரவர்* - கள்வர்.
*கரவல்* - கொடாது மறைத்தல்.
*கரவாளம்* – கைவாள்.
*கரவீரம்* - அலரி.
*கரவு* - வஞ்சனை, மறைப்பு, களவு, பொய், முதலை.
*கரளம்* - நஞ்சு, எட்டி.
*கரா* - முதலை.
*கராம்* - முதலை, ஆண்முதலை.
*கராளம்* - தீக்குணம், பயங்கரம்.
*கரி* - எரிந்த கட்டை, மைஞ்சு, யானை, சான்று, சான்று கூறுவோர், பெட்டைக் கழுதை
*கரிக் குருவி* - குருவி வகை.
*கரிசலாங்கண்ணி* - கையாந்தகரைப் பூண்டு.
*கரிசனம்* - யானைக் கோடு, சிரத்தை, அன்பு.
*கரிசு* - குற்றம், பாவம்.
*கரிசை* - நானூறு மரக்கால், அளவு
*கரிஞ்சம்* - கிரௌஞ்சம், அன்றில் பறவை.
*கரிணி* - பெண்யானை, மலைக் குகை, மலை.
*கரிநாள்* - தீய நாள்.
*கரிதல்* - தீய்தல்.
*கரித்தல்* - கரியாக்குதல், உப்புக் கரித்தல், வெறுத்தல்.

**கரிப்பு** - காரம்,

**கரிமா** - எட்டுவகைச் களுள் ஒன்று (மிக்க கன மடைதல்).

**கரியபோளம்** - ஒரு மருந்துச் சரக்கு, ஒரு பூண்டு.

**கரியர்** - நடுநிலையாகப் பேசு பவர், சாட்சிக்காரர், கரிய நிறமுடையவர்.

**கரியல்** - ஒருவகை ஆடை, வளரா மரம்.

**கரில்** - குற்றம், கொடுமை, கார்ப்பு.

**கரீரம்** - மிடா, அகத்தி, கும்பராசி, மூங்கில் முளை, கருவேல், யானைத் தந்தத் தின் அடிப்பகுதி.

**கரு** - கருப்பம், முட்டைக் கரு, பிறப்பு, அச்சுக் கரு, நிமித்த காரணம், ஆயுதப் பல், கருமை, குப்பை மேடு, உடம்பு, குழந்தை, குட்டி, நடுப்பகுதி, கருப் பொருள், பரமாணு.

**கருகல்** - தீய்தல், மரகதக் குற்றம், கருகிய பொருள்.

**கருகூலம்** - கருவூலம்.

**கருக்கட்டுதல்** - அச்சுக்கரு, அமைத்தல், மழைக் குறி யுண்டாதல்.

**கருக்கம்** - கார்மேகம்.

**கருக்கல்** - இருள், மழை யிருட்டு, மங்கின இருட்டு.

**கருக்காய்** - பிஞ்சு, நெற்பதர்.

**கருக்குதல்** - கருகச் செய் தல், எரித்தல்.

**கருக்கு** - கூர்மை, ஆயுதப் பற்கூர்மை, அழகு, நேர்மை, பொறித்த ரம்,

**கருக்குழி** - கர்ப்பாசயம்.

**கருங்கலம்** - மட்பாத்திரம்.

**கருங்கற்றலை** - கடல் மீன் வகை.

**கருங்காடு** - சுடுகாடு.

**கருங்காலி** - ஓர் மரம்.

**கருங் கேசம்** - வெண் கலம்.

**கருங்கை** - வலியகை.

**கருஞ்சனம்** - முருங்கை.

**கருடக்கல்** - பாம்பின் விடத் தைப் போக்கும் கல்.

**கருட கம்பம்** - திருமால் கோயில் கொடித் தூண்.

**கருட சேவை** - திருமால் கருடன் மீது பவனி வரும் விழா.

**கருடன்** - பருந்து வகை, சொல்லங்கோவைச் செடி.

**கருணி** - குகை.

**கன்** - கணக்கன்.

**கருணை** - அருள், ஒரு கிழங்கு

**கருதலர்** - பகைவர்.

**கருதளவை** - அநுமானப் பிரமாணம்.

**கருதல்** - நினைத்தல், மதித் தல், அநும்ானம்.

**கருதுதல்** - கருதல்.

**கருத்தன்** - செய்வோன், கட வுள்.

**கருத்தா** - கருத்தன்.

**கருத்து** - எண்ணம், கவனம், கொள்கை, இச்சை, மனம், பயன்.

**கருத்துரை** - உட்பொருள், உள்ளுறை.

**கருநெய்தல்** - நீலோற்பலம்.

**கருநெல்லி** - ஒரு மரம்.

**கருநெறி** - நெருப்பு.

**கருந்தரை** - பாழ்நிலம்.

**கருந்தலை** - கார்ப்பங்கு, முடிவு.

**கருந்தனம்** -பொன், பணம்.

**கருந்தாது** - இரும்பு.

**கருந்தும்பை** -பேய்மருட்டி.

**கருந்தொழில்** - கொலைத் தொழில், தச்சு வேலை.

**கருப்பக்கிரகம்** - கோயிலில் சுவாமியுள்ள அறை.

**கருப்பட்டி** - பனைவெல்லம்.

**கருப்பம்**-உட்பொருள், கரு.

**கருப்பாலை** – கருப்பாட்டும்

**கருப்பு**-பஞ்சம்.

**கருப்புக்கட்டி** - வெல்லம்.

**கருப்புரம்** - கர்ப்பூரம்.

**கருப்பூரம்** - கர்ப்பூரம்.

**கருப்பை** - கர்ப்பாசயம், எலி.

**கருப்பொருள்** - காரணப் பொருள். ஐந்திணைக்கும் உரிய தெய்வம் முதலிய பொருள்கள்.

**கருமகன்** - கொல்லன்.

**கருமகாண்டி** - வைதிகக் கிரியைகளை அனுஷ்டிப்பவன்.

**கருமணி** - கண்மணி.

**கருமம்** - செயல், நல்வினை வினைப் பயன், கடமைச் செயல்.

**கருமயோகம்** - பயன் கருதாது செய்யும் கடமை, உடல் நிலைத்தற்காகச் செய்யும் யோகம்.

**கருமவிதிகள்** - அதிகாரிகள், எண்பேராயத்தாருள் ஒரு சாரார்.

**கருமவினைஞன்**-புரோகிதன்.

**கருமா** – பன்றி, யானை.

**கருமாந்தரம்** - இறந்தவர், பொருட்டுச் செய்யும் சடங்கு.

**கருமான்**-ஆண்மான், பன்றி, கொல்லன்.

**கருமி** - பரவி, உலோபி.

**கருமுகை** - சாதிமல்லிகை சிறு சண்பகம், இருவாட்சி.

**கருமேனி** - கரியவுடல். ஸ்தூல உடம்பு.

**கருமை** -கறுப்பு, பெருமை, வலிமை, கொடுமை, பசுமை, வெள்ளாடு.

**கரும்பணி** - பெண்களின் தோளில் கரும்பு வடிவாக வரையப்படும் கோலம்.

**கரும்பிள்ளை** - காக்கை.

**கரும்பு** - ஒரு பயிர், புனர்பூசம்.

**கரும்புல்** - பனை.

**கரும்புள்** - வண்டு.

**கரும்பொன்** - இருப்பு.

**கருவங்கம்** - காரீயம்.

**கருவடம்** - ஆறுசூழ்ந்தஊர்.

*கருவலி* - மிகுந்தவலிமை.
*கருவறுத்தல்* - வேரோடு

*கருவன்* - சங்கார (ருத்திரன்).
*கருவாடு* - உப்பு மீன் துண்டம்.
*கருவாப்பட்டை* - இலவங்கப்பட்டை,
*கருவாலி* - ஒருவகை மரம்.
*கருவி* — ஆயுதம், சாதனம், கேடகம், குதிரைமேலிடும் தவிசு, குதிரைச் சம்மட்டி, உடை, யாழ், சித்திரம், தொகுதி, கூட்டம்.
*கருவிகரணங்கள்* - யங்களும் மனமும்.
*கருவிநூல்* - கல்வி பெருகுதற்குரிய நூல்
*கருவிமாக்கள்* - பாணர்.
*கருவிலூகம்* - குரங்குப் பொறி.
*கருவிழி* - கண்மணி.
*கருவிளம்* - வில்வம், காக்கட்டான்.
*கருவிளை* - காக்கணம்.
*கருவினை* — பாவம்.
*கருவீரல்* - பத்தாசயம்.
*கருவுயிர்த்தல்* - ஈனுதல்.
*கருவுறுத்தல்*-கருத்தரித்தல்.
*கருவூலம்* — பொக்கிஷம்.
*கருவை* - வரகு வைக்கோல்.
*கருள்* - கறுப்பு, இருள், குற்றம், கோபம், நல்லாடை.
*கருனை* - பொரிக்கறி.
*கரேணு* - பெண் யானை.
*கரை* - எல்லை, நீர்க்கரை, ஆடை விளிம்பு, இடம், சொல்.
*கரைதல்* - கரைந்துபோதல், உருகுதல், இளைத்தல், வருந்துதல், அழுதல், காக்கையின் கூப்பீடு, ஒலித்தல், அழைத்தல், சொல்லுதல்.
*கரையான்* - வலைஞன்
*கரையேறுதல்* - நற்கதியடைதல்.
*கரோடி* - கடத்தல், சிரமாலை.
*கர்க்கசம்* - கடினமானது.
*கர்க்கடகம்* — நண்டு, ஓர் இராசி.
*கர்க்கரி* - தயிர்கடை தாழி, கரகம்.
*கர்க்கர்* - வானசாஸ்திரம் இயற்றியமுனிவர்.
*கர்ச்சனை* - பேரொலி.
*கர்ச்சித்தல்* - முழங்குதல்.
*கர்ச்சிப்பு* - முழக்கம்.
*கர்ச்சூரம்* - பேரீந்து, கழற்கொடி.
*கர்ணகடூரம்* - காதிற்குக் கடுமையானது.
*கர்ணபரம்பரை* - கேள்வி வழியாக வந்த செய்தி.
*கர்ணம்* - காது, கிராமக் கணக்கன்.
- தாமரைப் பொகுட்டு.
*கர்த்தபம்* - கழுதை.
*கர்த்தவியம்* - செய்யத் தக்கது.
*கர்த்தன்* - செய்வோன், தலைவன், கடவுள்.

*கர்ப்பிணி* - கருக்கொண்டவள்.
*கர்ப்பூரம்* - சூடம்.
*கர்ப்பூரவல்லி* - ஒருமருந்துச் செடி.
*கர்ப்போட்டம்* - மேகங்கள்.
*கர்மகாண்டம்* - வேதத்தில் கர்மங்களைப் பற்றிக் கூறும் பகுதி.
*கர்மம்* - கருமம்.
*கர்வம்* - செருக்கு.
*கர்வி* - செருக்குடையவன்.
*கலகம்* - குழப்பம், சண்டை.
*கலகக்குருவி* - மீன்குத்தி.
*கலகலம்* - பறவை ஒலி.
*கலக்கம்* - கலங்குதல், குழப்பம், அச்சம், அழுகை, புத்தி மாறுாட்டம்.
*கலக்குதல்* - கலங்கச்செய்தல்.
*கலங்கரைவிளக்கம்* - துறைமுக விளக்குக் கூண்டு
*கலங்கல்* - துன்புறுதல், குழம்புதல், அஞ்சுதல்.
*கலங்குல்* - கலங்கல்.
*கலங்கொம்பு*-மான்கொம்பு.
*கலசமுனி* - அகத்தியன்.
*கலசம்* - குடம், தூபி, ணம்.
*கலணை* - சேணம்.
*கலதி* - மூதேவி, கேடு, தீக்குணமுடையவள், வழுக்கைநோய்.
*கலத்தல்* - சேர்த்தல், புணர்தல், பரத்தல்.
*கலபம்* - மயில் தோகை.
*கலப்பு* - சேர்க்கை, நட்பு.
*கலப்பை* - உழுபடை, வாத்தியங்கள் வைக்கும் பை.
*கலமர்* - பாணர்.
*கலமக்குதல்* - உழக்குதல்.
*கலம்* - பாத்திரம், உண்கலம். கப்பல், அணிகலம், யாழ், ஒரு முகத்தலளவை, இரேவதி. உழுபடை, ஆயுதம்.
*கலம்பகம்* - கலவை, ஒரு பிரபந்தம், ஒரு கணித நூல்.
*கலயம்* - மட்பாத்திரம்.
*கலர்* — கீழ் மக்கள்.
*கலவம்* - மயில்தோகை, ஒருவகை இடையணி.
*கலவரம்* - மனக்கலக்கம்.
*கலவர்* - மனக்கலமாக்கள், நெய்தல் நிலமக்கள், படைவீரர்.
*கலவன்* - கலப்பானது.
*கலவார்* - பகைவர்.
*கலவி* - புணர்ச்சி.
*கலவிருக்கை* - பண்டகசாலை, விருப்பமான இடம்.
*கலவு* - மூட்டுவாய்.
*கலவுதல்* - கலத்தல்.
*கலவை* - சந்தனக் குழம்பு, கலப்பான பொருள்.
*கலனம்* - வாய் பிதற்றுதல், ந்திரிய
*கலனரசு* - தாலி.
*கலனை* - சேணம், கலப்பை.
*கலன்* - கலம்.
*கலாநிதி* - கல்விக் களஞ்சியம், சந்திரன்.
*கலாபம்* - மயில் தோகை, பீலிக்குடை, பதினாறுகோவையுள்ள மாதரிடையணி.

**கலாபி** - மயில்.
**கலாம்** - போர், கொடுமை மாறுபாடு.
**கலாய்த்தல்** - கலகஞ்செய்தல்.
**கலாவம்** – கலாபம்.
**கலாவுதல்** -கலத்தல், கலக்கமடைதல், சினமடைதல்.
**கலி**-ஒலி, முழக்கம், துன்பம், கலிப்பா, வறுமை, போர், மகிழ்ச்சி, கலியுகம், கடல், செருக்கு, தழைத்தல், துலக்கம், கலித்தொகை, சனி.
**கலிக்கம்** - சன்னிக் காய்ச்சலுக்குக் கணமருந்து.
**கலிங்கம்** - ஆடை, வானம்பாடி,ஊர்க்குருவி, ஒருநாடு.
**கலிங்கல்** - ஏரிமதகு, நீர்வழியும் அணை.
**கலிங்கு** - கலிங்கல்.
**கலிசம்** - வன்னிமரம்.
**கலித்தல்** -தழைத்தல், ஒலித்தல், செழித்தல், மகிழ்தல், கர்வமடைதல், விரைதல், நெருங்கியிருத்தல்.
**கலிநடம்** - கழாய்க்கூத்து.
**கலிபுருடன்** - சனி.
**கலிப்பு** - ஒலித்தல், பொலிவு,
**கலியாணம்** - திருமணம்.
**கலியாணமுருங்கை** - முள்முருங்கைமரம்.
**கலியுகம்** - நான்காம்யுகம்.
**கலிழ்** - கலங்கல்நீர்.
**கலிழ்தல்** - புடைபெயர்தல், ஒழுகுதல், அழுதல்.
**கலினம்** - கடிவாளம்.
**கலினி** – திப்பலி.
**கலினை** - மிளகு, கொள்ளு, கடிவாளம்.
**கலீரம்** - முருக்கு.
**கலுடம்** - பாவம்.
**கலுவடம்** - பூவரும்பு.
**கலுவம்** - மருந்தரைக்கும் முட்டை வடிவமான குழியம்மி.
**கலுழன்** - கருடன்,
**கலுழி** - கலக்கம், கண்ணீர், காட்டாறு, கலங்கல் நீர், வெள்ளம்.
**கலுழ்**-கலக்கம், நீர்க்கலக்கம், அழுகை.
**கலுழ்ச்சி** - துக்கம்,அழுகை.
**கலுழ்தல்** - அழுதல், ஒழுகுதல், உருகுதல்.
**கலை** - ஆண்மான், ஆடை, சுறுமீன், ஆண்முசு, கல்வி, சாத்திரம், மகராசி, மூச்சு, சந்திரனொளி, பகுதி, காலஅளவு, இடையணி, உடல், கலவி, மரவயிரம்.கர்ப்பூரம்.
**கலைக்கணாளர்** - அமைச்சர்.
**கலைஞன்** - கல்விமான்.
**கலைஞானம்**-நூலறிவு.
**கலைதல்** - நிலைகெடுதல், அழிதல்.
**கலைத்தொழில்** -யாழ்வாசித்தற்குரிய செய்கைகள்.
**கலைமகள்** - சரசுவதி.
**கலைமடந்தை** - கலைமகள்.
**கலைமலைவு** - நூல்களிற்கூறப்பட்டவற்றோடு மாறுபடுதல்.
**கலையினன்** - சந்திரன்.

**கலையூர்தி** - துர்க்கை.
**கலையேறுதல்** - தெய்வசக்தி யுண்டாதல்.
**கலைவல்லார்** - புலவர், பரத்தையர்.
**கலைவாகன்** - வாயு.
**கல்** - பாறை, மலை, காவிக்கல், இரத்தினம், முத்து, நடுகல்.
**கல்நார்** - ஒருமருந்துச்சரக்கு.
**கல்மழை** - ஆலங்கட்டிமழை.
**கல்மூங்கில்** - ஒருவகைமூங்கில்.
**கல்யாணம்** - மணம், நன்மை, பொன், நற்குணம், சுபகாரியம்.
**கல்லகம்** - மலை.
**கல்லடார்** - பிடிக்கும் பொறி
**கல்லதர்** - பருக்கைக்கல்
**கல்லல்** - குழப்பம்.
**கல்லவடம்** - ஒருவகைப்பறை
**கல்லறை** - குகை, பிணக்குழி.
**கல்லன்** - தீயவன்.
**கல்லாடை** - காவித்துணி.
**கல்லாரம்** - செங்கழுநீர், கருங்குவளை
**கல்லாலம்** - ஆலமரவகை, குருக்கத்தி.
**கல்லி** - ஆமை, ஊர்க்குருவி.
**கல்லிழைத்தல்** - இரத்தினக் கற்களைப்பதித்தல்.
**கல்லீரல்** - பித்தாசயம்.
**கல்லுதல்** - தோண்டுதல், அரித்தல், ஒலித்தல்.
**கல்லுப்பு** - ஒருவகை உப்பு.
**கல்லூரி** - கலாசாலை.
**கல்லேறு** - கல்லெறிதல், மூத்துக் குற்றங்கள் ஒன்று.
**கல்லை** - தையல்இலைக்கலம், அவதூறு.
**கல்லோலம்** - அலை.
**கல்வி** - கற்றல், கலையறிவு.
**கல்விமான்** - கற்றவன்.
**கல்வெட்டு** - சிலாசாசனம்,
**கவசம்** - போர்வீரன் அணியும் இரும்புச்சட்டை, இரட்டை.
**கவசித்தல்** - சீலைமண் செய்தல்
**கவடி** - பலகறை, ஒருவகை விளையாட்டு, வெள்வரகு, கபடமுள்ளவன்.
**கவடு** - மரக்கிளை, பிளவு, யானைக் கழுத்திலிடும் கயிறு, கபடம்.
**கவட்டை** - இருபிரிவாகப்பிரிந்த கிளை, பிரிவு.
**கவணை** - கல்லெறிகவண், மாட்டுக்குத் தீனிவைக்கும் இடம்.
**கவண்** - கவணை.
**கவந்தம்** - தலையற்றவுடல், பேய்.
**கவந்தி** - கந்தையாலாகிய மெத்தைப்போர்வை.
**கவம்** - கபம்.
**கவயமா** - காட்டுப்பசு.
**கவயம்** - காட்டுப்பசு, கவசம்.
**கவரி** - வெண்சாமரை, கவரிமான், எருமை, தேர்.
**கவரிமா** - மான்வகை.
**கவர்** - பலவாகப்பிரிதல், வஞ்சகம், பிரியும்கிளை, வாழை.
**கவர்ச்சி** - இழுக்கை, அழகு.

***கவர்தல்*** - விரும்புதல், கொள்ளையிடுதல், அகப்படுதல், நுகர்தல், முயங்குதல், அழைத்தல், பிரித்தல், மாறுபடுதல்.
***கவர்த்தல்*** - கிளைவிடுதல், பிரிவுபடுதல், மாறுபடுதல்.
***கவர்நெறி*** - கிளைவழி.
***கவர்ப்பு*** - பலவாகப்பிரிதல்.
***கவர்வு*** - விருப்பம், துக்கம்.
***கவலுதல்*** - மனம் வருந்தல்.
***கவலை*** - மனச் சஞ்சலம், அக்கறை, பல நினைவு, கவரித்த வழி, அச்சம், பல தெருக்கள் கூடுமிடம், ஒரு வகைக் கிழங்குக் கொடி, கபிலையேற்றம்.
***கவல்*** - கவ...
***கவவு*** - உள்ளீடு, விருப்பம், முயக்கம், அகத்திடுகை.
***கவவுக்கை*** - அணைத்தகை.
***கவழிகை*** - திரைச்சீலை.
***கவளம்*** - ஒருவா யுணவு, சோறு, யானைத் தீனி.
***கவளி*** - புத்தகக் கட்டு, வெற்றிலைக் கட்டு.
***கவளிகை*** - கவளி.
***கவளீகரித்தல்*** - விழுங்குதல்.
***கவறல்*** - வருந்துதல்.
***கவருடல்*** - சூதாடுதல்.
***கவறு*** - சூது, சூதாடு கருவி.
***கவற்சி*** - வருத்தம்.
***கவற்றி*** - கவற்சி, விருப்பம்.
***கவற்றுதல்*** - கவலையடையச் செய்தல்.
***கவனம்*** - கருத்து, வேகம், போர், வெப்பம், கலக்கம், படை, காடு, செய்யுளியற்றல்.
***கவனித்தல்*** - கருத்தூன்றியறிதல்.
***கவான்*** - மலைப்பக்கம், தொடை, குகை, கள்வன், திரள்.
***கவி*** - புலவன், ஞானி, சுக்கிரன், குரங்கு, பாட்டு.
***கவிகம்*** - கடிவாள இரும்பு.
***கவிகை*** - குடை, சுற்றிக் கொள்ளுதல், வளைவு, நன்மை தீமை.
***கவிஞன்*** - பாவலன், சுக்கிரன்.
***கவிதல்*** - மூடுதல், வளைந்து கொள்ளுதல், கருத்தூன்றுதல்.
***கவித்தல்*** - வளைந்து மூடுதல், சூட்டுதல்.
***கவிதை*** - பாட்டு.
***கவித்தம்*** - விளாமரம், கைமுட்டி, அபிநயத்தில் ஒரு வகை, கைக் குறி.
***கவிப்பர்*** - வணிகருள் ஒரு வகையார்.
***கவிப்பு*** - மூடுதல், குடை, மனம் பற்றுகை.
***கவியம்*** - கடிவாளம், பசுப் பயன்.
***கவிரம்*** - அலரி, தேவவிருட்சம்.
***கவிர்*** — முள்முருக்கு.
***கவிவாணர்*** - புலவர்.

**கவிழ்தல்** - தலைகிழாதல், தலை குனிதல், நிலை குலைதல், அழிதல்.

[illegible] மூடுதல், கவிழச் செய்தல், ஒழுக விடுதல்.

[illegible] - அழகு.

**கவீரம்** - அலரி.

**கவுசி** - ஒருவகை வரிக் கூத்து, பாட்டு, ஒருவகை நோய்.

**கவுசிகம்** – வெண்பட்டு, கோட்டான், ஒரு பண், சாமவேதம், விளக்குத் தண்டு.

**கவுதகம்** - மீன் கொத்தி.

**கவுதாரி** - ஒரு பறவை.

**கவுத்துவம்** - திருமால் மார்பி [illegible] இசைப் பாட்டு வகை.

**கவுந்தியர்** - முனிவர்.

**கவுமாரம்**-இளமைப்பருவம்

**கவுமோதகி** - [illegible] தண்டாயுதம்.

**கவுரம்** - வெண்மை.

**கவுரிசங்கரம்** - இருமுக உருத்திராக்கம்.

**கவுளி** – பல்லி.

**கவுள்** - கன்னம், யானையின் உள்வாய், பக்கம்.

**கவேரகன்னி** - காவேரி யாறு.

**கவை** - மரக்கிளை, கவர் வழி, அகில், வைக்கோல், காரியம், எட்காய், ஆயில்யம், இரட்டை, பிளப்பு, தாமணி.

**கவையடி** – பிளவுபட்ட பாதம்.

**கவையமா** - கவயமா, காட்டுப் பசு.

**கவ்வம்** - மத்து.

**கவ்வியம்** - பசுப்பயன்.

**கவ்வுதல்** - வெள[illegible], தின்னுதல்.

**கவ்வை** - ஒலி, பழிச் சொல், துன்பம், கவலை, பொறுமை, எள்ளிளங்காய், கல், காரியம், ஆயில்யம்.

**கழகண்டு** – குறும்பு, தீம்பு.

**கழகம்** - சபை, ஓலக்கம், கல்விபயிலிடம், படை பயிலுமிடம், மற் கூடம், சூது ஆடு மிடம்.

**கழங்கம்** - சூதாடு கருவி.

**கழங்கு** - கழற்சிக்காய், கழற்சி விளையாட்டு, வெறியாட்டு.

**கழஞ்சு** - பன்னிரண்டு பண எடையுள்ள ஓர் எடுத்தலளவை.

**கழப்பு** - சோம்பல்.

**கழலுதல்** - நெகிழ்ந்து போதல், நீங்குதல், பிதுங்குதல், [illegible]

**கழலை** - சதைக்கட்டி, புரை குழல்.

**கழல்** - வீரக்கழல், சிலம்பு, கால், செருப்பு, கழற்சிக் காய், காற்ருடி.

**கழறல்** - சொல்லுதல், உறுதி மொழி.

**கழறுதல்** - இடித்துரைத்தல், சூளுரைத்தல்.

***கழற்காய்*** - கழற்சிக்காய்.
***கழற்சி*** - கழற்சிக்காய், கழலச் செய்தல்.
***கழற்றுதல்*** - நெகிழச் செய்தல் நீக்குதல், போக்குதல்.
***கழனி*** - வயல், மருத நிலம்.
***கழாய்*** - மூங்கில்.
***கழால்*** - கழுவுதல்.
***கழாய்க்கூத்து*** - கழைக் கூத்து.
***கழி*** - தடி, கடலையடுத்த உப்புநீர்ப் பரப்பு,உப்பளம், ஆயுதக் காம்பு, மாமிசம், மிகுதி.
***கழிகண்ணோட்டம்*** - அளவு கடந்த மகிழ்ச்சி.
***கழிச்சல்*** - பேதி, மலப் போக்கு.
***கழிச்சியர்*** - நெய்தனில மகளிர்.
***கழிதல்*** - கடந்து போதல், ஒழிதல், சாதல், வெளிப் படுதல், செல்லுதல், குறை படுதல்.
***கழித்தல்*** - நீக்குதல்,குறைத் தல், போக்குதல், வெளிப் படுத்துதல், வெட்டுதல், ஒதுக்குதல்.
***கழிந்தார்*** - பொருளில்லாத வர், இறந்தவர்.
***கழிபடர்*** - மிக்க துயரம்.
***கழிப்பு*** - ஒழிக்கை, குற்றம்.
***கழிமுகம்***-சங்கமுகம்,அருவி.
***கழிமுள்ளி*** - முள்ளி.
***கழிய*** - மிக.
***கழிவிரக்கம்*** - மிக்க இரக் கம், பச்சாத்தாபம்.
***கழிவு***-இறந்த காலம், மிச்சம், அழிவு, மிகுதி, பிராயச்சித் தம்.
***கழினி*** - இடுதிரை.
***கழு*** - கழுமரம், சூலம், பசுவின் கழுத்தில் கட்டும் கழி, கழுகு.
***கழுக்காணி*** -அறிவற்றவன், வேங்கை மரம், உலக்கை, தாமரை.
***கழுகு*** - ஒரு பறவை.
***கழுக்கடை*** - சிறிய ஈட்டி, சூலம்.
***கழுக்கோல்*** - கழுமரம்.
***கழுது*** — பேய், வண்டு, காவற் பரண்.
***கழுதைப்புலி*** - ஒருவகை விலங்கு.
***கழுத்து*** - கண்டம்.
***கழுநீர்*** - செங்குவளை, நீலோற்பலம்,அரிசி கழுவிய நீர், தீர்த்த நீர்.
***கழுந்தன்*** - அறிவு மழுங்கிய வன்.
***கழுந்து***—உலக்கை, முரட்டுத் தனம், வில் முதலியவற்றின திரண்டநுனி
***கழுமணி*** — கடைந்து சுத்தம் செய்யப்பட்ட இரத்தினம்.
***கழுமம்*** - குற்றம்.
***கழுமல்*** — மயக்கம், நிறைவு,
***கழுமுதல்*** - சேர்தல், திரளுதல், கலத்தல், மயங்குதல், மிகுதல்.
***கழுமுள்*** - ஆயுதம், மாதுளை.
***கழுவாய்***-கழுவுதல், பிராயச்

***கழை*** - மூங்கில், மூங்கிற் குழாய், ஓடக்கோல், குத்துக் கோல், கரும்பு, புல்லாங் குழல், புனர்பூசம்.

***கழைக்கூத்தன்*** – மூங்கில் மேல் நின்றாடும் கூத்தன்.

***கழைநெல்*** – மூங்கில் நெல்.

***களகண்டம்*** - குயில்.

***களகம்*** – நெற்கதிர், பெருச் சாளி, சுண்ணச் சாந்து, அன்னம்.

***களகம்பளம்*** - எருதின் அலை தாடி.

***களங்கம்*** - மறு, குற்றம். துரு, களிம்பு, நீலம், அடை யாளம்.

***களங்கன்*** - சந்திரன்.

***களங்கொள்ளல்*** - இருப்பிட மாதல்.

***களஞ்சம்*** - கஞ்சா முதலிய பண்டங்கள்.

***களஞ்சியம்*** - பண்டகசாலை.

***களத்திரம்*** - மனைவி.

***களபம்*** - சுண்ணச்சாந்து. கலவைச்சாந்து, யானைக் கன்று யானை.

***களப்பலி*** - போர்க்களத்திலி டும் பலி.

***களப்பு*** - கடலில் ஆழமற்ற விடம்.

***களமர்*** - வீரர், மருத நில மக்கள், அடிமைகள்.

***களமாலை*** - கண்டசர மென் னும் நோய்,

***களம்*** – இடம், போர்க்களம், நெற்களம், சபை, கழுத்து, இன்னிசை, விடம், வஞ்ச கம், கருமை, மேகம்.

***களம்பழம்*** - களாவின்பழம்.

***களரவம்*** - புறா.

***களரி*** - களர் நிலம், பாழ் நிலம், காடு, போர்க்களம், விசாரணையிடம்.

***களர்*** - உவர் நிலம், சேற்று நிலம், கூட்டம், கறுப்பு.

***களவன்*** - நண்டு.

***களவாணி*** - திருடன்.

***களவு*** - திருட்டு, திருடிய பொருள், வஞ்சனை.

***களவேள்வி*** - போர் வென்ற அரசன் போர்க்களத்தில் பேய்களுக்காகச் செய்யும்

***களன்*** - களம்.

***களா*** - களாச்செடி, முள் முருங்கை

***களாசம்*** - பிரம்பு.

***களாவதி*** - ஒரு வகைவீணை.

***களாவம்*** - இடையணி.

***களி*** - மகிழ்ச்சி, கள், கட் குடியன், தேன், செருக்கு, கள்ளுண்ட மயக்கம், குழம்பு, குழைவு, ஒரு வகையுணவு, உலோகநீர், களிமண்.

***களிகை*** - மொட்டு, ஒரு வகைக் கழுத்தணி.

***களிதூங்குதல்*** - மகிழ்ச்சி பெருதல்.

***களித்தல்*** - மகிழ்தல், கள் ளுண்டு வெறி கொள்ளுதல் செருக்கடைதல், மதங் கொள்ளுதல்.

**களிப்பாக்கு** - அவித்துச் சாய மூட்டப்பட்ட பாக்கு.
**களிப்பு** - மகிழ்ச்சி, மயக்கம், செருக்கு, மண்பசை, மது
**களிமகன்** - கட்குடியன்.
**களிமம்** - எலி.
**களிம்பு** - துரு, மாசு.
**களியம்** - கூத்து நிலைவகை.
**களிறு** - ஆண்யானை, ஆண் பன்றி, ஆண் சுறு.
**களுசி** - சிந்திற் கொடி.
**களேபரம்**-உடம்பு, எலும்பு, பிணம்.
**களை** - பயிர் வளர்தற்குத் தடையாக உள்ள புல் பூண்டு வகை, சோர்வு, குற்றம், அழகு, ஒரு கால அளவு.
**களைகட்டல்** - களை பறித்தல்.
**களைகண்** - பற்றுக் கோடு.
**களைக்கொட்டு** - களை பறிக்கும் கருவி.
**களைதல்** - பிடுங்குதல், நீக்குதல், அழித்தல்.
**களைப்பு** - சோர்வு.
**களைவு** - நீக்குதல்.
**கள்** - மது, வண்டு, தேன், களவு, பன்மை விகுதி.
**கள்ளம்** - திருட்டுச் செயல், வஞ்சனை, பொய்.
**கள்வன்** - திருடன், நண்டு, யானை, கர்க்கடகராசி.
**கள்ளன்** - திருடன்.
**கள்ளி** - ஒரு முட்செடி, திருடி.
**கள்ளில்** - கள், கட்கடை
**கறங்குதல்** - ஒலித்தல், சுழலுதல்.
**கறத்தல்** — பால் கறத்தல்.
**கறல்** - விறகு.
**கறவை** - பசு.
**கறளை** - வளர்ச்சியின்மை, குள்ளன்.
**கறி** - மிளகு, உணவுக்குபயோகமாகும் கறிகாய்,
**கறித்தல்** - கடித்துத் தின்றுதல்
**கறிவேம்பு** - கறிவேப்பிலை மரம்.
**கறு** - வஞ்சினம், கோபம்.
**கறுக்கல்** - கருமையாதல், கோபித்தல், முற்றுதல்.
**கறுத்தோர்** - பகைவர்.
**கறுப்பு** - கருமை, வஞ்சகம், வெகுளி, குற்றம்.
**கறுகுதல்** — மனவயிரங் கொள்ளுதல், கோபித்தல்.
**கறுழ்** - கடிவாளம்.
**கறை** - கருமை, நஞ்சு, குற்றம், இருள், இராகு, அழுக்கு களங்கம், இரத்தம், உரல், குடியிறை.
**கறைக்கண்டன்** - சிவன்.
**கறையடி** - யானை.
**கறையான்** - சிதல்
**கற்கசம்** - கடினம், உலோபம், வேலிப்பருத்தி, வன்னெஞ்சம்.
**கற்கண்டு**—கருப்பஞ்சாற்றுக் கட்டி.
**கற்கி** — கோயில், குதிரை, திருமாலின் பத்தாமவதாரம்.

**கற்குரு** – கர்ப்பூர சிலாசத்து
**கற்கை** – படித்தல்
**கற்பகம்** - தேவலோகத்துப் பஞ்சதருக்களில் ஒன்று, தென்னை, பனை.
**கற்படை** - கோட்டையின் சுரங்கவழி, கல்லால்கட்டிய சாக்கடை, கற்பதித்த இடம்.
**கற்பணம்** - கைவேல்.
**கற்பம்** - பிரமனுயுள், 432 கோடி, திருநீறு, ஆயுள் நீடிக்கும் மருந்து.
**கற்பனை** - கல்வி, மனக்கற்பனை, போதனை, வருணனை, கட்டளை, சங்கற்பம், இல்லாததைக் கட்டிச் சொல்லுதல், மாயை.
**கற்பாந்தம்** - ஊழிமுடிவு.
**கற்பாழி** – மலைக்குகை.
**கற்பித்தல்** - கற்றுக்கொடுத்தல், கட்டிச் சொல்லுதல்.
**கற்பிதம்** - புனைந்துரை, பொய், மனோபாவனை.
**கற்பு** - பதிவிரதா தர்மம், கல்வி, அறிவு, இல்லறம், முல்லை, தியானம், ஆணை, சங்கற்பம், கதி.
**கற்பூ** - பரவ மகளிரணியும்
**கற்பூரம்** -சூடம், பொன்னுங்
**கற்பொறி** - மதிற்பொறி வகை.
**கற்றளி** - கற்கோயில்.
**கற்று** - கன்றையுடைய பசு.
**கற்றுமை** - ஒரு வகை முட்செடி.
**கற்றுனை** - காவிச் சிலை.
**கற்றை** - திரள், கட்டு, கதிர்த் தொகுதி, மயிர்த் தொகுதி.
**கனகசபை** - பொன்னம்பலம்,
**கனகச்சுற்றம்** - அரசனுடைய பொக்கிஷ அதிகாரி.
**கனகதம்** - ஒட்டகம்.
**கனகம்** - பொன்.
**கனகி** - ஊமத்தை.
**கனசாரம்** - பச்சைக்கருப்பூரம்.
**கனதை** - கௌரவம்.
**கனம்** - கௌரவம், பாரம், பருமன், செறிவு, பெருமை, வட்டம், மேகம், பொன்.
**கனமாப்பலகை** - சங்கப் பலகை.
**கனருசி** - மின்னல்.
**கனலி** - சூரியன், நெருப்பு, பன்றி.
**கனலுதல்** - எரிதல், கொதித்தல், சினத்தல். சிவத்தல்.
**கனல்** - நெருப்பு, கோபம்.
**கனல்வு** - கோபம்.
**கன வட்டம்** - பாண்டியரது பட்டத்துக் குதிரை.
**கனவல்** - கனுக்காணுதல்.
**கனவான்** - பிரபு.
**கனவிரதம்** - நீர்.
**கனவு** - கனு, நித்திரை, மயக்கம்.
**கனறல்** - சினக்குறிப்பு.

**கனற்சி** - வெப்பம், உள்ளக் கொதிப்பு.
**கனற்றுதல்** - எரியச் செய்தல், சுடச் செய்தல், மிக்கு விளங்குதல்.

- பழம், இனிமை, சாரம், கனிவு, உலோகச் சுரங்கம்.
**கனிட்டன்** - தம்பி.
**கனிதல்** - பழுத்தல், மனமிளகுதல், இனித்தல், முதிர்தல்.
**கனிப்பு** - இனிமை.
**கனிவு** - இரக்கம், முதிர்தல்.
**கனை** - ஒலி, செறிவு, மிகுதி, திரட்சி, நிறைவு.
**கனைத்தல்**-ஒலித்தல், குதிரை வாயொலித்தல், கொக்கரித்தல், திரளுதல், விரைந்து செல்லுதல்.
**கனைவு** - நெருக்கம்.
**கன்மதம்** - ஒரு மருந்துச் சரக்கு.
**கன்மம்** - தொழில், வினைப் பயன்.
**கன்மலி** - ஏலக்காய்ச் செடி.
**கன்மழை** - ஆலங்கட்டி மழை.
**கன்மி** - தொழிலாளி, தீவினையாளன், கருமங்களைச் சரியாகச் செய்பவன்.
**கன்முகை** - மலைக்குகை.
**கன்முழை** - மலைக்குகை.
**கன்மேந்திரியம்** - தொ நடத்தும் உறுப்புக்கள்.
**கன்மேய்வு** - மாடப்புறா.
**கன்றல்**-சினக்குறி, வளர்ச்சியின் மிகுதி, அடிபட்டு நைதல்.
**கன்று** - இளமரம், குட்டி, கைவளை, நை, கோபி.
**கன்றுதல்** - சினங் கொள்ளல், முதிர்தல், கருகுதல், வருந்துதல், மனமுருகுதல், வாடுதல், நைதல்.
**கன்னக்கோல்** - சுவரைத் துளைத்தற்குக் கள்வர் கையாளும் கருவி.
**கன்னகடூரம்** - காதுக் கினிமையல்லாதது.
**கன்னங்கரிய** - மிகக் கறுப்பான.
**கன்னங்கரேலென** - மிகக் கறுப்பாக.
**கன்னபரம்பரை** - கேள்வி வழக்கில் வருவது.
**கன்ன பூடணம்** - காதுகுத்தும் சடங்கு.
**கன்னம்**-காது, தராசு தட்டு, களவு, கதுப்பு, பெருமை.
**கன்னமதம்** - யானைக் கன்னத்தில் தோன்றும் மத நீர்.
**கன்னல்** - கரும்பு, கரகம், நாழிகை வட்டில், கற்கண்டு,
**கன்னன்** - பாத்திர வேலை செய்பவன்.
**கன்னி** - குமரி, இளமை, புதுமை, அழிவின்மை, துர்க்கை, குமரியாறு, கன்னி ராசி, புரட்டாசி, கற்றாழை, காக்கணம்.

***கன்னிகாரம்*** - கோங்கு மரம்.

***கன்னிகை*** - குமரி, தாமரைக் கொ ை பூமொட்டு.

***கன்னித் தமிழ்*** - என்றும் இளமையோடு கூடியதமிழ்.

***கன்னிநாடு*** - பாண்டி நாடு

***கன்னிப்போர்*** - வீரனது முதற்போர்.

***கன்னிமதில்*** - அழியாமதில்.

***கன்னிமாடம்*** - கன்னியர் வசிக்கும் இடம்.

***கன்னிமார்*** - மணமாகாப் பெண்கள், ஏழுகன்னியர் என்னும் தேவதைகள்.

***கன்னிமை*** - கன்னித் தன்மை.

***கன்றுவர்*** - கன்றூர்.

***கன்னே*** - கட்சி.

**கா** - ஓரெழுத்து, சோலை, பாதுகாப்பு, காவடித் தண்டு, பூப்பெட்டி, சரசுவதி, பாதுகாப்பு.

***காகதாலியம்*** - காக்கை யேறப் பனம் பழம் விழுந்தது என்னும் நியாயம்.

***காகதுண்டம்*** - அகில்.

***காகபாதம்*** - ஒரு கால அளவை, வயிரக்குற்றங்களுள் ஒன்று.

***காகபீலி*** - குன்றி.

***காகம்*** - காக்கை, அவிட்டம்.

***காகளம்*** - எக்காளம்.

***காகிதம்*** - கடிதம்.

***காகுளி*** - பேய் போலப்பாடுவது, தொண்டையில் உண்டாகும் மந்தவோசை, தவிசு.

***காகோதரம்*** - பாம்பு.

***காகோலம்*** - அண்டங் காக்கை.

***காகோளி*** - அசோகு, தேட் கொடுக்குமரம்.

***காக்கட்டான்*** - ஒரு மருந்துச் செடி.

***காக்காய்ப் பொன்*** - பொன் போன்ற நிறத்தகடு.

***காக்கை வலி*** - வலிப்பு நோய்.

***காக்கை வேலி*** - வேலிப் பருத்தி.

***காங்கி*** - பேராசைக்காரன்.

***காங்கிசை*** - விருப்பம்.

***காங்கு*** - பெரும்பானை.

***காங்கேயம்*** - பொன்.

***காங்கை*** - வெப்பம்.

***காசம்*** - சுவாசநோய், கோழை, நாணல், வானம், கண்ணோய் வகை, பளிங்கு.

***காசறை*** - மயிர்ச்சாந்து, கத்தூரி, கத்தூரிமிருகம்.

***காசா*** - ஒருவகைப்புல், எருமை, காயாமரம்.

***காசாயம்*** - காவித் துணி.

***காசி*** - சீரகம், வாரணசி நகர்.

***காசினி*** - பூமி.

***காசு*** - நாணயம், சூதாடு கருவி, பொன், குற்றம், மேகலாபரணம், மணி, கோழை.

***காசுக் கட்டி*** - ஒருவகை மருந்துச் சரக்கு.

***காசுக்கல்*** -
***காசை*** - நாணல், காயாமரம், புற்பற்றை.
***காசையாடை*** - காவியாடை
***காஞ்சனம்*** - பொன், புன்கு.
***கஞ்சனி*** - பொன்னிறம், மஞ்சள், கோரோசனை.
***காஞ்சி*** - ஏழுகோவையிடையணி, ஆற்றுப்பூவரசு, நிலையாமை, காஞ்சிப் பூமாலை, எதிருன்றல், காஞ்சிபுரம், மயிர்.
***காஞ்சித்திணை*** - நிலையாமையைக்கூறும் புறத்திணை.
***காஞ்சிரை*** - எட்டி.
***காஞ்சுகி*** - சட்டை, சட்டையிட்ட மெய்க்காப்பாளன்.
***காஞ்சொரி*** - உடம்பிற்பட்டால் தினவெடுக்கும் பூண்டு.
***காடகம்*** - ஆடை.
***காடர்*** - வனவாசிகள்.
***காடவன்*** - பல்லவர் பட்டப் பெயர்.
***காடா விளக்கு*** - பெரு

***காடாற்று*** - பிணக்கிரியை.
***காடாக்கினி*** - பெரு நெருப்பு.
***காடாந்தகாரம்*** - பேரிருள்.
***காடி*** - புளித்தகஞ்சி, புளித்த கள், புளித்த நீர், ஊறுகாய், நெய், கழுத்து, மிடா, மேடை, வெட்டுப்பள்ளம்.
***காடு*** - வனம், நெருக்கம், மிகுதி, பாலை, சுடுகாடு.
***காடுகாள்*** - துர்க்கை.
***காடுகிழாள்*** - துர்க்கை.
***காடுகெழுசெல்வி*** - துர்க்கை.
***காடுபடுதிரவியம்*** - காட்டிலுண்டாகும் பொருள்கள்.
***காடுவெட்டி***- பல்லவர்களின் பட்டப்பெயர்.
***காட்சி*** - கண்ணிற்படுதல், பிரத்தியட்சப் பிரமாணம், நூல், அறிவு, அழகு,

***காட்சியவர்*** - அறிஞர்.
***காட்டம்*** - விறகு, சமித்து, கட்டை.
***காட்டு*** - உதாரணம், காண்பித்தல்.
***காட்டுதல்*** - காண்பித்தல், அறிவித்தல்.
***காட்டேறி*** - ஒரு துர்த்தேவதை.
***காட்டுமிராண்டி*** - நாகரிகமற்றவன்.
***காட்டை*** -ஒருகால அளவை, திசை, எல்லை.
***காட்பு*** - வயிரம்.
***காணம்*** - பொன், கொள், பொற்காசு, செக்கு, பொருள்.
***காணல்*** – பார்த்தல், உண்டாதல்.
***காணுக்காட்சி*** - அற்புதக் காட்சி.
***காணார்*** - குருடர், பகைவர்,
***காணி*** - நூறுகுழியுள்ள நிலம், ஒரு சிற்றளவு, பரம்பரையுரிமை.

*காணிக்கை* - கடவுளுக்கு அல்லது பெரியோருக்கு அளிக்கும் பொருள்.
*காணியாட்சி* - உரிமை, உரிமை நிலம்.
*காணியாளன்* - உழவில் ஊக்கமுள்ள குடி மகன், ஒரு சாதியான்.
*காணும்* - முன்னிலைப் பன்மைவினை, பெயரெச்சம்.
*காண்* - பார், காட்சி, அழகு, ஆராய்ச்சி, ஓர் உரையசை.
*காண்கை* - காண்டல் அறிவு.
*காண்டகம்* - காடு, நோய்.
*காண்டம்* - நூற் பெரும் பிரிவு, குதிரை, திரட்சி, அடிமரம், ஆடை.
*காண்டல்* - பார்த்தல், ஆராய்தல், மதித்தல், பெறுதல், போதியதாதல், ஓத்திருத்தல்.
*காண்டிகை* - கருத்து, பதப்பொருள், உதாரணம், வினா, விடை அடங்கிய உரை.
*காண்பு* - காட்சி.
*காதகம்* - கொலை, பிடித்தல்.
*காதகன்* - கொலையாளி, கொடியவன்.
*காதம்* — 10 மைல் தூரம்.
*காதம்பம்* — அன்னப் பறவை, காட்டுக் கோழி.
*காதரம்* - அச்சம், தொடர்பு.
*காதலவர்* - சுற்றத்தார், அன்பர்.
*காதலன்* - அன்பிற்குரியவன், கணவன்.
*காதலி* - அன்பிற்குரியவள், மனைவி.
*காதலித்தல்* - விரும்புதல், அன்புகொள்ளுதல்.
*காதல்* - அன்பு, காமவிச்சை, பக்தி, ஆசை, தாக்குதல், கொல்லுதல்.
*காதன்* - கொலை செய்பவன்.
*காதன்மை* - அன்பு, ஆசை.
*காதிகள்* - முத்திக்குப்பாதகமாயுள்ள கன்மங்கள்.
*காது* - செவி, ஊசித்தொளை, கவணில் கல்வைக்குமிடம்,
*காதுதல்* - வெட்டுதல்.
*காதை* - செய்யுள் வடிவத்திலுள்ள கதை, கொலை.
*காதோலை* - மகளிர்காதணி.
*காத்தண்டு* - காவடியின் தண்டு.
*காத்தல்* - பாதுகாத்தல், அரசாளுதல்.
*காத்திரம்* - உடல், கோபம், பருமை, கனம், கிரி, யானையின் முன்கால்.
*காத்திரவேயம்* - பாம்பு.
*காந்தம்* - காந்தக்கல்(இரும்பையிழுக்கும்தன்மையது), மின்சாரம், அழகு, ஒரு புராணம்.
*காந்தருவம்* - காதலர் தம்முட்கூடும்கூட்டம், இசைப்பாட்டு.
*காந்தருவர்* - இசை பாடும் தேவசாதியார்.

***காந்தல்*** - உஷ்ணமடைதல், கருகுதல், சினம்.
***காந்தள்*** - கார்த்திகைப்பூ.
***காந்தன்*** - கணவன்.
***காந்தாரம்*** - காடு, ஓர் இசை, பாலையாழ்த்திறம், ஒரு தேசம்.
***காந்தி*** - ஒளி, கிரணம், அழகு, வைடூரியம்.
***காந்துகம்*** - வெண்காந்தள்.

வெப்பமடைதல், ஒளி வீசுதல், முதிர்தல், பல்லால் சுரண்டுதல்.
***காந்தை*** – பெண், மனைவி.
***காபந்து*** - பாதுகாப்பு.
***காபாலம்***-சிவனுடும் கூத்து ஒரு மதம்,
***காபாலி*** - சிவன், காபால மதத்தான்.
***காப்பாற்றல்*** - ஆதரித்தல், பாதுகாத்தல்.
***காப்பிடுதல்*** - தெய்வ வழி பாட்டால் காப்புச் செய்தல்.
***காப்பியக் குடி*** – பழைய அந்தணர் குடி.
***காப்பியம்***-கதைபற்றிவரும் செய்யுள் நூல்.
***காப்பியன்*** - சுக்கிரன்.
***காப்பில்***-தோணியின் உறுப்புக்களுள் ஒன்று, மீன்பிடிக்கும் ஓராயுதம்.
***காப்பு*** - பாதுகாவல், காப்பாகக் கட்டும் கயிறு, கைகால் அணிவகை, நூலின் தொடக்கத்துக் கடவுள் வாழ்த்து, திருநீறு, வேலி, அரசமுத்திரை, கதவு, கதவின் தாள், ஊர், திக்குப் பாலகர், பாதரட்சை, அபிடேகம், திருமுழுக்கு.
***காப்புநாண்*** - பாதுகாவலாகக் கட்டும் மஞ்சட்

***காப்புப் பருவம்*** - பிள்ளைத் தமிழ்ப் பருவங்களுள் ஒன்று.
***காப்பு மறம்*** - காவல் வீரர்.
***காப்பொன்*** - நூறு பலம் பொன்.
***காமக்கடப்பு*** - காம
***காமக் கடவுள்*** - வழிபடு தெய்வம்.
***காமக் கிழத்தி***-ஒருவர்க்கே யுரிமை பூண்ட காதற்

***காமக்கூட்டம்***-காதல்மணம்.
***காமத்துப்பால்*** - காமத்தைப் பற்றிக் கூறும் இலக்கணப் பகுதி.
***காமதேனு*** - தேவலோகப் பசு.
***காமம்*** - விருப்பம், இன்பம், புணர்ச்சியின்பம்.
***காமரம்***-அடுப்பு, அத்தநாள், ஒரு பண், காவடித்தண்டு, அகில்.
***காமர்*** - அழகு, விருப்பம், காமுகர்.
***காமவல்லி*** - கற்பக மரத்திற் படரும் கொடி.
***காமவாயில்*** - இயற்கையன்பு.

***காமவேதம்*** - நாணல்
***காமவேள்*** - மன்மதன்
***காமனூர்தி*** - தென்றல்
***காமன்*** - மன்மதன், ஒருவகைக் கூத்து, இந்திரன், வண்டு, திப்பலி.
***காமன் கொடி*** - மீன்.
***காமன்வில்*** - கரும்பு.
***காமாட்டி*** - மூடன், மண் வெட்டுபவன்.
***காமாந்தகன்*** - காமத்தால் விவேகமற்றவன், சிவன்.
***காமாரி*** - சிவன், காளி.
***காமாலை*** - ஒரு நோய்.
***காமி*** - காமவிச்சை மிகுந்தவன்.
***காமிகம்*** - சிவாகமங்களுள் ஒன்று.
***காமியம்*** - பயன் கருதிச் செய்யும் வினை, ஆகாமிய கன்மம்.
***காமினி*** - பெண், ஆகாய கமன மந்திரம்.
***காமுகன்*** - காமவிச்சை மிகுந்தவன்.
***காமுறுதல்*** - விரும்புதல், வேண்டிக் கொள்ளல்.
***காம்பி*** - நீரிறைக்கும் கருவி.
***காம்பு*** - இலையின் தாள், கைபிடி, மூங்கில், ஒருவகைப் பட்டாடை.
***காயகற்பம்*** - உடல் நீடித்திருக்க உண்ணும் மருந்து.
***காயகன்*** - பாடுவோன்.
***காயக்கம்*** - மோக மயக்கம், உடலுறுப்பால் செய்யும் அபிநயம்.
***காயக் கிலேசம்*** - உடலை வருத்தி ஒடுக்குதல்.
***காயசித்தி*** - உடலை நெடுநாள் இருக்கச் செய்யும் வித்தை, பொன்னாங்காணி.
***காயத்திரி*** - பிரமன் மனைவியாகிய தேவதை, ஒரு மந்திரம்.
***காயநூல்*** - சாமுத்திரிகா லக்ஷணம்.
***காயம்*** - பெருங்காயம், புண், ஆகாயம், உடல், நிலைபேறு, மிளகு, உறைப்பு.
***காயல்*** - கழி, கழிமுகம்.
***காயா*** - ஒருவகைச் செடி.
***காயாம்பூ வண்ணன்*** - திருமால்.
***காயிகம்***-உடம்பாற்செய்வது
***காய்*** - பழுக்காதது, ஆடுதற்குரிய காய், அநுகூலப்படாத் தன்மை.
***காய்கறி*** – மரக்கறி வகை.
***காய்ச்சல்*** - சுர நோய், வெப்பு நோய்.
***காய்ச்சுண்டை*** - காசுக் கட்டி.
***காய்ச்சுதல்*** – காயச் செய்தல், சுட வைத்தல்.
***காய்தல்*** - சுடுதல், வெப்பமடைதல், உலர்தல், எரித்தல், கோபித்தல், அழித்தல், விலக்குதல், வெறுத்தல்.
***காய்த்தல்*** - மரஞ் செடி முதலிய காய்களை உண்டாக்குதல், தழும்புண்டாதல்.

**காய்ப்பு** - வெறுப்பு, மரஞ் செடி முதலியன பயன்

**காய்ப்பசி** - வருத்தும் பசி.

**காரகம்**-மேக நோய், சிறைச் சாலை, வேற்றுமை பெற்ற பெயர் வினை கொள்ளும்

**காரகன்** - செய்வோன்.

**காரடம்** – ஜாலவித்தை.

**காரடை** - ஒருவகைப் பணியாரம்.

**காரணக்குறி** - காரணப் பெயர்.

**காரண சரீரம்** - சூக்குமவுடல்.

**காரணம்** - மூலம், ஏது, நோக்கம்.

**காரணிகன்** - மத்தியஸ்தம் செய்வோன்.

**காரண்டம்** – நீர்க்காக்கை.

**காரம்** - உறைப்பு, கோபம், அழிவு, சாம்பலுப்பு.

**காரவல்லி** - பாகல்.

**காரறிவு** - மயக்கவறிவு.

**காரா** – எருமை

**காராக்கிரகம்**-சிறைச்சாலை.

**காராடு** - வெள்ளாடு.

**காராண்மை** - பயிரிடும்குடி

**காராமணி** - ஒருவகைப் பயறு.

**காராம்பசு** - நாக்கும் முலைக் காம்பும் கருநிறமாயுள்ள பசு.

**காராம்பி** – எருது பூட்டி நீரிறைக்கும் கருவி.

**காராளர்** – பயிரிடுஞ் சாதியார்.

**காரான்** - எருமை.

**காரி** - செய்பவன், கரியபசு, திருமால், இந்திரன், ஐயனார், சனி, நஞ்சு, கரிய குருவி, கருமை, காக்கை, வயிரவன், கடைவள்ளல்களுள் ஒருவர், காரிநாயனார், காரி வள்ளலின் குதிரை, ஓர் ஆறு, ஒரு பெண்பால் விகுதி.

**காரிகம்** - காவிக்கல், மேக நோய்.

**காரிகை** - அழகு, பெண், அலங்காரம், கட்டளைக் கலித்துறை, ஒரு யாப்பிலக்கண நூல்.

**காரியதரிசி**-ஒரு சபையின் காரியங்களை நிருவகிப்பவன்.

**காரியப்பாடு** - பயன்.

**காரியம்** - செய்கை, நோக்கம், காரணத்தால் தோன்றுவது.

**காரிருள்**- மிக்க இருள்.

**காரீயம்** - ஒருவகை ஈயம்.

**காரு** - வண்ணான்.

**காருகத்தம்** - இல்லறநிலை.

**காருகத்தொழில்** - நெய்தற்றொழில்.

**காருகபத்தியம்** - மூன்று வகை அக்கினிகளுள் ஒன்று.

**காருகம்** -செய்யும் தொழில், இல்லறம்.

**காருகவடி** - கிரகநிலை.

**கூதறை** - இழிந்தது, முறைமையற்றது, கிழிந்தது.
**கூதனம்** - இடக்கர்ச் சொல்.
**கூதாளம்** -ஒருவகைச் செடி,
**கூதாளி** - கூதாளம்.
**கூதிர்** - ஆண்டின் அறுவகைப் பருவங்களுள் ஒன்று (ஐப்பசி கார்த்திகை மாதங்கள்), குளிர்காற்று, குளிர்காலம்.
**கூதை** - குளிர்காற்று, காற்று.
**கூத்த நூல்** - அபிநயத்தைப் பற்றிக் கூறும் நூல்.
**கூத்தப்பள்ளி** — அரண்மனையைச்சார்ந்த நாடகவரங்கு.
**கூத்தம்பலம்** - கூத்தாடுதற்குரிய கோயிலரங்கு.
**கூத்தர்** - கூத்து நடிப்போர்.
**கூத்தன்** - கூத்தாடுவோன், சிவான்மா.
**கூத்தாடி** - கழைக்கூத்தன், கூத்தாடுவோன்.
**கூத்தாட்டு** - நடிப்பு.
**கூத்தி** - நாடகக் கணிகை, வைப்பாட்டி.
**கூத்து** - நடனம், நாடகம், அதிசயம், கேலி, வேடிக்கை.
**கூத்துள்படுவோன்** - ஆடலாசிரியன்.
**கூந்தல்**-பெண்கள் தலைமயிர், குதிரைப்பிடரி மயிர், யானைக் கழுத்து மயிர், மயிற்றோகை, பூ முதலியவற்றின் மெல்லியதோர் உறுப்பு.
**கூந்தற்பனை** - ஒருவகைப் பனை, தாளிப்பனை.
**கூந்தன்மா** - குதிரை.
**கூந்தாலி** - கடப்பாரை.
**கூபகம்** - எலும்புக்கூட்டிடைக் குழிவிடம், ஒரு நாடு.
**கூபம்** -
**கூப்பாடு** - கூப்பிடுதல், குமிழ்மரம், முறையிடுதல்.
**கூப்பீடு** - கூப்பாடு.
**கூப்புதல்** — குவித்தல், கை குவித்தல், ஒடுங்குதல்.
**கூம்பல்** - குமிழ்மரம்.
**கூம்பு** - பாய்மரம், தேர்க் கொடிஞ்சி, பூமொட்டு, சேறு.
**கூம்புதல்** - குவிதல், ஒடுங்குதல், ஊக்கம் குறைதல்.
**கூரம்**-கொடுமை, பொறாமை, யாழ், பாகல்.
**கூரல்** -இறகு, பெண்கள் தலைமயிர்.
**கூரன்** - நாய்.
**கூரியன்** - புத்திக்கூர்மையுள்ளவன், புதன்.
**கூரை** - வீட்டின் கூரை, குடிசை.
**கூர்** - மிகுதி, கூர்மை, குயவன் சக்கரத் துறுப்பு, கூரான
**கூர்ச்சி** - கூர்மை.
**கூர்தல்** - விரும்புதல், மிகுதல், ஒடுங்குதல், வளைதல்.
**கூர்த்தல்** - கூர்மையாதல், அறிவுநுட்பமாதல், சினத்தல், மிகுதல்.

*கூர்த்திகை* - ஆயுதம்.
*கூர்ப்பு* - அறிவுநுட்பம், உள்ளது சிறத்தல், கூர்மை, உவர்ப்பு.
*கூர்மம்* - ஆமை, கூர்மபுராணம்.
*கூர்மன்* - தசவாயுக்களுள்
*கூர்வை* - குதிரை செலுத்தும் கருவி.
*கூர்மை* - நுண்மை, சிறப்பு, ஆயுதங்களின் கூர், வெடியுப்பு.
*கூர்வை* -கப்பலின் குறுக்குக் கட்டை.
*கூலம்* - தானிய வகைகள், கடைத்தெரு, நீர்க்கரை, வரம்பு, பசு, குரங்கு, மூறை, பண்ணிகாரம்.
*கூலி* - வேலைக்குப் பெறும் ஊதியம்.
*கூவம்* -
*கூவல்* - கிணறு, கூவுதல்.
*கூவியர்* - அப்பவாணிகர்.
*கூவிரம்* - வில்வம், தேர், தாமரைவடிவான தேர்த் தட்டு,தேர்க்கொடி, தேரின் தலையலங்காரம்.
*கூவிரி* - தேர்.
*கூவிளம்* - வில்வம்.
*கூவிளி* - கூப்பிடும் ஓசை, கூப்பிடுதூரம்.
*கூவுதல்*-அழைத்தல்,பறவையொலி, ஒலியிடுதல்.
*கூவை* -
கூட்டம்.
*கூழங்கை* - மூடமான கை.
*கூழன்* - ஒருவகைப் பலா, தெளிவிலான்.
*கூழை* - கூந்தல், சிறகு, பொன் மயில் தோகை, குட்டையானது, புத்திக் குறைவு, படையின் பின்னணி, சேறு, இறகு, செய்யுள் தொடைவகை, பாம்பு.
*ழைக்கடா* - நீர்வாழ் பறவைவகை.
*கூழைமை* - குழைந்து நடக்கை, கடமை.
*கூழ்* - உணவுப் பொருட் பொது, குழையச் சமைத்த வுணவு, பயிர், பொருள், பயன்.
*கூழ்த்தல்* - ஐயப்படுதல்.
*கூழ்ப்பு* -கூழ்த்தல்.
*கூழ்படுதல்* – கலக்கமுண்டாதல்.
*கூளம்*-குப்பை, திப்பி,சண்டு.
*கூளன்* - பயனற்றவன்.
*கூளி* - ஒருவகைப் பேய், கூட்டம், படைத்தலைவன், குடும்பம், குள்ளம், குற்றம், பொலியெருது, கழுகு, கற பிழந்தவள்.
*கூளியர்* - வேட்டுவர், படைவீரர், வழிப்பறிசெய்வோர், ஏவலாளர்.
*கூருதல்* - திரளுதல்.
*கூறிடுதல்* - பங்துண்டாக்குதல்.
*கூறு* - பங்கு, தன்மை, பிளவுபட்ட துண்டு.
*கூறுதல்* - சொல்லுதல், விலைகூறுதல்.

*கூறுபாடு* - பகுதி, பாகுபாடு, தன்மை.
*கூறை* - புதிய ஆடை, கலியாண ஆடை.
*கூற்றம்* — யமன், சொல், நாட்டின் பகுதி, அழிவுண்டாக்குவது.
*கூற்று* - மொழி, கூறுதல், யமன்.
*கூற்றுவன்* - இயமன்
*கூனலங்காய்* - புளியங்காய்.
*கூனல்* - வளைவு.
*கூனன்* - கூன் முதுகுடையவன்.
*கூனி* - கூனுள்ளவள், பங்குனி.
*கூனிரும்பு* - அரிவாள்.
*கூனுதல்* - முதுகுவளைதல்.
*கூனை* - நீர்ச்சால், மிடா.
*கூன்* — வளைவு, நத்தை, பெரும் பாத்திரம், உடற்கூனல், செய்யுளடியில் அளவுக்கு மேல்வரும் அசையும் சீரும்.

# கெ - ஓர் எழுத்து.

*கெக்கலி* - குலுங்கச் சிரித்தல்.
*கெச்சம்* - முல்லை, அரசமரம்.
*கெச்சை* - காலணி, முல்லை.
*கெஞ்சுதல்* - இரந்து குறை கேட்டல்.
*கெடலணங்கு* - மூதேவி.
*கெடலூழ்* - தீவினை.
*கெடவரல்* - மகளிர் விளையாட்டு, மகளிர் கூட்டம்.
*கெடி* - மலைக்கோட்டை, ஊர், வல்லமை, அச்சம், செல்வாக்கு, புகழ்.
*கெடிறு* - கெளிற்று மீன்.
*கெடு* — தவணை, வறுமை, கேடு.
*கெடுதல்* - தீங்கு, அழிதல், வறுமையடைதல், தோற்றோடுதல்.
*கெடுதி* - கெடுதல்.
*கெடுத்தல்* - பழுதுபடச் செய்தல், அழித்தல்.
*கெட்டி* - உறுதி, சாமர்த்தியம்.
*கெண்டி* - கமண்டலம்.
*கெண்டிகை* - கெண்டி.
*கெண்டுதல்* - தோண்டுதல், அறுத்துத் தின்னுதல்.
*கெண்டை*-சேல்மீன், கணைக்கால்.
*கெதாயு* - ஆயுள் முடிந்தவன்.
*கெத்து* - தந்திரம்.
*கெத்துதல்* - கிறீப்பிளாத்தல், ஏமாற்றுதல்.
*கெந்தகம்* - ஒரு மருந்துச் சரக்கு.
*கெந்தகப்பொடி* - வாசனைப் பொடி.
*கெந்தித்தல்* - தத்துதல்.
*கெந்துதல்* - தத்துதல்.
*கெம்பீரம்* - வீரங்காட்டுதல், சிறப்பாக இருக்கை.
*கெம்பு* - சிவப்பு இரத்தினக் கல்.
*கெம்புதல்* - கொந்தளித்தல், உரத்துப் பேசுதல்.
*கெலிப்பு*-வெற்றி, மகிழ்ச்சி.

*கெலுழன்* - கருடன்.
*கெல்லுதல்* - தோண்டுதல்.
*கெவி* - குகை.
*கெவியூதி*- இரண்டு குரோச தூரம், (நாலரை மைல் தூரம்).
*கெவுளி* - பல்லி.
*கெழி* - நட்பு.
*கெழீஇலி* - பொருந்தா நண்பன், பகைவன்.
*கெழு* - நிறம், பொருந்திய, ஒளி, ஒரு சாரியை.
*கெழுதகை* - உரிமை.
*கெழுதகைமை* - உரிமை.
*கெழுமுதல்* - நிறைதல், பொருந்துதல், முதிர்தல், முளைத்தல், கிட்டுதல்.
*கெழுமை* - வளமை.
*கெழுவு* - நட்பு.
*கெளிறு* - கெளுத்தி மீன்.
*கெளித்தி* - கெளிறு.
*கேகயம்* - மயில், அசுணமா, ஒரு நாடு.
*கேசம்* - தலைமயிர், விலங்கின் மயிர்.
*கேசரம்* - பூந்தாது, மகிழமரம், வண்டு, குங்குமப்பூ.
*கேசரர்* - வித்தியாதரர்.
*கேசரி* - சிங்கம்.
*கேசவம்* - வண்டு.
*கேசாதிபாதம்* - முடிமுதல் அடிவரையில்.
*கேசாரி* - குதிரைக் கழுத்தின் மயிர்.
*கேசாவர்த்தம்* - குதிரையின் காலிலுள்ள தீயசுழி.
*கேசி* - அழகிய மயிருடையவள்.
*கேடகம்* - பரிசை, மலைகளை அடுத்தலூர், பாசறை.
*கேடயம்* - கேடகம்.
*கேடு* - அழிவு, வறுமை, தீமை, நட்டம்.
*கேட்டல்* - செவிக்குப் புலனாதல், வினவுதல், விசாரித்தல்.
*கேட்டுமுட்டு* - புறச்சமயத்தைப் பற்றிக் கேள்வியுற்றதனால் சமணர் மேற்கொள்ளும் தீட்டு.
*கேட்டை* - ஒரு நட்சத்திரம், மூதேவி, ஓர் அசைநிலை.
*கேணி* - சிறுகுளம், கிணறு, அகழி.
*கேண்மை* - நட்பு, உறவு.
*கேதகை* - தாழை.
*கேதம்* - துக்கம், இளைப்பு.
*கேதல்* - அழைத்தல்.
*கேதனம்* - கொடி.
*கேதாரம்* - விளைநிலம், மயில், இமய மலையிலுள்ள ஒருசிவ க்ஷேத்திரம், ஓர் இராகம்.
*கேதாரி* - குதிரைப்பிடரி, குதிரைச் சுழிவகை.
*கேது* - கொடி, ஒளி, நவக்கிரகங்களுள் ஒன்று.
*கேதுதல்* - கதறியழைத்தல்.
*கேத்திரம்* - புண்ணியத்தலம், வயிரவன்.
*கேந்திரம்* - வட்டத்தின் மத்தி.
*கேயூரம்* - தோளணிவகை.
*கேரளம்* - சேரநாடு, மலையாள மொழி.

***கேலி*** - பரிகாசம், விளையாட்டுப் பேச்சு.

***கேவணம்*** - மணிபதிக்கும் குழி.

***கேவலக்கிடை*** - ஆன்மா ஆணவத்தால் மறைப்புண்டு செயலற்றிருக்கும்

***கேவலஞானம்*** - திரிகால ஞானம்.

***கேவலம்*** - தனிமை, அற்பம், இழிவு, மோட்சம்.

***கேவேடன்*** - மீன்வலைஞன்.

***கேழகு*** - நிறம், பன்றி, குளநெல்.

***கேழ்*** - ஒப்பு, நிறம், ஒளி.

***கேழ்பு*** - நன்மை.

***கேழ்வரகு*** - கேப்பை, ராகி.

***கேளலர்*** - பகைவர்.

***கேளல் கேளிர்*** - பகையும் நட்புமிலாதார்.

***கேளன்*** - தோழன்.

***கேளார்*** - பகைவர், டார்.

***கேளி*** - விளையாட்டு, தென்னை வகை.

***கேளிக்கை***-பெண்கள் விளையாட்டு.

***கேளிதம்*** - பெருங்கல்.

***கேளிர்*** - சுற்றத்தார், நண்பர்.

***கேள்*** - உறவு, நட்பு, நண்பன், கணவன்.

***கேள்வன்*** - கணவன், நண்பன்.

***கேள்வி*** - செவியால் கேட்டல், பாடங்கேட்டல், விறுதல், வேதம், நூல், இசைச் சுருதி, கல்வி, யாழ், மந்திரம்.

***கேள்விவரி*** - அரசன் கட்டளைகளைப் பதியும் புத்தகம்.

# கை

**கை** - ஓர் எழுத்து, கரம், ஒப்பனை, பக்கம், சேனை, செயல், கைம்மரம், கைப்பிடி, சிறுமை, கைப்பொருள், உலகவொழுக்கம், தங்கை, ஒழுங்கு, மிகுதி, சிறகு, ஆற்றல், கிரணம், ஒரு தொழிற் பெயர்

***கைகடத்தல்*** - கைக்கு எட்டாமற் போதல்.

***கைகண்டது*** - அநுபவத்தில் அறிந்தது.

***கைகரத்தல்*** - ஒளித்தல்.

***கைகலத்தல்*** - நெருங்கிப் போரிடுதல், கூடுதல்.

***கைகழுவுதல்*** - விட்டுவிடுதல்.

***கைகாட்டுதல்*** - சைகை செய்தல், சிறிது தர்மம் செய்தல், திறமை காட்டுதல், அபிநயம் பிடித்தல்.

***கைகூடுதல்*** -அநுகூலமாதல்,

***கைகூப்புதல்*** - கையைக் கூப்பி வணங்குதல்.

***கைகொடுத்தல்*** - உதவுதல்.

***கைகோள்*** - ஒழுக்கம்.

***கைக்கடன்*** - கைமாற்றுக் கடன், கடப்பாடு.

***கைக்கட்டி*** - கைக்கவசம்.

**கைக்கிளை** - ஒரு தலைக் காமம், ஓர் இசைச்சுரம், மருட்பா.
**கைக்குழவி** - சிறு குழந்தை.
**கைக்கூட்டன்** - காவற்காரன்.
**கைக்கூலி** - இலஞ்சம், அற்றை நாட்கூலி.
**கைக்கொள்ளுதல்** - பற்று தல், ஏற்றுக்கொள்ளுதல்.
**கைக்கோல்** - ஊன்றுகோல், பற்றுக் கொடிறு.
**கைக்கோளன்** - நெசவுத் தொழில் செய்யும் சாதி யான்.
**கைங்கரியம்** - தொண்டு.
**கைசா** - இருகழஞ்சு கொண்ட நிறை.
**கைசிகம்** - ஒரு பண்.
**கைசு** - காற்பலம்.
**கைசெய்தல்** - அலங்கரித் தல், உதவி செய்தல், நடத்
**கைச்சரி** - மகளிர் கையணி வகை.
**கைச்சாடு** - கைக்கவசம்.
**கைச்சாத்து** - கையெழுத்து.
**கைஞ்ஞானம்** - அற்ப அறிவு.
**கைதருதல்** - உதவி செய் தல், உறுதி செய்தல்.
**கைதல்** - தாழை.
**கைதை** - தாழை, வயல்.
**கைதவம்** - கபடம், பொய், துன்பம்.
**கைதூவுதல்** - செயலற் றிருத்தல்.
**கைதேர்தல்** - திறமையடை தல்.

**கைதொடல்** - உண்ணுதல்.
**கைத்தடி** - ஊன்றுகோல்.
**கைத்தலம்** - உள்ளங்கை.
**கைத்தல்** - கசத்தல், கோபித் தல், வருத்தம் தோன்றல், செலுத்துதல், அலங்கரித் தல், ஊட்டுதல்.
**கைத்தளம்** - ஒருவகைக் கேடகம்.
**கைத்தாய்** - வளர்ப்புத் தாய்.
**கைத்தாள்** - திறவுகோல்.
**கைத்திரி** - இடக்கை என் னும் தோற்கருவி.
**கைத்தீட்டு** - பத்திரம்.
**கைத்து** - கைப்பொருள்.
**கைத்தூண்** - பிறர் கையால் உண்ணுதல்.
**கைநாட்டு** - கீறல் கையெ ழுத்து.
**கைந்நவில்** - கைத்தொழில்.
**கைந்நாகம்** - யானை.
**கைந்நிறுத்தல்** - நிலை நிறுத் தல், அடக்குதல்.
**கைந்நீட்டு** - கைப்பிடி.
**கைந்நீவுதல்** - அவமதித்துக் கடத்தல்.
**கைபுடைத்தல்** - கைதட்டு தல்.
**கைபுனைதல்** - அலங்கரித்தல்.
**கைபூசுதல்** - உண்ட கையைக் கழுவுதல்.
**கைபோதல்** - முற்றும் வல்ல ராதல், கடந்து செல்லுதல்.
**கைப்படுதல்** - கைவசமாதல்.
**கைப்படை** - ஆயுதம்.
**கைப்பரிசு** - சிறுதெப்பம்.

*கைப்பற்று* - வாங்கிய பணம்.
*கைப்பாடு* - உழைப்பு, வேலை.
*கைப்பு* - கசப்பு, ஆடுதின்னாப்பாளை.
*கைப்புடை* – வாயில்காவலர் தங்கும் இடம், அருகு.
*கைமரம்* – வீட்டுக் கூரையின் கை.
*கைமாறு* - ப
*கைமாற்று* - சிறு கடன்.
*கைமுட்டி* - விரல் மடங்கிய கை.
*கைமுறை* - அனுபவ முறை.
*கைம்பெண்* - விதவை.
*கைம்மயக்கம்* - மோக மயக்கம்.
*கைம்மருந்து* - அநுபவ மருந்து.
*கைம்மறித்தல்* - கையால் தடுத்தல்.
*கைம்மலை* - யானை.
*கைம்மா* - யானை.
*கைம்மாறு* - ப[illegible]
*கைம்மிகுதல்* - அளவு கடத்தல்.
*கைம்முதல்* - வியாபாரத்திற்கு வைத்த முதற்பொருள்.
*கைம்முற்றுதல்* - முடிவு பெறுதல்.
*கைம்மை* - விதவை
[illegible]றுமை, அறிவின்மை, பொய்.
*கையடக்கம்* - கைக்குள் அடங்குகை.
*கையடை* - பாதுகாக்குமாறு ஒப்புவித்தல், பாதுகாக்குமாறு ஒப்புவித்த பொருள்.
*கையமர்த்துதல்* - கைகாட்டி அடங்கச் செய்தல்.
*கையயர்தல்* - சோர்வடைதல்
*கையரி* - தேடுதல்.
*கையர்* - கீழ் மக்கள், வஞ்சகர், மூடர், கள்ளர்.
*கையலகு* - கைம்மரம்.
*கையலைத்தல்* - துன்புறுத்துதல்.
*கையல்லது* – தகாதது.
*கையளித்தல்* - கொடுத்தல்.
*கையறம்* - இரங்கற்பா.
*கையறவு* - செயலற்ற நிலை, மரணம், துன்பம், ஊடல், வறுமை.
*கையறிதல்* -செய்யும் முறைமையறிதல், பழகுதல்.
*கையறுதல்* - செயலற்றிருத்தல், மனமழிதல், அளவு கடத்தில், மீட்சி அரிதாதல், இறத்தல்.
*கையாட்சி* - கைப்பழக்கம்.
*கையாந்தகரை* - கரிசிலாங்
*கையாளுதல்* - வழங்குதல், அபகரித்தல்.
*கையாள்* - குற்றேவல் செய்வோன்.
*கையாறு* - ஒழுக்க நெறி, செயலொழிதல், துன்பம்.
*கையாறுதல்* - இளைப்பாறுதல்.

**கையிகத்தல்** - அளவு கடத்தல், மீறுதல், இழத்தல்.
**கையிறை**- கைவிரலினிடுக்கு, கையிரேகை.
**கையுண்ணுதல்** - பிறர் கை நோக்கி உண்டு வாழ்தல்.
**கையுதிர்க்கோடல்** - விட்டு விலகுமாறு கையெழுத்துக் குறிப்பிடுதல்.
**கையுறுதல்**– கையிற்கிடைத்தல், தொடுதல்.
**கையுறை** - காணிக்கைப் பொருள.
**கையூட்டு** - இலஞ்சம்.
**கையேடு** - நாட்குறிப்புக்

**கையேற்றம்** - செல்வப் பெருக்கு நிலை, சிறு ஏற்றம்.
**கையை** - தங்கை.
**கையொட்டுக்கால்** - கர்ப்

**கையொப்பம்**-கையெழுத்து
**கையொலி** - சிறிய ஆடை.
**கையோடு** – உடன்.
**கைரவம்**- ஆம்பல்.
**கைராட்டு** - கையால் நூல் நூற்கும் இயந்திரம்.
**கைரியம்** - காவிக்கல்.
**கைலாகு** - கைத்தாங்கல்.
**கைலாயம்** - சிவன் வாழும்

**கைவட்டணை**- கையாற் செய்யும் அபிநயம்.
**கைவந்தி** - தோளின் கீழ்க் கையில் அணியும் ஓர்

**கைவருதல்** - தேர்ச்சி பெறுதல், ஒழுங்கே நிகழ்தல், கைகூடுதல்.
**கைவலம்** - மோட்சம்.
**கைவல்லியம்** - மோட்சம், அநுகூலம்.
**கைவழக்கம்** - கொடைத்தன்மை, கோயில் பூசாரி முதலியோர்க்குரிய உரிமை, குடிமக்களுக்குரிமை.
**கைவழங்கல்** - கொடுத்தல்.
**கைவழி** - யாழ்
**கைவளம்** - கைத்தொழிற்றிறம், கைப்பொருள், செழுமை.
**கைவளர்தல்** – போற்றப் படுதல்.
**கைவாரிகள்** - நின்றேத்துவோர்.
**கைவாளை** - அடைப்பை.
**கைவாள்** - சிறுவாள்.
**கைவிடுதல்** - விட்டொழித்தல்.
**கைவிதிர்த்தல்**-மறுப்பு அச்சம் புகழ்ச்சி ஆகியவற்றின் குறியாகக் கையை அசைத்தல்.
**கைவிளக்கு** - சிறு விளக்கு.
**கைவிளி** - சீழ்க்கையொலி.
**கைவினை** - கைவேலை.
**கைனி**- கைம்பெண், அத்தம்.

## கொ – ஓர் எழுத்து.

**கொகுடி** - முல்லைக் கொடி வகை.
**கொக்கரித்தல்** - ஆரவாரித்தல், கர்ச்சித்தல்.

*கொக்கரை* - வாத்தியவகை, பாம்பு, வில், தாளம், வலை, வைக்கோல் எடுக்கும் கருவி.

*கொக்கான்* - அம்மானை, பெண்கள் விளையாட்டு.

*கொக்கி* - கொளுவி.

*கொக்கிப்புழு* - புழுவகை.

*கொக்கிறகு* - கொக்கு மந்தாரை.

*கொக்கு* - பறவை வகை, மாமரம், செந்நாய், குதிரை. மூல நட்சத்திரம்.

*கொக்குவம்*- கொக்கோகம்.

*கொக்கோகம்* - ஒரு காம நூல்.

*கொங்கன்* - சேரன், கொங்க நாட்டான்.

*கொங்காளன்* - குதிரை வகை.

*கொங்கு* - பூந்தாது,வாசனை, தேன், கள், ஒரு நாடு.

*கொங்கை* - முலை.

*கொசவம்* - கொய்சகம்.

*கொசு* - கொதுகு.

*கொசுகு* - கொசு.

*கொச்சை* – இழிவு, ___ தவன், திருந்தாப் பேச்சு, ஆடு, ஆட்டுப்பால், சீகாழி.

*கொச்சையர்* - இடையர், இளையர்.

*கொஞ்சம்* - சிறிது.

*கொஞ்சல்* - சரசப் பேச்சு, மழலைப் பேச்சு.

*கொடி* – படர்கொடி, துவசம், ஒழுங்கு, வரிசை, காக்கை, கிழக்கு, கயிறு, நீளம், கேது, சிறுபிரிவு.

*கொடிக்கால்* - வெற்றிலைத் தோட்டம்.

*கொடிச்சி* — குறிஞ்சி நிலப் பெண்.

*கொடிஞ்சி* - தேரின் முன்னுள்ள அலங்காரவுறுப்பு,

*கொடிநிலை* - சூரியன்.

*கொடிப்படை* - முன்னணிப் படை.

*கொடிப்புல்* - அறுகு.

*கொடிமுந்திரி* - திராட்சை.

*கொடியன்* - தீயன்.

*கொடிவழி* – ஒற்றையடிப் பாதை, வழிசாவளி.

*கொடிவிடுதல்*-மிகுதியாதல்.

*கொடிவீடு* - பூந்தோட்டங்களில் படர்கொடிகளைப் படர விட்டமைக்கும் அறை.

*கொடிறு* - கன்னம், குறடு, யானையின் மதச்சுவடு, பூச நாள்.

*கொடிற்றுக்கோல்*-கன்னக் கோல்.

*கொடுகுதல்* - கொடுமையாதல்.

*கொடுகொட்டி* - ஒருவகைப் பறை, சிவபெருமான்கூத்து.

*கொடுக்கு* - கொட்டும் உறுப்பு, ஆடைத்தொங்கல்.

*கொடுங்காய்* - வெள்ளரி.

*கொடுங்கை* - மடித்த கை, வீட்டின் உறுப்பு.

*கொடுங்கோல்* - நீதி தவறிய அரசாட்சி.
*கொடுஞ்சி* - கொடிஞ்சி.
*கொடுநாக்கெறிதல்* - விருப்பக் குறியாக நாக்கால் வாய்ப்புறத்தைத் துழாவுதல்
*கொடுநுகம்* - நுகத்தடி, கலப்பை, மகம்.
*கொடுந்தமிழ்* - செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நாடுகளில் வழங்கும் தமிழ் மொழி.
*கொடுந்துயர்* - மிகத் துயரம், சாவு.
*கொடுப்பு* - கதுப்பு.
*கொடுமரம்* - வில், ஏணிப் பழு, தனுர் ராசி.
*கொடுமுடி* - மலையுச்சி, உப்பரிகை.
*கொடுமுடிச்சு* - அவிழ்க்க இயலாத முடிச்சு.
*கொடுமை* - குரூரம், தீமை,
*கொடும்பாடு* – மாறுபாடு, கொடுமை.
*கொடும்பாவி* - கிராமசாந்தியாகத் தெருவிலிழுத்துக் கொளுத்தப்படும் வைக் கோற்பாவை, மிகுந்தபாவி.
*கொடும்பு* - சிம்பு.
*கொடும்பை* - நீர் அருவி, தூம்பு, தாம்பு, குன்றம், குளம்.
*கொடுவரி* – புலி.
*கொடுவாய்* - வளைந்தவாய், புலி, குறளை.
*கொடுவாள்* - அரிவாள், மழு.
*கொடுவினை* - பாவம்.
*கொடுவேலி* - சித்திர மூலம் என்னும் கொடி.
*கொடூரம்* - குரூரம்.
*கொடை* - ஈகை.
*கொடைக்கடம்* - கொடையாகிய கடமை.
*கொடைக்கை* - வீட்டின் முகடு.
*கொடைநேர்தல்* - மகளை மணஞ் செய்து கொடுக்க உடன்படுதல்.
*கொடைமடம்* - வரையறையின்றி வழங்குதல்.
*கொடையெதிர்தல்* - கொடுத்ததைப் பெற்றுக் கொள்ளுதல்.
*கொட்குதல்* - சுழலுதல், திரிதல், வெளிப்படுதல்.
*கொட்டகாரம்*- பண்டசாலை.
*கொட்டகை* - பந்தல் வகை, மாட்டுக்கொட்டில்.
*கொட்டடி* - மாட்டுக்கொட்டில், அறை, சிறைச்சாலை.
*கொட்டம்* - இறுமாப்பு, ஓலைப்பெட்டி, நூற்கும் கொட்டை, வாசனைப் பொருள், முழக்கம், தொழுவம், நீரொழுங்கு.
*கொட்டாரம்* - தானியக் களஞ்சியம்.
*கொட்டாவி* - நெட்டுயிர்ப்பு.

*கொட்டி* - ஒருவகை நீர்க் கொடி, கோபுர வாயில், கூட்டம்.

*கொட்டில்* —மாட்டுத் தொழுவம், வில்வித்தை பயிலுமிடம், கொட்டகை, சிறு குடில்.

*கொட்டு* -கொட்டுதல், வாத்தியம், தாளக்காலம், மண்வெட்டி, நெற்கூடு.

*கொட்டுதல்* - வாத்தியம் வாசித்தல், சம்மட்டியடித்தல், குற்றுதல், பஞ்சரைத்தல்,அடித்தல்,தோண்டுதல்

*கொட்டுப்பிடி* - உளியடிக்கும் கருவி.

*கொட்டுவான்* - கொட்டுப்பிடி, தேள்.

*கொட்டை* - விதை, நூற்கும் கதிர், பாதக் குறட்டின் குமிழ், நூற்கும் கதிரின் கொட்டை.

*கொட்பு* - சு குதிரைக்கதி, நிலையின்மை, கருத்து.

*கொணர்தல்* - கொண்டு வருதல்.

*கொண்கன்* - கணவன், நெய்தல் நிலத் தலைவன்.

*கொண்டல்* - மேகம், கீழ்த்திசை, கீழ்க்காற்று, மழை, மேடராசி.

*கொண்டவன்* - கணவன்.

*கொண்டாடுதல்*- விழா முதலியன நிகழ்த்துதல், பாராட்டுதல்.

*கொண்டாட்டம்* - கூடிக் களித்தல், பாராட்டு.

*கொண்டி* - கொள்ளைப் பொருள், விலைபொருள், கப்பம், உணவு, களவு, கொள்ளை, பரத்தை, புறங்

*கொண்டிமகளிர்* - சிறைப் பிடிக்கப்பட்ட மகளிர்.

*கொண்டியம்* - குறளை.

*கொண்டுகூட்டு* - செய்யுளடிகளில் உள்ள சொற்களை ஏற்ற இடங்களில் சேர்த்துப் பொருள் கொள்ளும் முறை.

*கொண்டை*- கூந்தல்முடிச்சு, இலந்தை, பறவைச் சூட்டு,

*கொண்மூ* - மேகம்.

*கொதி*-வெப்பம், கொதிப்பு,

*கொதுகு* - கொசு.

*கொதுவை* - அடைமானம்.

*கொததடிமை* - குடும்பத்தோடு அடிமையாதல்.

*கொத்தமல்லி* - ஒருவகைச் செடி.

*கொத்தமுரி*-கொத்தமல்லி.

*கொத்தம்* - கொத்தமல்லி, எல்லை.

*கொத்தளம்* - மதிலுறுப்பு, மதிற்புறம்.

*கொத்தளிப்பாய்*—புற்பாய்.

*கொத்தன்* —கட்டிட செய்பவன்.

*கொத்திதழி* - சரக் கொன்றை.

*கொத்து* - கொத்துதல், கொத்தனது ஒருநாள் வேலை, திரள், குலை, சோறு.
*கொத்துக்காரி* - பரம்பரையுரிமையுடைய கோயிற்றேவடியாள்.
— — - குருடன், சொத்தை, பாவி, அஞ்ஞானி, அரைகுறை, நூற்சிம்பு.
*கொதகன்*-படைத்தலைவன்.
*கொந்தம்* - மயிர்க்குழற்சி.
*கொந்தல்*-தணியாக்கோபம், கொத்துகை, குளிர்.
*கொந்தழல்* - முறுகிய தீ.
*கொந்தளம்*—மாதர்தலைமயிர், குழப்பம், விலங்கினிளமை, காண்டாமிருகம்.
*கொந்தளிப்பு* - பொங்கியெழல்.
*கொந்தி* - வரிக்கூத்துவகை.
*கொந்து* - ஒற்றைக்காலால் குதித்தாடும் விளையாட்டு, கொத்துகை, திரள், கோபம், கொத்து.
*கொப்பம்* - யானைபிடித்தற்காக வெட்டும் குழி.
*கொப்பரை* - பெருங்கலம், முதிர்ந்த தேங்காய்.
*கொப்பளித்தல்* - நீரை வாயிலிட்டு உமிழ்தல்.
*கொப்பு* - மரக்கிளை. மயிர் முடி, மகளிர் காதணி.
*கொப்புளம்* - குமிழி போன்ற பரு.
*கொப்புளித்தல்* - கொப்பளித்தல்.

*கொப்புள்* - கொப்புளம்.
*கொப்பூழ்* - உந்தி.
*கொம்பர்* - கொம்பு.
*கொம்பி* - சனி.
*கொம்பு* - மரக்கிளை, விலங்குகளின் கொம்பு, பல்லக்கின் கொம்பு, நீர்வீசும் கருவி, ஊது கொம்பு, கோல்.
*கொம்பேறிமூக்கன்* - ஒருவகைப் பாம்பு.
*கொம்மட்டி* - தும்மட்டிக்காய்.
*கொம்மி* - கும்மி.
*கொம்மை* - திரட்சி, மமடு, மார்பு, வட்டம், பெருமை, இளமை, அடுப்புக்குமிழ், கைகுவித்துக் கொட்டு
*கொய்* - ஒருவகை மீன்.
*கொய்சகம்* — ஓரம் சுருக்கப்பட்ட உடைப்பகுதி.
*கொய்தல்*- பறித்தல், தெரிந்தெடுத்தல்.
*கொய்யகம்* - கொய்சகம். அலங்காரமாக ஓரம்சுருக்கி அமைத்துத் தொங்கிவிடப்பட்ட ஆடை.
*கொய்யடிநாரை* - வண்டானம் என்னும் நாரை.
*கொய்யல்* - கொய்யா.
*கொய்யுளை*- கொய்துமட்டமாக்கப்பட்ட குதிரைப் பிடரிமயிர், குதிரை.
*கொரலி* — தினை.
*கொலு* - திருவோலக்க இருப்பு.

*கொலுசு* - ஒரு வகைக்

*கொலை* - கொல்லுகை.
*கொலைக்களம்* - கொல்லப் படும் இடம்.
*கொலைஞன்* - கொலைகாரன், படன்.
*கொலைமலை* - யானை.
*கொலைவன்* - வேடன், கொலைக்காரன், சிவன்.
*கொல்* - கொலைத்தொழில், துன்பம்,கொல்லத்தொழில், கொல்லன், ஓர் இடைச் சொல்.
*கொல்குறும்பு* - பாலை நிலத்து ஊர்.
*கொல்லர்* - கருமார், அரண் மனை வாயில் காப்போர்.
*கொல்லறு* - கொத்தன் கரண்டி.
*கொல்லி* - கொல்லும் தன் மையது, ஒரு பண், ஒரு மலை.
*கொல்லிப்பாவை*- கொல்லி மலையில் உள்ள மோகினி தேவதை (நோக்குவாரைச் சிரித்து வசப்படுத்திக்கொல் வது).
*கொல்லுதல்* - உயிரைப் போக்குதல், அழித்தல்,உழு தல்.
*கொல்லை* - புன்செய் நிலம், முல்லை நிலம், தரிசு, புறக் கடை, தோட்டம், தினைப் புனம்.
*கொல்லைமை* - வரம்பு கடந்து நடத்தல்.

*கொவ்வை* - கொவ்வைக் கொடி.
*கொழிஞ்சி* - நாரத்தை, ஒரு வகைச்செடி, பூவாது காய்க் கும் மரம்.
*கொழித்தல்* - தெள்ளுதல், செழிப்புறுதல், பொழிதல், வாருதல், ஒதுக்குதல், குற் றங் கூறுதல், ஆராய்தல், மேற்கிளம்புதல்.
*கொழு* - ஏர்க்காறு, பெரிய

*கொழுகொம்பு* - கொடிகள் ஏறிப்படர்தற்கு நடும் கொம்பு, பற்றுக்கோடு.
*கொழுக்கட்டை* - பண்ணி காரவகை.
*கொழுதுதல்* - குடைதல், கிழித்தல், பறித்தல்.
*கொழுநனை* - மலரும் பரு வத்திலுள்ள அரும்பு.
*கொழுநன்* - கணவன்.
*கொழுந்தன்* - கணவ னுடன் பிறந்தான்.
*கொழுந்தி* - மனைவியுடன் பிறந்தவள்.
*கொழுந்து* - இளந்தளிர்,

*கொழுந்துதல்* - சுவாலை விட்டு எரிதல்.
*கொழுப்பு* - செழிப்பு, நிணம், திமிர், நிலத்தின் மதர்ப்பு.
*கொழுமுதல்* - மரத்தின் பருத்த அடிப்பகுதி.

*கொழுமை* – செழுமை, வளமை, இளமை, அழகு, நிறம், குளிர்ச்சி.
*கொளு* - பழு வெலும்பு, பொருத்துவாய், உருவு திரையை மாட்டுங்கருவி, செய்யுட் கருத்தையறிவிக்கும் சொற்றொடர்.
*கொளுத்து* - நகைகளின் பூட்டு, உடற்சந்து.
*கொளுத்துதல்* – நீப்பற்ற வைத்தல், கொள்ளச் செய்தல், விளக்குதல், அறிவுறுத்தல், சண்டை மூட்டுதல், கடுமையாய் வெயில் காய்தல்.
*கொளுவி* - கொக்கி.
*கொளுவுதல்* - கொள்ளச் செய்தல். தீ மூட்டுதல், தூண்டிவிடுதல், பூட்டுதல், அகப்படுத்துதல்.
*கொளை* - பாட்டு, தாளமிட்டு ஒற்றறுத்தல், பிடிப்பு, பயன், கோட்பாடு.
*கொள்* - கொள்ளு, குடை வேல், சிறுநிறை யளவு.
*கொள்கலம்* - பண்டமிடும் கலம்.
*கொள்கை* - கோட்பாடு, பெறுகை, ஒழுக்கம், செருக்கு, மதம், கற்பு.
*கொள்கையிடம்* - தவச்[illegible]
*கொள்முதல்* - வாங்கின [illegible]
*கொள்ளம்* - குழைசேறு.
*கொள்ளார்* - பகைவர்.
*கொள்ளி* - நெருப்பு, கொள்ளிக்கட்டை.
*கொள்ளு* - கரணம்.
*கொள்ளுதல்* - பெறுதல், விலைக்குவாங்குதல், மணம் செய்து கொள்ளுதல், கவர்தல்.
*கொள்ளுப்பாட்டன்* - பாட்டனுக்குத் தந்தை.
*கொள்ளுப்பேரன்* - பேரன் மகன்.
*கொள்ளை* - சூறையிடுகை, மிகுதி, நோய்வகை, பயன்.
*கொள்ளை கொள்ளுதல்* - வசீகரித்தல், கொள்ளையடித்தல்.
*கொள்ளை நோய்* - பெருவாரி நோய்.
*கொறி* - ஆடு, மேடராசி.
*கொறித்தல்* - சிறிது சிறிதாக உண்ணுதல், பொறுக்[illegible]
*கொறு* - வாய்க்கூடு.
*கொறுக்காய்ப்புளி* - ஒரு வகை மரம்.
*கொறுக்கை* - குறட்டை, நாணல்.
*கொற்றக்குடை* - அரசாங்கக் குடை.
*கொற்றத்தேவி* - பட்டத்தரசி.
*கொற்சேரி* - கொல்லர் இருக்கை.
*கொற்றம்* - வெற்றி, அரசியல், வீரம், வன்மை.
*கொற்றவன்* - வெற்றியாளன், அரசன்.

*கொற்றவாயில்* - ஆசார வாயில்.
*கொற்றவி* - அரசி.
*கொற்றவை* - துர்க்கை, வீரலட்சுமி.
*கொற்றன்* - கொத்தன்.
*கொற்றாள்* - வேலை செய்பவன்.
*கொற்றான்* - கொடிவகை.
*கொற்றி* - துர்க்கை, ஒரு வகை வரிக்கூத்து, பசுவின்
*கொற்றியார்* - துளசிமாலை முதலியன அணிந்து துறவிகளாகத் திரியும் பெண் துறவிகள், திருமாலடியவர், கலம்பக வுறுப்புக்களுள்
*கொற்றுறை* - கொல்லன் பட்டடை.
*கொனை* - நுனி.
*கொன்* - பயனின்மை, வீண், அச்சம், விடியல், பெருமை,
*கொன்றை* - மர வகை.
*கொன்னாளன்* - பயனற்றவன், பாவி.
*கொன்னுதல்* - திக்கிப் பேசுதல், குழறுதல்.
*கொன்னே* - வீணாக.
*கொன்னை* - திருந்தாப் பேச்சு.

**கோ** - ஓரெழுத்து. அரசன், தந்தை, தலைவன், குயவன், மலை, பெருமை, எருது, சுவர்க்கம், பூமி, கண், நீர்.

*கோகத்தி* - பசுக்கொலை.
*கோகம்* - சக்கரவாகப்புள், செந்நாய், உலர்ந்த பூ, தவளை.
*கோகநகம்* - தாமரை.
*கோகயம்* - தாமரை.
*கோகனதம்* - செந்தாமரை.
*கோகிலம்* - குயில், குரங்கு, பல்லி, துணை.
*கோகு* - கபடம், கழுதை, புயம்.
*கோக்காலி* - பாத்திரங்கள் வைப்பதற்குச் சுவரை ஒட்டி அமைக்கப்படும் மேடைபோன்ற தட்டு.
*கோங்கம்* - கோங்கிலவு, நெல்லி.
*கோங்கலர்* - முற்காலத்து வழங்கிய ஒருவகைத் துகில்.
*கோங்கு* - மரவகை.
*கோசகாரம்* - பட்டுப்பூச்சி.
*கோசமதம்* - ஆண்யானையின் குறியினின்றுவரும் மதநீர்.
*கோசம்* - கருப்பம், முட்டை, பொக்கிஷசாலை, புத்தகம், உறை, வீதி, ஆண்குறி.
*கோசரம்* - பொறியுணர்வு, குறித்த காலத்தில் கிரகங்கள் நிற்கும் நிலை, பூந்தாது, கோத்திரம்,
*கோசலம்* - பசு மூத்திரம், ஒரு நாடு.
*கோசனை* - பேரொளி.
*கோசாலை* - பசுக்கொட்டில்.
*கோசிகம்* - பட்டாடை, ஒரு பண், சாம வேதம், கூகை

**கோடகம்** - சிகரமாகச் செய்த முடிவகை, குதிரை, புதுமை, பலதெருக் கூடுமிடம்.

**கோடணை** - ஒலி, வாத்தியப் பொது, யாழ் வாசித்தல், கொடுமை, அலங்காரம்.

**கோடதகம்** - சுக்கு.

**கோடம்** - பேரொலி, வெண்கலம், எல்லை.

**கோடரம்** - மரக்கொம்பு, தேரின் மொட்டு, மரப்பொந்து, குரங்கு, குதிரை, சோலை.

**கோடரவம்** - துன்பம்.

**கோடரி** - மரம்பிளக்கும் கருவி.

**கோடல்** - கொள்ளுதல், பாடங் கேட்டல், மனத்துள் கொள்ளுதல், வளைவு, வெண்காந்தள்.

**கோடாய்** - [illegible]

**கோடி** - நுனி, புத்தாடை, புதுமை, வளைவு, தொகுதி, நுனி, நூறு நூறாயிரம், கடலுட் செல்லும் தரைமுனை, எல்லை, சேனையின் பிற்பகுதி.

**கோடிகம்** - பூந்தட்டு, ஆடை, குண்டிகை, அணிகலச் செப்பு.

**கோடிகர்** - ஆடைநெய்வோர்.

**கோடியர்** - கூத்தர், சிவிகை தூக்குவோர்.

**கோடீரம்** - சடைமுடி, இந்திரன் வில்.

**கோடு** - மரக்கிளை, [illegible], வளைவு, யானை பன்றிகளின் தந்தம், ஊது கொம்பு, சங்கு, பிறைமதி, மயிர்முடி, மலைச்சிகரம், மலை, நீர்க்கரை, குளம், ஆடைக்கரை, நுனி, கொடுமை.

**கோடுதல்** - வளைதல், நெறி தவறுதல், நடுநிலை தவறுதல்.

**கோடை** - வேனிற்காலம், மேல்காற்று, குதிரை, காந்தள், வெயில்.

**கோட்டகம்** - கரை, பள்ளம், ஆழமான நீர்நிலை.

**கோட்டம்** - வளைவு, வணக்கம், கோயில், நடுநிலை திறம்புதல், மனக்கோணல், பகைமை, நாடு, நகரம், பசுக்கொட்டில், கரை, யாழ், பாசறை, சிறைச்சாலை, ஒருவகை வாசனைச் செடி, புறு, ஆரவாரம், அறை.

**கோட்டாலை** - துன்பம், விகடக் கூத்து.

**கோட்டான்** - கூகை.

**கோட்டி** - கூட்டம், சபை, பைத்தியம், பேச்சு, கூடியிருத்தல், கோபுரவாயில், மனைவாயில், துன்பம்.

**கோட்டிகொளல்** - சபையில் பேசுதல்.

**கோட்டினம்** - எருமைக் கூட்டம்.

**கோட்டுதல்** - வளைத்தல், மறித்தல், கட்டுதல், சித்திரமெழுதுதல்.

***கோட்டுநீறு*** - கிளிஞ்சிற் சுண்ணாம்பு.

***கோட்டுப்பூ*** - மரக்கொம்புகளில் தோன்றும் பூ.

***கோட்டுமா*** - யானை, காட்டுப் பன்றி, எருமைக்கடா.

***கோட்டுமீன்*** - சுறாமீன்.

***கோட்டுவாத்தியம்*** - வீணை வகை.

***கோட்டூர்தி*** - தந்தப்பல்லக்கு.

***கோட்டெங்கு*** - குலைக யுடைய தென்னை.

***கோட்டை*** - காவலுள்ள மதில் சூழ்ந்த ஊர், 21 மரக்கால் கொண்ட தொரு முகத்தலளவை, நெல்லை உள்ளே வைத்து வைக்கோலால் மூடிக் கட்டிய பொதி, வைக்கோற் போர், பரிவேடம், காடு.

***கோட்படுதல்*** - பிடிக்கப் படுதல், அறியப்படுதல், கொள்ளப்படுதல், வலிமை கொள்ளுதல்.

***கோட்பறை*** - செய்திகளை நகரத்தார்க்கு அறிவிக்கும் பறை.

***கோட்சாடு*** - கொள்கை, நடத்தை, மதம்.

***கோட்பு*** - வலிமை, கொள் ளுகை,

***கோட்புகுதல்*** - மரம் முதலியன பயன்கொள்ளும் பருவத்தனவாதல்.

***கோணங்கி*** - கோமாளி.

***கோணம்*** - வளைவு, யானைத் தோட்டி, திசை கூடுமிடம், குறுகிய தெரு.

***கோணல்*** - வளைவு, கூன், மாறுபாடு.

***கோணவட்டம்*** - அரச விருதுகளுள் ஒன்று.

***கோணி*** - சாக்குப்பை, பன்றி, எட்டு மரக்கால் அளவு.

ல் — வ

நெறி பிறழ்தல், வெறுப்புக் கொள்ளுதல்.

***கோணை*** - கொடுமை, துன்பம், அழிவின்மை, கோணல், வலிமை.

***கோண்*** - வளைவு, மாறுபாடு, கோணம், நுண்ணிய பகுதி, கொடுங்கோன்மை.

***கோண்டை*** - இலந்தைக் கனி.

***கோண்மா*** - புலி, சிங்கம் முதலிய கொடிய வன விலங்குகள்.

***கோண்மீன்*** - கிரகம்.

***கோதடி*** - காவற் கயிற்றை உரைசாமற் காக்கும் தடி.

***கோதண்டம்*** - வில், இராமனது வில், புருவமத்தி பண்டைக் காலத்தில் பள்ளிச் சிறார்க்கு அளிக்கும்

***கோதம்*** - கோத்திரம், சினம், பொல்லாங்கு.

***கோதனம்*** - பசுச் செல்வம், பசுக்கன்று.

***கோதா*** - உடும்பு.

*கோதாட்டு* - குறும்பு விளையாட்டு, வஞ்சிக்கை, பாராட்டு.
*கோதாரி* - வாந்திபேதி.
*கோதி* - கோதுமை.
*கோதிகை* - உடும்பு.
*கோது* – சக்கை, குற்றம், பயனின்மை, பழத்தி

*கோதுகம்*-உள்ளக் களிப்பு.
*கோதுகலம்* - கோதுகம்.
*கோதுகுலம்* - கோதுகலம்.
*கோதுதல்* - மயிர்ச்சிக்கெடுத்தல், வாருதல், சிதறச் செய்தல்.
*கோதுமை* - தானிய வகை.
*கோதுமம்* - கோதுமை.
*கோதூளி* - பசுக் குளம்பால் எற்றப்படும் தூசு, அந்திநேரம்.
*கோதை* - பெண் தலைமயிர், முத்தாரம், ஒழுங்கு, ஆண்டாள், பூதம், சேரன், வில்லாளர் கையிற் பூணும் தோலுறை, மரக்காற்பறை.
*கோத்திரம்* - வமிசம், குடி, மலை, நெட்டி.
*கோத்திரை* - பூமி.
*கோத்தை* – பழுது.
*கோநகர்* - இராசதானி, கோயில்.
*கோநாய்* - ஓநாய்.
*கோந்தி* - குரங்கு.
*கோபதி* - எருது, இந்திரன்.
*கோபம்* - சினம், தம்பலப் பூச்சி, ஒருவகை யாடை.
*கோபன்* - பசுக் காப்போன், சிவன்.
*கோபி* - சினமுள்ளவள், கோபிநாமம், நன்னாரி.
*கோபிசந்தனம்* - மஞ்சள் நிறமுள்ள திருமண்.
*கோபுரம்* - கோயிலின் வாயில், நகர வாயில்.
*கோப்பழித்தல்*- சீரழித்தல்.
*கோப்பிடுதல்* - ஏற்பாடு செய்தல்.
*கோப்பு* - கோக்கை, ஒழுங்கு, அலங்காரம், உபாயம், கவிவு, தூக்குச் சுமை, அமைப் பழகு.
*கோப்பெண்டு* - அரசன்

*கோப்பெருங்கணக்கர்* - அரசாங்கத்துத் தலைமைக் கணக்கர்.
*கோப்பெருந்தேவி* - பட்டத்தரசி.
*கோமகன்* - அரசன்.
*கோமடந்தை* - இராச்சிய இலக்குமி.
*கோமயம்* - சாணம்.
*கோமரம்* - தெய்வ ஆவேசம்.
*கோமளம்* - இளமை, அழகு, மேன்மை, கறவைப் பசு, மாணிக்கவகை.
*கோமாயு* - நரி.
*கோமாரி* - பசுக்களுக்கு வரும் ஒருவகை நோய்.
*கோமாளி* - கோணங்கி.
*கோமான்* - அரசன், சிறந்தோன், தலைவன், பன்றி.

***கோமுட்டி*** - வடநாட்டு வணிக சாதியார்.

***கோமுத்திரி*** - சித்திர கவி.

***கோமுறை*** - அரசாட்சி முறை.

***கோமேதகம்*** - நவமணி

***கோம்பல்*** - தனியாக் கோபம்.

***கோம்பி*** - பச்சோந்தி, ஓந்தி.

***கோம்பு*** - சினக் குறிப்பு.

***கோம்பை*** - குளும்பை, தேங்காயோடு, அறிவிலி.

***கோயிலாழ்வார்*** - கருப்பக் கிரகம்.

***கோயிலாள்*** — பட்டத்

***கோயில்*** - அரண்மனை, ஆலயம்.

***கோயில் கொள்ளுதல்*** - வாழுமிடமாகக் கொள்ளு தல்.

***கோயில்வாரியம்*** - கோயில் விசாரணைச் சபை.

***கோயிற்பற்று*** - கோயிலின் ... ற்குட்பட்ட ஊர்ப்பகுதி.

***கோய்*** - கள் முகக்கும் கலம், வாசனைச் செப்பு, குகை.

***கோரகம்*** — அரும்பு.

***கோரகை*** - பிச்சைப் பாத் திரம், அரும்பு, குயில், கஞ்சா.

***கோரக்கர் மூலி*** - கஞ்சா.

***கோரசம்*** - சிவல் என்னும் பறவை.

***கோரணி*** - கேலிக்கூத்து.

***கோரம்*** - கொடுமை, அச்சந் தருவது, விகாரம், வட் டில், சோழன் குதிரை.

***கோரி*** - பார்வதி, கல்லறைச் சமாதி.

***கோரிகை*** - அகப்பை.

***கோரிக்கை*** - வேண்டு கோள்.

***கோருதல்*** - வேண்டுதல், விரும்புதல்.

***கோரை*** - புல்வகை.

***கோரைப்பல்*** - விகாரமான பல், நீண்ட பெரிய பல்.

***கோரோசனை*** - பசுவின் வயிற்றினின்று எடுக்கப் படும் ஒரு வாசனைப் பொருள்.

***கோலச்சாரி*** - வேடமகள் கொற்றவை யுருக்கொண்டு ஆடும் கூத்து.

***கோலம்*** - அழகு, உருவம், நிறம், வேடம், தன்மை, அலங்காரம், விளையாட்டு, தரையிலிடும் கோலம், நீரோட்டம், பன்றி, குரங்கு, பீர்க்கு, இலந்தை, பாக்கு, முயற்சி.

***கோலறை***-அளந்து கொடுக் கப்படும் நிலம்.

***கோலாகலம்*** - ஆடம்பரம், சந்தோஷ ஆரவாரம்.

***கோலாலம்*** - கோலாகலம்.

***கோலாங்கூலம்*** - முசு.

***கோலாட்டம்*** - மகளிர் விளை யாட்டு.

*கோவாள்* - தேர்ப்பாகன்.
*கோலி* - சிறுகுண்டு போன்ற விளையாட்டுக்
*கோலிகன்* - நெசவுத் தொழில் செய்பவன்.
*கோலுதல்* - வளைத்தல், திரட்டி வைத்தல், தொடங்குதல், பிரித்தல்.
*கோலெரி* - விளக்குத் தண்டின் மீதுள்ள விளக்கு.
*கோலை* - மிளகு.
*கோலொற்றுதல்* - அம்பெய்தல.
*கோலோர்* - யானையை அடக்கும் குத்துக் கோற்காரர்.
*கோல்* - கம்பு, தண்டு, திரட்சி, குதிரைச்சம்மட்டி, அம்பு, ஈட்டி, யாழ் நரம்பு, துலாக்கோல், துலாராசி, எழுதுகோல், அரசாட்சி, ஐப்பசி மாதம், அளவு கோல், அணியின் சித்திர
*கோல் கொள்ளுதல்* - தேர்
*கோவணம்* - கௌபீனம்.
*கோவம்* - கோபம், தம்பலப் பூச்சி, பொன்.
*கோவலர்* - இடையர்.
*கோவன்* - இடையன், அரசன்.
*கோவித்தியர்* - முல்லை நில மகளிர்.
*கோவில்* - கோயில், அரண்மனை, சிதம்பரம், ஸ்ரீரங்கம்.
*கோவிலங்கு* - சிங்கம்
*கோவேள்* - குயவன்.
*காவேறு கழுதை* - கழுதை வகை.
*கோவை* - கோத்த வடம், ஒரு பிரபந்தம், ஏற்பாடு, வரிசை, கொடிவகை.
*கோவைசியர்* - இடையர்.
*கோழம்பம்* - குழப்பம்.
*கோழரை* - வழு வழுப்பான அடி மரம்.
*கோழி* - ஒரு பறவை, விட்டில், உ...,
*கோழை* - கபம், பயங்கொள்ளி, மன வலிமையின்மை, சிறு பிள்ளை.
*கோழைபடுதல்* - தாழ்வடைதல்.
*கோளகம்* - மிளகு, திப்பலி, தாளகம், விரியன் பாம்பு.
*கோளகன்* - விதவை பெற்ற மகன்.
*கோளகை* - வட்ட வடிவம், யானையின் தந்தத்திலிடும் பூண், மண்டலிப் பாம்பு.
*கோளம்* - உருண்டை, பிராணிகளின் உடலுக்குள் நீர் ஊறும் தசைப் பற்று.
*கோளரி* - சிங்கம்.
*கோளன்* - கோட் சொல்லுவோன்.
*கோளாளன்* - நூற்பொருளை விரைந்து ஏற்றுக் கொள்பவன்.
*கோளாறு* - தாறுமாறு, குற்றம், கலகம்.

**கோளி** - பூவாது காய்க்கும் மரம் (ஆல், அத்தி முதலியன), கொள்வோன்.
**கோளிகை** - குதிரை கழுதைகளின் பெட்டை.
**கோள்** - கொள்ளுகை, துணிவு, குறளை, கொலை, கிரகம், மதிப்பு, வலிமை, தன்மை, பொய், திமை, கொலை, பாம்பு, பரிவேடம், குலை, மேகம், ஒளி, வித்து, கொழு.
**கோறம்பு** - ஒருவகை நெற்றியணி.
**கோறல்** - கொல்லுதல்.
**கோறை** - துவாரம்.
**கோற்புழு** - உலண்டு.
**கோற்றொழில்** - அரிய வேலைப்பாடு. அரசாட்சி செய்தல்.
**கோனுன்** - இடையர் பட்டப் பெயர்.
**கோனோலை** - அரசனாணை எழுதப்பட்ட திருமுகம்.
**கோன்** - அரசன், தலைவன், கட்டியக்காரன், கோனுன்.
**கோன்மை** - அரசாட்சி.

## கௌ - ஓர் எழுத்து.

**கௌசிகம்** - பட்டாடை, விளக்குத் தண்டு, ஒரு பண்.
**கௌடிலம்** - வளைவு.
**கௌணப் பொருள்** - இலக்கணை வகையாற் கொள்ளும் பொருள்.
**கௌணம்** - முக்கிய மல்லாதது.
**கௌபீனம்** - கோவணம்.
**கௌமாரம்** - இளமை, முருகனைத் தெய்வமாகக் கொண்ட மதம்.
**கௌரம்** - பெண்மை, பொன்னிறம்.
**கௌரவம்** - மேன்மை, பெருமிதம்.
**கௌரிசங்கரம்** - உருத்திராக்க வகை.
**கௌரியன்** - பாண்டியன் பட்டப் பெயர்.
**கௌவுதல்** - கவருதல், வாயாற் கவ்வுதல்.
**கௌவை** - ஒலி, வருத்தம், பழிச் சொல், அவா, வெளிப்பாடு, கள்.
**கௌளி** - பல்லி, வெற்றிலைக் கட்டு, தேங்கா யோட்டுப் பாத்திரம்.

**ஙகரம்** - குறுணியளவு. ங என்னும் எழுத்து.
**ஙனம்** - தன்மை இடம்.

**சககமனம்** - உடன்கட்டையேறல்.
**சககாரம்** - தேமா.
**சகச்சிரம்** - ஆயிரம் சிவாகமங்களுள் ஒன்று.
**சகசண்டி** - பெருமூடன்.
**சகசம்** - இயற்கையானது.
**சகசாலம்** - மாயவித்தை.
**சகசோதி** - பேரொளி.

**சகடக்கால்** - வண்டிச்சக்கரம்.
**சகடம்** - வண்டி, தேர், சகட வியூகம், ஊர்க்குருவி, துந்துபி, உரோகிணி, வட்டில்.
**சகடு** - வண்டி, சதுரங்கக் காய், உரோகிணி.
**சகடை** - சகடு.
**சகண்டை** - ஒரு வாத்தியம்.
**சகதண்டம்** - உலக வுருண்டை.
**சகதி** - சேறு.
**சத்கதன்** - நடுநிலைமை யுள்ளவன்.
**சகத்திரம்** - ஆயிரம்.
**சகத்து** - உலகம்.
**சகபாடி** - ஒரு சாலை மாணுக்கன்.
**சகம்** - உலகம், வெள்ளாடு, பாம்புச்சட்டை, ஆண்டுகளைக் கணிக்கும் கணக்கு.
**சகலகலாவல்லி** - சரசுவதி.
**சகலம்** - எல்லாம், துண்டு.
**சகலர்** - மும்மலத்தாற் கட்டுண்ட உயிர்கள்.
**சகலன்** – மனைவியின் உடன் பிறந்தாளின் கணவன்.
**சகலாத்து** - கம்பளிப் போர்வை.
**சகல்** - கொக்கு.
**சகவாசம்** - நட்பு.
**சகளநிட்களம்** - சிவலிங்கம்.
**சகளம்** - உருவத்திருமேனி.
**சகனம்** - பிட்டம், சகாப்தம்.
**சகா** - தோழன்.
**சகாத்தம்** - ஓர் ஆண்டுமானம்.
**சகாப்தம்** - சகாத்தம்.
**சகாமியம்** - பயனை விரும்பிச் செய்யும் கருமம்.
**சகாயம்** - உதவி, துணை, விலை நயம்.
**சகி** - தோழி.
**ம்** - கூட.
**சகித்தல்** - பொறுத்தல்.
**சகிப்பு** - சகித்தல்.
**சகியம்** - நட்பு, நிலப்பனை, மஞ்சள், மாமரம், காவிரி யாறு உற்பத்தியாகும் மலை.
**சகுடம்** - செம்பு, நாய்.
**சகுணம்** - குணத்தோடுகூடியது.
**சகுந்தம்** - பறவைவகை, கழுகு, பூதம், கழுகு.
**சகுலி** - அப்பவருக்கம்.
**சகுனம்** - நிமித்தம், பறவை, கிழங்கு.
**சகோடம்**-16நரம்புகொண்ட யாழ்.
**சகோதரன்** - உடன் பிறந்தவன்.
**சகோதரி** - உடன் பிறந்தவள்.
**சகோரம்** – நிலாமுகிப் புள், சக்கரவாளப்புள்.
**சக்கரவாகம்** - பேராந்தை, செம்பரத்தை.
**சக்கட்டம்** - பரிகாசம், நிந்தை.

***சக்கரம்*** - உருளை, வட்டம், சக்கராயுதம், குயவன் சக்கரம், சக்கரவாளப்புள், பூமி, பெருமை, செக்கு, அரசு, மதில், கடல்.

***சக்கரவர்த்தி*** – பேரரசன்.

***சக்கரவாகம்*** - இணைபிரிய வருந்துவதாகக் கூறப்படும் ஒருவகைப் பறவை.

***சக்களத்தி*** - மாற்றாளான மனைவி, போலிப்பொருள்.

***சக்கிமுக்கிக்கல்*** - நெருப்புண்டாக்கப் பயன் படும் கல்.

***சக்கிரம்*** - சக்கரம்.

***சக்கிரன்*** - இந்திரன்.

***சக்கிரி*** - குயவன், செக்கான், பாம்பு.

***சக்கிலியன்*** - தோல் வேலை செய்பவன்.

***சக்கு*** - கண், பூஞ்சாணம்.

***சக்கை*** - கோது, சிறுமரத் துண்டு.

***சக்தி*** - வல்லமை, வேல், சூலம், சிவனது அருள், பார்வதி, கொடி, குடை, வாந்தி. இடிதாங்கி.

***சங்கடம்*** - துன்பம், இடுக்கு வழி.

***சங்கட்டம்*** - சங்கடம்.

***சங்கதம்*** - வடமொழி.

***சங்கதி*** - செய்தி, கருமம்.

***சங்கநிதி*** - குபேரனது நவ நிதிகளுள் ஒன்று.

***சங்கமம்***-கூடுதல், புணர்ச்சி, சிவனடியார் திருக்கூட்டம், இயங்குதிணைப் பொருள்.

***சங்கமருவுதல்*** - தமிழ்ச் சங்கத்தார து அங்கீகாரம் பெறுதல்.

***சங்கமர்*** - வீரசைவருள் ஒரு சாரர்.

***சங்கமிருத்தல்*** – சங்கத்தின் அங்கத்தினராயிருத்தல்.

***சங்கமுகம்*** - ஆறு கடலுடன் கூடுமிடம்.

***சங்கம்*** - சபை, கூட்டம், சங்கு, இலட்சங்கோடியாகிய எண்ணிக்கை, கணைக்கால், கைவளை, ஒரு படை வகுப்பு, அழகு.

***சங்கயம்*** - சந்தேகம்.

***சங்கரசாதி*** - கலப்பு சாதி.

***சங்கரம்*** - சாதிக் கலப்பு, போர், நஞ்சு.

***சங்கரன்*** - நன்மை செய்பவன், சிவன், கலப்புச் சாதியான்.

***சங்கரி*** - பார்வதி.

***சங்கரித்தல்*** - அழித்தல், சொல்லுதல்.

***சங்கலார்*** - பகைவர்.

***சங்கலிகரணம்***- சாதிக்கலப்பினை யுண்டாக்குவதாகிய பாவம்.

***சங்கலிதம்*** - கலப்பு எண், கூட்டல்.

***சங்கற்பம்*** - துணிவு, கொள்கை, தீர்மானித்தல்.

***சங்கன்னம்*** - நரம்பு.

***சங்காட்டம்*** - சேர்க்கை, வாசம்.

***சங்காத்தம்*** - சங்காட்டம்

*சங்காதம்* - கூட்டம்.
*சங்காத்தி* - தோழன்.
*சங்காரம்* - அழித்தல், கொல்லுதல்.
*சங்காரிட்டம்* - பூவைப் பொழியும் மேகம்.
*சங்காளர்* - கல்வியை நாடுபவர், காமுகர்.
*சங்கி* - சம்பந்தமுடையது.
*சங்கிதம்* - சந்தேகிக்கப்பட்டது.
*சங்கிதை*- தொகுதி, வேதத்தின் ஒரு பகுதி, சரித்திரம்,
ல் -
கனப்படுத்துதல்.
*சங்கியை* - எண்ணிக்கை.
*சங்கிரகம்* - சுருக்கம்.
*சங்கிரமணம்*- கிரகம் இராசியுடன் சேர்தல்.
*சங்கிரமம்* — சங்கிரமணம்.
*சங்கிரம்* - காடு
*சங்கிராந்தி* - மாசப்பிறப்பு, உத்தராயண நாள், பொங்கற் பண்டிகை.
*சங்கிராமம்* - போர்.
*சங்கிலி* - தொடர்.
*சங்கினி* - சங்கு சாதிப் பெண்.
*சங்கீதம்* - இசை, இசைப் பாட்டு.
*சங்கீரணம்* - கலப்பு.
*சங்கீர்த்தனம்* - புகழ்தல்.
*சங்கு* - நீர்வாழ் பிராணி, கைவளை, கோழி, ஒரு பேரெண், அபிநய வகை, படைக்கலம், ஊதும் சங்கு.
*சங்குச்சுரி*-சங்கின் உட்பக்கத்துச் சுழி.
*சங்குப்புரி* - சங்குச் சுரி.
*சங்கேதம்* - குழூஉக் குறி, அடையாளம், நியமம், உடன்பாடு.
*சங்கை* - சந்தேகம், பூதபிசாசம், எண்ணம், எண், கணைக்கால், மரியாதை.
*சங்கோசம்*-கூச்சம், சுருங்குதல், மஞ்சள்.
*சசம்* - முயல்.
*சசி* - கர்ப்பூரம், இந்துப்பு, மழை, கடல், இந்திராணி, பயிர், சந்திரன்.
*சச்சரவு* - கலகம், சண்டை.
*சச்சரி* - வாத்தியவகை.
*சச்சாரம்* - யானைக்கூடம்.
*சச்சிதானந்தம்* - உண்மை, அறிவு ஆநந்த மயமாகிய கடவுள்.
*சச்சை* - ஆராய்ச்சி, ஓதுதல்.
*சஞ்சத்தகர்*-சபதம் தவறுது வீரச் செயல்புரியும் அரசர்.
*சஞ்சயனம்* - இரண்டாம் நாள் ஈமச் சடங்கு.
*சஞ்சரித்தல்* - நடமாடுதல்.
*சஞ்சரீகம்*-ஒருவகை வண்டு.
*சஞ்சலம்* - துன்பம், நிலையின்மை.
*சஞ்சாரம்*-நடமாட்டம்,யாத்திரை.
*சஞ்சிகை* - புத்தகப் பகுதி, பத்திரிகைப் பகுதி.
*சஞ்சிதம்* - அனுபவித்தது போக எஞ்சியுள்ள கன்மம்.

*சஞ்சீவகரணி*-உயிர்தரும் மூலிகை, புளியமரம்.
*சஞ்சீவி*-உயிர்தரும் மருந்து, சிந்திற்கொடி.
*சஞ்சீவினி* - சஞ்சீவி.
*சஞ்சுபம்*-அரசர்க்குரிய விருதுகள்
*சடகம்* - ஊர்க்குருவி, கரிக்குருவி, திவசச் சடங்கு வகை.
*சடகோபம்* - திருமால் கோயில்களில் தரிசிப்போர் முடிமீது வைக்கப்படும் கிரீடம் போன்ற பொருள் (நம்மாழ்வார் திருவடி பொதியப்பெற்றது).
*சடகோபன்*-நம்மாழ்வார்.
*சடக்கு* - செருக்கு, உடல்.
*சடங்கர்*–வேதத்திற்குரிய ஆறு அங்கங்களையும் அறிந்தவர்.
*சடங்கம்*-சடங்கு, வேதத்திற்குரிய ஆறுவகை உறுப்பு.
*சடங்கன்* - வேதத்திற்குரிய ஆறு அங்கங்களையும் அறிந்தவன்.
*சடங்கு* – வைதிகக் கிரியை, மற்பிடி வகை.
*சடம்* - அறிவற்ற பொருள், பொய், வஞ்சகம், உடல், ஒருவகை வாயு, கொடுமை.
*சடம்பு* - சணல்.
*சடரம்* – வயிறு.
*சடலம்* - உடல்.
*சடன்* - மூடன்.
*சடாரி* - கவசம்.
*சடிதி* - விரைவு.
*சடிலம்*-சடை, வேர், செறிவு, குதிரை.
*சடுத்தம்*-போராட்டம், போட்டி.
*சடை*-பின்னிய கூந்தல்,பின்னலாய் விழுந்த தலைமயிர், நெட்டி, வேர், விழுது, வெட்டிவேர்,வேதமோதும் முறைகளுள் ஒன்று.
*சடைநாகம்* - நாகம்போல் செய்த தலையணி.
*சட்சு* - கண்.
*சட்ட* - நன்றாக, முழுதும், விரைவாக.
*சட்டகம்* - உடல், சட்டம், வடிவு, பிணம், மக்களது படுக்கை, சட்டை.
*சட்டம்* - நியாயவேற்பாடு, மரச்சட்டம், எழுதும் ஓலை, செப்பம், மேல்வரிச் சட்டம்.
*சட்டம்பி* - உபாத்தியாயர், எசமான்.
*சட்டம்* - மாணாக்கன்.
*சட்டாம் பிள்ளை* - வகுப்பில் –• மை வகிக்கும் மாணவன்.
*சட்டி*-மட்பாண்டம், திதி, அறுபது.
*சட்டுவம்*-அகப்பை, தோசை திருப்பி.
*சட்டென*-விரைவாக.

*சட்டை*-அங்கி, மதிப்பு, பாம்புச் சட்டை.
*சட்பதம்* - அறுகால் வண்டு.
*சணம்* - சணல்.
*சணல்*-நார்தரும் ஒருவகைச் செடி.
*சணம்பு* - சணல்.
*சண்டப்பிரசண்டம்* — ஆர்ப்பாட்டம், மிகக் கடுமை.
*சண்டப்பை*-கருப்பை.
*சண்டமாருதம்* - பெருங்காற்று.
*சண்டம்*-கொடுமை,வலிமை, விரைவு, கோபம், ஒரு நரகம்.
*சண்டவேகம்* - மிக விரைவு.
*சண்டன்*-யமன், கருங்கோபி, சிவன், சண்டேச நாயனர், அலி.
*சண்டாளம்* - நீசத்தன்மை.
*சண்டாளன்* - பெரும் பாதகன்.
*சண்டி*-இடக்குச் செய்பவன், பிடிவாதக்காரன், துர்க்கை, ஒரு மரம்.
*சண்டிகை* - துர்க்கை.
*சண்டு* - கூளம், பயிரைக் கெடுக்கும் பூச்சிவகை.
*சண்டை* - சச்சரவு, போர்.
*சண்ணித்தல்*-பூசுதல், சார்ந்திருத்தல்.
*சண்ணுதல்* - தாக்குதல், நீக்குதல்.
*சண்பகம்* - ஒருவகைப் பூமரம்
*சண்பங்கோரை* - ஒருவகைக்கோரை.
*சண்பு* - சம்பங்கோரை.
*சண்மை* - சீகாழி.
*சதகம்* - நூறு பாட்டுள்ள ஒரு பிரபந்தம்.
*சதகுப்பி* - ஒரு மருந்து.
*சதகுப்பை* — சதகுப்பி.
*சதக்கிரது* - இந்திரன்.
*சதக்கினி* - நூற்றுவரைக் கொல்லி யென்னும் மதிற்பொறி.
*சதங்கை* -
*சதசத்து* - உள்ளதும் இல்லதும், அறிதலும் அறியாமையும் உடைய ஆன்மா.
*சததளம்* - தாமரை,
*சதபத்திரம்* - தாமரை, மயில், கிளி.
*சதமகன்* - இந்திரன்.
*சதம்* - நிலையானது, நூறு, இறகு, அறுபட்ட பயிர்.
*சதயம்* - ஒரு நட்சத்திரம்.
*சதனம்* - வீடு.
*சதா* - எப்பொழுதும், மரக்கலம், பழுது.
*சதாகதி* - காற்று.
*சதாங்கம்* - இரதம்.
*சதாபுட்பி* - எருக்கு.
*சதி* - வஞ்சனை, கற்புடையவள்,தீயுண்டாக்கும் கருவி, தாளவொத்து, உரோகிணி, பார்வதி, உடன்கட்டையேறுதல், வட்டம்.
*சதித்தல்* - அழித்தல்.
*சதிபாய்தல்* - நாட்டியமாடுதல்.
*சதிர்* - பெருமை, அழகு, வலிமை, நாட்டியம்.

*சதுக்கம்* - நாற்சந்தி, சந்து.
*சதுக்கல்* — வழுக்கல்.
*சதுப்பு* - சேறு.
*சதுமுகன்* - பிரமன்.
*சதுரக்கள்ளி* - கள்ளிவகை.
*சதுரங்கசேனை* - யானை, தேர், பரி, காலாள் என்னும் நால்வகைச் சேனை.
*சதுரங்கம்* - நால்வகைச் சேனைகளாகக் காய்களை நிறுத்தி விளையாடும் ஒரு விளையாட்டு
*சதுரப்பாடு* - ஆற்றல்.
*சதுரம்* - அளவொத்த நாற்கோணம், சாமர்த்தியம்,
*சதுரவளவு* - அகல நீளங்களைப்பெருக்கி வந்தஅளவு.
*சதுர்* - நான்கு, ஆற்றல், உபாயம்.
*சதுர்த்தம்* - நான்காவது.
*சதுர்யுகம்* - நான்குயுகங்கள் (கிருத யுகம், திரேதாயுகம், துவாபர யுகம், கலியுகம் என்பன.)
*சதுர்வேதம்*-நான்கு வேதங்கள் (இருக்கு,யசுர், சாமம், அதர்வணம் என்பன.)
*சதை* - மாமிசம்.
*சதைத்தல்* - நெரித்தல்.
*சத்தக்கருவி* - வாத்திய வகைகள்.
*சத்தமன்* - யாவரிலும் சிறந்தவன்.
*சத்தம்* - ஒலி, சொல், எழுத்து சொற்களைப் பற்றிய இலக்கண நூல்.
*சத்தன்* - ஆற்றலுடையவன்.
*சத்தி* - சக்தி.
*சத்தித்தல்* — ஒலித்தல், வாந்தி செய்தல்.
*சத்திநிபாதம்* - பக்குவமுடைய ஆன்மாக்களிடம் திருவருள் பொருந்துதல்.
*சத்திமுகம்* - அரசனது ஆணைப்பத்திரம்.
*சத்தியம்* — உண்மை, பிரமாணம்.
*சத்தியுகம்* - கிருதயுகம்.
*சத்தியலோகம்* - பிரமன் வசிக்கும் உலகம்.
*சத்திரபதி* - அரசன்.
*சத்திரம்* - அன்னசாலை, கைவிடாப்படை, இரணவைத்தியக் கருவி, யாகவகை, வேல், இரும்பு, குடை, அதிசயம்.
*சத்திரியன்* - அரச வகுப்பினன்.
*சத்து* - உண்மை, நன்மை, வலிமை, அறிவு, என்றும் உள்ளது, சாரமானது.
*சத்துரு* - பகைவன்.
*சத்துவகுணம்* - நற்காரியங்களில் மனத்தைச் செலுத்தும் குணம்.
*சத்துவம்* - நன்மையை நோக்கும் தன்மை, உள்ள தன்மை, வலிமை.
*சந்தடி*- இரைச்சல், கூட்டம்.
*சந்ததம்* - எப்போதும்.

*சந்ததி* - வமிசம், வழித்

*சந்தம்*-அழகு, நிறம், வடிவு, செய்யுள் வண்ணம், வேதம், செய்யுள், சந்தனம்.

*சந்தயம்* - சந்தேகம்.

*சந்தர்ப்பனை* - சமாராதனை

*சந்தர்ப்பம்* - சமயம்.

*சந்தனம்* - சந்தன மரம், அரைத்த சந்தனம், தேர்.

*சந்தா* - கட்டணம்.

*சந்தாபம்* - மனத்துன்பம், சுடுகை, நரகங்களுள் ஒன்று.

*சந்தானம்* - சந்ததி, பரம்பரை, குருபரம்பரை, தேவலோகப் பஞ்ச

*சந்தானலக்குமி* - புத்திர பாக்கியம்.

*சந்தி*- பல தெருக்கூடுமிடம், சேர்க்கை, எழுத்துப் புணர்ச்சி, தறுவாய், நட்பாக்குதல், காலை மாலை வேளை, மூங்கில், பாடை.

*சந்திக்கோணம்* - தேர் உறுப்புக்களுள் ஒன்று.

*சந்தித்தல்* -சேர்த்தல், எதிர்தல்.

*சந்திப்பு* - இசைவு, எதிர்கை, தெருக்கூடுமிடம்.

*சந்தியாமடம்* - நித்தியவழிபாடு செய்தற்குரிய நீர்க்கரை மண்டபம்.

*சந்தியாவந்தனம்* - காலை உச்சி மாலை வேளைகளில் மந்திரங்களாற் செய்யும் வழிபாடு.

*சந்திரகம்* - வண்டு, மயிற்றோகை.

*சந்திரக்கலை*—ச... பெண்களின் கொண்டையிலணியும் அணிவகை, இடமூக்கின் வழிவரும் சுவாசம்.

*சந்திரகாந்தம்* - சந்திர வொளியில் நீர்சுரக்கும் ஒரு வகைக் கல்.

*சந்திரகி* - மயில்.

*சந்திரகிரகணம்* - இராகு கேதுக்களால் சந்திரன் பிடிக்கப்படுதல்.

*சந்திரகுரு* - வெண்முத்து,

*சந்திரகுலம்*- சந்திரனைக்குல முதல் வனுகக் கொண்ட க்ஷத்திரிய குலம்.

*சந்திரதிசை* - வடக்கு.

*சந்திரப்பிரபை* - நிலவு, மகளிர் தலையணி வகை.

*சந்திரப்பிறை* — மகளிர்

*சந்திரப்பாணி* - வயிரக்கல்.

*சந்திரம்* - பொன், மிருகசீரிடம்.

*சந்திரமண்டலம்* - சந்திர வட்டம்.

*சந்திரன்* - திங்கள், இடைகலை, குபேரன்.

*சந்திராதித்தம்* - அருகன் முக்குடைகளுள் ஒன்று.

**சந்திரிகை** - நிலவு, ஒலைச் சுருள்.
**சந்திரோபாலம்பனம்** - பிரிந்த காதலர் சந்திரனைப் பழித்துக் கூறல்.
**சந்தில்** - சனி.
**சந்திவிக்கிரகம்** – அடுத்துக் கெடுத்தல்.
**சந்து** - பொருத்து, பொந்து, குறுகிய தெரு, சமாதானம், சந்தனமரம், பிளவு, சமயம் இசை.
**சந்தேகம்** - ஐயம்.
**சந்தேசம்** - தூது
**சந்தை**-குறித்த காலங்களிற் கூடும் கடைகளின் தொகுதி, கூட்டம், புருவங்கள் கூடுமிடம், வேதபாடம் கூறுதல்.
**சந்தோடம்** - ம
**சபதம்** - சூளுறவு, உறுதி கூறல்.
**சபம்** - செபம், மூங்கில், குதிரைக் குளம்பு.
**சபரம்**–கெண்டைமீன்.
**சபரன்** - வேடன்.
**சபரியை** - பூசை.
**சபலம்**-விருப்பம்,நிலைபெற்ற வுள்ளம், பயனோடு கூடியது, சித்தி.
**சபலை** - மின்னல், இலக்குமி.
**சபித்தல்**-சாபமிடல், ஜெபித்தல்.
**சபை** - சபாமண்டபம், அம்பலம், கழகம்.
**சப்பரம்** - ஒருவகைச் சிறு
**சப்பரை** - மூடன்.
**சப்பளாக்கட்டை** - தாளக் கட்டை.
**சப்பாணி** - நொண்டி, கைகொட்டுதல்.
**சப்பாணிப்பருவம்** - குழந்தை கைகொட்டி விளையாடும் பருவம், பிள்ளைத் தமிழ்ப் பருவங்களுள் ஒன்று.
**சப்பிரமஞ்சம்** - மேற்கட்டியுள்ள அலங்காரக் கட்டில்.
**சப்பியம்** - நெறிப்பட்ட பேச்சு.
**சப்புதல்**-குதப்புதல், உறிஞ்சிக் குடித்தல்.
**சப்பை** - தட்டையானது, உறுதியற்றது.
**சமகம்** - வேதமந்திரப்பகுதி.
**சமக்கிருதம்** - வடமொழி.
**சமசம்**-யாகத்தில் சோமரசம் வைக்கும் பாத்திரம்.
**சமசை** - பாடி முடிக்குமாறு கொடுக்கப்படும் கவியுறுப்பு.
**சமஞ்சிதன்** - கிராமக் கணக்கன்.
**சமட்டி** - தொகுதி.
**சமணம்** - சைனமதம்.
**சமண்** - சமணம்.
**சமதை** - சமநிலை, ஒப்பு.
**சமத்காரம்** - பேச்சுத் திறமை.
**சமத்தன்** - வல்லவன்.
**சமத்தானம்** - இராச்சியம்.
**சமத்து** - திறமை.

*சமநிலை* - நடுவுநிலைமை, சாந்தச்சுவை.
*சமம்*-ஒப்பானது, போர், நடு...
*சமயக்கணக்கர்* - மதவாதிகள்.
*சமயதத்துவம்* - மதத்தின் அடிப்படை உண்மைகள்.
*சமயமிருத்தல்*-ஓலக்கமிருத்தல்.
*சமயம்* - தருணம், மதம், உடன்படிக்கை.
*சமயி*-மதத்தைச்சார்ந்தோன்.
*சமயோசிதம்* - தருணத்திற்குரிய பொருத்தம்.
*சமரசம்* - ஒற்றுமை.
*சமரதன்* - வேறு தேர் வீரனோடு சமமாய்ப் போரிட வல்ல தேர்வீரன்.
*சமரம்*-போர்,முள்ளம்பன்றி, கவரிமா.
*சமரி* - துர்க்கை.
*சமர்* - போர்.
*சமர்த்தன்* - வல்லவன்.
*சமர்த்து* – திறமை.
*சமர்ப்பணம்* - காணிக்கையாகக் கொடுத்தல்.
*சமலன்* - உயிர், ஆன்மா.
*சமவாயம்* - கூட்டம்.
*சமவேதம்* - மற்றவற்றோடு நீக்கமின்றியிருக்கும் பொருள்.
*சமழ்தல்*-வருந்துதல்.
*சமழ்த்தல்*-வருந்துதல், தாழ்தல், நாணுதல்.
*சமழ்ப்பு* - வருத்தம், வெட்கம்.
*சமழ்வு* - ...
*சமனம்* - தணியச் செய்தல், வசம்பு.
*சமன்* - சமம், யமன்.
*சமாசம்* - சபை, தொகைநிலைத் தொடர்.
*சமாசாரம்* - செய்தி.
*சமாதானம்* - அமைதி, தடைக்கு விடை.
*சமாதி* - கல்லறை, மனத்தைக் கடவுளிடத்தில் ஐக்கியப்படுத்தி நிறுத்துதல்.
*சமாப்தி*-முடிவு.
*சமாராதனை* - அந்தணர்க்கு உணவளித்தல்.
*சமாலம்* - பீலிக்குஞ்சம்.
*சமாவர்த்தனம்* - பிரமசரிய விரதம் நீங்குதற்குச் செய்யும் சடங்கு.
*சமாளித்தல்*-பெரு முயற்சியோடு காரியஞ் செய்தல்.
*சமானதை* - ஒப்பு.
*சமானம்* - ஒப்பு.
*சமானன்* - வாயுவகை.
*சமி* - வன்னி, அருகன்.
*சமிக்கை*-குறிகாட்டல், குறியீடு,
*சமிதை* - யாகத்திற்குரிய சுள்ளி விறகு.
*சமித்தம்* - வேள்வி மண்டபம்.
*சமித்தல்*-சீரணித்தல், அழித்தல், சுவறுதல், பொறுத்...
*சமித்து* - சமிதை.
*சமிர்த்தி* - நிறைவு.
*சமீபம்* - அருகு.

*சமீரணன்* - வாயு.
*சமு*-படைத்தொகுதி வகை.
*சமுகம்* - முன்னிலை.
*சமுக்காளம்* - விரிப்புவகை.
*சமுசயம்* - சந்தேகம்.
*சமுசாரம்* - உலக வாழ்க்கை, குடும்பம், மனைவி.
*சமுச்சயம்* - தொகுதி.
*சமுதாயம்* - மக்களின்திரள், ஊர்ப் பொதுச் சொத்து.
*சமுத்திரம்* – கடல், ஒரு பேரெண்.
*சமூகம்* - கூட்டம், சேனை வகுப்பு.
*சமூலம்* - வேருடன் கூடி முழுவதும்.
*சமேதன்* - கூடியிருப்பவன்.
*சமை* - பொறுமை.
*சமைதல்* – அமைதல், பூப்படைதல், ஆயத்தமாதல், நிரம்புதல்.
*சமைத்தல்* - படைத்தல், ஆயத்தம் செய்தல், சமையல் செய்தல்.
*சமைப்பு* - முயற்சி.
*சமையல்* - சமைத்தவுணவு, உணவுதயாரிக்கை.
*சம்பகம்* - சண்பகம்.
*சம்பங்கி* - ஒருவகைப் பூங்கொடி.
*சம்பங்கூடை* - மழை தாக்காதிருத்தற்கு அமைத்த
*சம்பங்கோரை* - ஒருவகைக் கோரை.
*சம்பங்கோழி* - காட்டுக் கோழி.
*சம்பத்து* - செல்வம்.
*சம்பந்தம்* - திருமணவுறவு, உறவு.
*சம்பம்* - ஆடம்பரம், மரவயிரம், எலுமிச்சை, வச்சிராயுதம்.
*சம்பரம்* - நீர், எண்காற் பறவை.
*சம்பவம்* - உண்டாதல், பிறப்பு, ஏற்படுதல்.
*சம்பளம்* - கூலி.
*சம்பன்னம்* - நிறைந்தது.
*சம்பன்னன்* - நிறைந்தவன், செல்வமுள்ளவன்.
*சம்பாரம்* - கூட்டு வர்க்கம்.
*சம்பாரி* - காமன்.
*சம்பா* - உயர்ந்த நெல்.
*சம்பாடனை* - பேச்சு.
*சம்பாதித்தல்* - தேடிப் பெறுதல்.
*சம்பாத்தியம்* - சம்பாதித்த பொருள்.
*சம்பாவனை* - மரியாதை, வெகுமானம்.
*சம்பாவிதம்* - நிகழக் கூடியது.
*சம்பான்*- தோணி.
*சம்பிரதம்* - மாயம், கலம்பக வுறுப்புக்களுள் ஒன்று.
*சம்பிரதாயம்* - தொன்று தொட்ட வழக்கம், குருபரம் பரையில் வந்த உபதேசம்.
*சம்பிரதி* - கணக்கன்.
*சம்பிரமம்* - களிப்பு, பரபரப்பு, சிறப்பு.

*சம்பு* - சம்பங் கோரை, நெட்டி, சிவன், நாவல், நாவலந்தீவு, நலஞ் செய்வோன்.
*சம்புகம்* - நரி.
*சம்புடம்* - சிறுசெப்பு, புத்தகப் பகுதி.
*சம்புத்தீவு* - நாவலந்தீவு.
*சம்பூரணம்* - முடிவு, நிறைவு
*சம்பை* - மின்னல், செழிப்பு.
*சம்போகம்* - புணர்ச்சி.
*சம்போர்* - பூதம்.
*சம்மட்டி* - குதிரைச் சவுக்கு, பெருஞ்சுத்தியல்.
*சம்மதம்* - உடன் பாடு, நட்பு.
*சம்மதி* - சம்மதம்.
*சம்மனசு* - தேவதூதன்.
*சம்மாரம்* - அழிவு.
*சம்மானம்* - வெகுமதி.
*சம்மேளனம்* - கூட்டம், கலப்பு.
*சம்யோகம்* - சேர்க்கை.
*சம்ரட்சணம்* - காப்பாற்றுதல்.
*சம்ரட்சணை* - சம்ரட்சணம்.
*சம்வச்சரம்* - ஆண்டு.
*சம்வரை* - உயிரைக் கன்மம் அணுகாமல் தடுப்பது.
*சம்வாதம்* - தர்க்கம்.
*சயசீலன்* - வெற்றியாளன்.
*சயந்தனம்* - தேர்.
*சயமகள்* - வீரலக்ஷுமி.
*சயம்* - வெற்றி, சூரியன், கூட்டம், க்ஷயரோகம், மாலை ஆம்பல்.
*சயனம்* - படுக்கை, புணர்ச்சி நித்திரை.
*சயா* - கடுக்காய்.
*சயிக்கம்* - மேன்மை.
*சயிக்கினை* - அடையாளம்.
*சயித்தியம்* - குளிர்காலம், குளிர் நோய், பௌத்தர் கோயில்.
*சயித்தல்* - வெல்லுதல்.
*சயிந்தவம்* - குதிரை, தலை.
*சயிலம்* - மலை.
*சயை* - திருதியை, அட்டமி, திரயோதசி, துர்க்கை.
*சரகதி* - அம்புபோற் செல்லும் குதிரையின் கதி.
*சரகம்* - தேனீ, வண்டு.
*சரகூடம்* - அம்பினாற் கட்டும் பந்தல்.
*சரக்க* - விரைவாக.
*சரக்கறை* - பண்டங்கள் வைக்கும் அறை.
*சரக்கு* - வாணிகப் பொருள், பொன்.
*சரக்கொன்றை* - சரமாகப் பூக்கும் கொன்றை மரம்.
*சரசசல்லாபம்* - காதற் பேச்சு.
*சரசம்* - இன்பப் பேச்சு, காமச்சேட்டை, பரிகாசம்,
*சரசு* - நீர்நிலை.
*சரசுவதி* - கலைமகள்.
*சரசுவதிபண்டாரம்* - புத்தகச்சாலை.
*சரடம்* - ஓந்தி.
*சரடு* - முறுக்குநூல், கழுத்

***சரணம்*** - பாதம், பாடற் பகுதி, அடைக்கலம், வணக்கம், வீடு, மயிற் றோகை, பெருங்காயம், யானைத் தோட்டி, அரச மரம்.
***சரணகதி*** - அடைக்கலம் புகுதல்.
***சரணமூர்த்தி*** - அடைக் கலம் தேடுபவன்.
***சரணி*** - வழி.
***சரணியன்*** - இரட்சகன்.
***சரண்*** - பாதம், அடைக் கலம்.
***சரதம்*** - உண்மை, நிச்சயம்.
***சரத்ருது*** - கூதிர் காலம்.
***சரபம்*** - எண்காற்புள், மலை யாடு, ஒட்டகம்.
***சரப்பணி*** - வயிரம் ப கழுத்தணி.
***சரப்பளி*** - பொன்னாலான கழுத்தணி.
***சரமகவி*** - இறந்தவர் மீது பாடும் கவி.
***சரமம்***- முடிவு, மேற்கு.
***சரமாரி*** - அம்பு மழை.
***சரம்***— இயங்குதிணை, திப்பலி, நடை, அம்பு, நீர், மணி வடம், கொத்து.
***சரவணம்*** - நாணற்காடு, சர வணப் பொய்கை.
***சரவன்*** - அம்பெய்வோன்.
***சரளம்*** - சுலபம், ஒழுங்கு.
***சரளி*** - சுயவரிசை.
***சரளை*** - பரற்கல்.
***சரற்காலம்*** - கூதிர்காலம்.
***சரன்***- ஒற்றன், தூதன்.
***சராசரம்*** - இயங்ப் பொருள்கள், உலகம்.
***சராசனம்*** - வில், அரசமரம்.
***சராயு*** - கருப்பை.
***சராயுசம்*** - கருப்பையில்
***சராவம்*** - அகல், சலாகை.
***சரி*** — ஒப்பு, சம்மதக்குறிப்பு, கைவளை, வழி, மலைச்சாரல், கூட்டம்.
***சரிகை*** - பொன் வெள்ளி களாலாகிய இழை.
***சரிக்கட்டுதல்*** - பொருந்தச் செய்தல்.
***சரிதம்*** - வரலாறு, கதை.
***சரிதல்*** - சாய்தல், குலைதல்.
***சரிதன்*** - நல்லொழுக்க முடையவன்.
***சரிதை*** - சரித்திரம்.
***சரித்தல்*** - நடமாடுதல், வசித்தல்.
***சரித்திரம்*** - வரலாறு.
***சரிமேரை*** — குடிகளின் உரி மை.
***சரியை*** - ஒழுக்கம், கடவு ளுக்குஓர் உருவங்கொடுத்து அவ்வுருவத்தை வழிப் படுதல்.
***சரிவர*** - கிரமமாக.
***சரிவு*** - சாய்வு, ஓரம்.
***சரீரம்*** - உடல்.
***சரீரி*** — ஆன்மா.
***சரு*** - யாகத்திற்குரிய அவிப் பொருள், சோறு.
***சருகு*** - உலர்ந்த இலை.
***சருக்கம்*** - நூற் பிரிவு.

*சருக்கரை* - ஒரு வகை இனிப்புப் பொருள்.
*சருச்சரை* - சொரசொரப்பு.
*சருப்பதோபத்திரம்*-கோல வகை, கவிவகை.
*சருமபந்தம்* - மிளகு.
*சருமம்* - தோல், கேடகம், மரப்பட்டை.
*சருவஞ்ஞன்* - எல்லாமறிந்தவன், கடவுள்.
*சருவந்து* - தலைக்கவசம்.
*சருவம்* - வாயகன்ற பாத்திரம், சட்டுவம், எல்லாம்.
*சருவரி* - இருள், இரவு.
*சருவல்* - நேசப்பான்மை.
*சருவுதல்* - பழகுதல், போரிடுதல்.
*சரை* - கிழத்தனம்.
*சரோருகம்* - தாமரை.
*சர்க்கம்* - சருக்கம்.
*சர்க்கரை* - சருக்கரை.
*சர்ச்சரை* -சருச்சரை, சொரசொரப்பு.
*சர்ச்சை* - ஆராய்ச்சி, தர்க்கம்.
*சர்ப்பம்* - பாம்பு.
*சர்ப்பனை* - வஞ்சனை,
*சர்மம்* - சருமம், தோல்.
*சர்வசங்கநிவிர்த்தி* - எல்லாப் பொருள்களிலும் உள்ள பற்றினின்று நீங்குதல்.
*சர்வமானியம்* - வரியின்றி விடப்படும் நிலம்.
*சர்வம்* - முழுவதும்.
*சலகு* - முத்துச்சிப்பி.
*சலகை* - தோணி, ஒரு முகத் தலளவை.
*சலக்கிரீடை* - நீர் விளையாட்டு.
*சலங்கை* - சதங்கை.
*சலசந்தி* - இரண்டு கடல்களை இணைக்கும் குறுகிய நீர்ப்பகுதி.
*சலசம்* - நீரிலுண்டாவன, தாமரை, முத்து, பாசி.
*சலசரம்* - மீன், தோணி, நீர், வாழ்வன.
*சலசை* - இலக்குமி.
*சலஞ்சலம்* - வலம்புரி ஆயிரஞ் சூழ்ந்த சங்கு.
*சலதம்* - மேகம்.
*சலதரங்கம்* - நீரலை, ஒரு வகை வாத்தியம்.
*சலதரம்* - மேகம், நீர் நிலை.
*சலதாரி* – சிவன்.
*சலதாரை*- சாக்கடை.
*சலதி* - கடல், பொய்பேசுபவள்.
*சலதோடம்* - சளிபிடிக்கும் நோய்.
*சலதம்பனம்* - நீரின் சக்தியை மாற்றும் வித்தை.
*சலநிதி* - கடல்.
*சலபதி* - வருணன்.
*சலபம்* - விட்டில்.
*சலப்பிரளயம்* - பெருவெள்ளம்.
*சலம்*- நீர், நடுக்கம், கோபம், தீச்செயல், மூத்திரம், பிடிவாதம், பொய், துக்கம், சுழற்சி, வஞ்சனை, மாறுபாடு.

**நழுகுதல்** - குழைதல்.
**நமை** - தினவு, ஒரு மரம்.
**நமைச்சல்** - தினவு.
**நமைத்தல்** - வருந்துதல், சூட்டுதல்.
**நமைப்பு** - வருத்தம், தினவு.
**நம்பல்** - விருப்பம், நம்புகை.
**நம்பன்** - கடவுள், சிவன்.
**நம்பி** - ஆண்களிற் சிறந்தோன்.
**நம்பிக்கை** - விசுவாசம்.
**நம்பு** - விருப்பம், நாவல்.
**நம்பு செய்வார்** - அருச்சகர்.
**நம்புதல்** - விரும்புதல், நம்பிக்கை வைத்தல்.
**நம்பூதிரி** - மலையாள அந்

**நயத்தல்** - விரும்புதல், அன்பு செய்தல்.
**நயம்** - மலிவு, விருப்பம், அருள், நன்மை, நீதி, மகிழ்ச்சி, இனிமை.
**நயன்** - நயப, உபாயம், பசை.
**நயவார்** - பகைவர்.
**நயனமாலை** - உருத்திராக்க மாலை.
**நயனம்** - கண்.
**நரகம்** - உலகம், உயிர்கள் பாவத்தை அனுபவித்தற்குரிய இடம்.
**நரகர்** — நரகத்தில் வாழ்பவர்.
**நரகல்** - மலம்.
**நரகு** - நரகம்.
**நரந்தம்**-கஸ்தூரி, நாரத்தை, ஒருவகைப் புல்.
**நரபதி** - அரசன்.
**நரமேதம்** - நரபலி கொடுத்துச் செய்யும் வேள்வி.
**நரம்** - மனிதப் பிறவி.
**நரம்பு** - உடல் நரம்பு, யாழ் நரம்பு.
**நரம்புக் கருவி** - நரம்புகள் கொண்ட இசைக் கருவி.
**நரலுதல்** - ஒலித்தல்.
**நரலை** - கடல், ஒலி, மதிலுறுப்புக்களில் ஒன்று.
**நரல்** - செத்தை, சனக் கூட்டம்.
**நரவாகனன்** - குபேரன்.
**நரற்றுதல்** — ஒலித்தல்.
**நரன்** - மனிதன், அருச்சுனன்.
**நரி** - ஒரு விலங்கு.
**நரி குளிப்பாட்டுதல்** - நல்ல வார்த்தைகளால் ஏமாற்றுதல்.
**நரிதல்** - வருந்துதல்.
**நரித்தல்** - வருந்துதல், கெடுதல்.
**நரிப்பு** - இழிவு.
**நரிப்புறம்** - மிருகசீரிடம்.
**நரி மிரட்டல்** - குழந்தைகட்குத் தூக்கத்தில் உண்டாகும் அழுகை
**நருக்குதல்**-துண்டாக்குதல், நொறுக்குதல்,
**நருங்குதல்**-தேய்வடைதல், நொறுங்குதல்.
**நரை** - வெண் மயிர், எருது, வெண்மை, பெருமை, மரச்சொத்தை.
**நரைத்தல்** - வெளுத்தல்.
**நர்த்தனம்**-நடனம், கூத்து.

*நலக்குதல்* - அழுக்காக்குதல், கசங்கச் செய்தல்.

*நலங்கு* - [illegible] மணமக்களுக்குக் காலில் செம்பஞ்சுக் குழம்பிட்டு விளையாடும் கொண்டாட்டம்.

*நலங்குதல்* - வருந்துதல், தொடங்குதல்.

*நலத்தல்* - விரும்புதல்.

*நலம்* - நன்மை, அழகு, சுக வாழ்வு, இன்பம், குணம், ஆசை, அன்பு.

*நலம்பாடு* - தகுதி.

*நலவர்* - நல்லோர்.

*நலிதல்* - வருந்துதல், மெலிதல், நோயடைதல்.

*நல்கல்* - கொடுத்தல், அருள்.

*நல்குதல்*-கொடுத்தல், பயன்படுதல், அருளுதல், விரும்புதல், வளர்தல், தலையளி செய்தல்.

*நல்குரவு* - வறுமை.

*நல்கூர்தல்* - வறுமையடைதல், துன்பமடைதல்.

*நல்ல* - நன்மையான, மிக்க.

*நல்ல பாம்பு* - நாகப்பாம்பு.

*நல்லார்* - பெரியோர், கற்றோர், மகளிர்.

*நல்லினம்*-நல்லவர் கூட்டம், பசுக் கூட்டம்.

*நல்லூழ்* - புண்ணியம்.

*நல்வினை* - புண்ணியம்.

*நவச்சாரம்*-ஒருவகை உப்பு.

*நவநீதம்* - வெண்ணெய்.

*நவம்* - ஒன்பது, புதுமை, பூமி, நட்பு, கார்காலம்.

*நவியம்* - கோடரி, புதுமை, மழு.

*நவிரம்* - புன்மை, மயில், [illegible] மயிர்.

*நவிரல்* - மரவகை.

*நவிலுதல்* - சொல்லுதல், பழகுதல், கற்றல், தாங்குதல், குறித்தல்.

*நவிழ்த்தல்* - அவித்தல்.

*நவிற்றுதல்* - சொல்லுதல், ஆராய்தல்.

*நவீனம்* - புதுமை.

*நவை* - குற்றம், இகழ்ச்சி, [illegible]

*நவைத்தல்* - [illegible]

*நவ்வி* - பெண்மான், இளமை, அழகு, மரக்கலம்.

*நழுவுதல்* - வழுவுதல், தவறுதல்.

*நளபாகம்*-உயர்ந்தசமையல்.

*நளி* - செறிவு, கூட்டம், பெருமை, அகலம், குளிர்ச்சி, செருக்கு, தேள்.

*நளிதல்* - செறிதல், ஒத்தல், [illegible]

*நளிர்* - குளிர், நண்டு, பகை.

*நளிவிடம்* - அகலம்.

*நளிவு* - செறிவு.

*நளினம்* - தாமரை, நயமான பேச்சு, சுலபம், பரிகாசப் பேச்சு.

*நளினி*-இலக்குமி, தாமரைக் குளம்.

*நள்* - நடு, இரவு.

*நள்ளார்* - பகைவர்.

**நள்ளிடை** - நடுவிடம்.
**நள்ளிருள் நாறி** - இருவாட்சிப்பூ.
**நள்ளுநர்** - நண்பர்.
**நறவம்**-கள், வாசனை, தேன், பால்.
**நறவு** - நறவம்.
**நறு** - நறவு.
**நறுக்கு** - துண்டு, சீட்டு.
**நறுக்குதல்** - வெட்டுதல், துண்டாக்குதல்.
**நறுக்குமூலம்** - கண்டத்திப்பிலி.
**நறுங்காழ்** - அகில் சந்தனம் முதலியவை.
**நறுநெய்** - பசுவின் நெய்.
**நறுமருப்பு** - இஞ்சி.
**நறுமை** — வாசனை, நன்மை.
**றும்பிசின்** -கரிய போளம், பிசின் வகை.
**நறுவிலி** - மரவகை.
**நறை**-வாசனை, தேன், தூபம், வாசனைக் கொடிவகை.
**நறைக்காய்** — சாதிக்காய்.
**நற்காட்சி** - உண்மை விளக்கம், நல்லறிவு.
**நற்கு** - நன்றாக.
**நற்குடி** - நற்குலம்.
**நற்சாட்சி**- சிபாரிசு.
**நற்சொல்** - நன்னிமித்தச் சொல்.
**நற்றம்** - நற்குணம்.
**நற்றாய்** -பெற்ற தாய்.
**நற்றிறம்** - நோன்பு, நீதி மார்க்கம்.
**நற்று** - நன்மை.
**நனந்தலை** - அகன்ற இடம், நடு, உச்சி, திசை.
**நனம்** - அகலம்.
**நனவு** - விழி நிலை, தோற்றம், மெய்ம்மை, போர்க்களம், பகல்.
**நனி** - மிகவும்.
**நனை** - அரும்பு, தேன், கள்.
**நனைதல்** — ஈரமாதல், அரும்புதல், உண்டாதல்.
**நனைவு** - ஈரம்.
**நன்கனம்** - நன்றாக.
**நன்காடு** - சுடுகாடு.
**நன்கு** - நல்லது, நற்சகுனம், மிகுதி, அழகு, நிலை பேறு, மகிழ்ச்சி.
**நன்குமதித்தல்** - கௌரவித்தல்.
**நன்கொடை** - வெகுமதி.
**நன்செய்** - நெல்விளையும் நிலம்.
**நன்பால்** - நல்லொழுக்கம்.
**நன்மக்கள்**-நல்ல பிள்ளைகள், சான்றோர்.
**நன்மை** - நலம், நல்வழி, அழகு, புதுமை, மேம்பாடு, பயன், ஆசி.
**நன்மொழி** - உறுதிமொழி.
**நன்றி** - உபகாரம், தருமம்.
**நன்றியில்செல்வம்** - பயன்படாச் செல்வம்.
**நன்று** — நல்லது. உயர்வு, ஆக்கம், நல்வினை, அங்கீகாரக் குறிப்பு,
**நன்னயம்** - இனியசொல், இனியசெயல்.
**நன்னர்** - நன்மை.

***நன்னாள்*** - விழாநாள்.
***நன்னி*** - சிறியது.
***நன்னிக்கல்*** - மருந்தரைக்கும் அம்மி.
***நன்னீர்*** - நல்லகுணம், பனிநீர்.

**நா** - நாக்கு, சொல், நடுநீச்சுவாலை, பொலிவு.
***நாகணவாய்ப்புள்*** - பூவைப் பறவை
***நாகதாளி***-சப்பாத்திக்கள்ளி.
***நாகநாடு***-நாகசாதியார் வசிக்கும் நாடு, சொர்க்கலோகம், பாதளவுலகம்.
***நாகம்*** - நல்லபாம்பு, மலை, மேகம், நாகலோகம்,நாவல் மரம், துத்தநாகம், யானை, குரங்கு, ஆகாயம், விடம், சொர்க்கம், துகில், சுர [illegible]
***நாகமணி*** - நாகத்தின் தலையில் இருப்பதாகக் கருதப் படும் இரத்தினம்.
***நாகரம்*** - வடமொழி யெழுத்து, சுக்கு.
***நாகரிகம்*** -நகரவொழுக்கம், நடையுடை பாவனை, மரியாதை, கண்ணோட்டம், ஆடம்பரம்.
***நாகரிகர்*** - உயரிய நடையுடை பாவனைகளையுடையவர்கள், நகரத்தவர், கண்ணோட்டமுடையவர், இரசிகர்.
***நாகர்*** - நாக நாட்டவர், ஒரு பழைய சாதியார், தேவர்.
***நாகலிங்கம்*** - ஒரு மரம்.
***நாகு*** - இளமை, நத்தை, புற்று, சங்கு, எருமை பசு முதலியவற்றின் பெண் கன்று.
***நாக்கு*** - நா.
***நாக்குப்பூச்சி*** -மலப்பையில் வாழும் புழு,
***நாங்கூழ்*** - மண்புழு.
***நாசம்*** - அழிவு, மரணம், கேடு.
***நாசவன்*** - அம்பட்டன்.
***நாசி*** - மூக்கு, வீட்டுமேனிலையுறுப்பு.
***நாசிகை*** - நாசி.
***நாச்சி*** - தலைவி.
***நாச்செறு*** - வசை.
***நாஞ்சில்*** — கலப்பை, மதிலுறுப்பு.
***நாடகக்கணிகை*** - நாட்டியப் பெண்.
***நாடகசாலை***-நாடகம் நடக்குமிடம்.
***நாடகசாலையர்*** - கூத்தர், நடிகர்.
***நாடகத்தமிழ்*** - நாடகம் பற்றி வரும் தமிழிலக்கியம்.
***நாடகபாத்திரம்*** - நடிகன்.
***நாடகம்*** - கூத்து, கதை நடிப்பு.
***நாடா*** - நூற்பட்டை.
***நாடி*** — தாது, நாழிகை, சுவாசம், மாளிகை மேலுறுப்பு.
***நாடு*** - தேசம், இடம், மருதநிலம், தேசப்பகுதி.
***நாடுதல்*** - தேடுதல், ஆராய்தல், விரும்புதல், அளத்தல்.

*நாடோறும்* - தினந்தோறும்.
*நாட்காலம்* - விடியற்காலம். தக்ககாலம்.
*நாட்கூறு* - முற்பகல்.
*நாட்கொல்லி* - யமன்.
*நாட்கொள்ளுதல்* - அரச சின்னங்களாகிய குடை வாள் முதலியவற்றைப் புற வீடுவிடுதல்.
*நாட்கோள்* - நாட்கொள்ளு தல்.
*நாட்செய்தல்* - நல்ல நாளில் செயலிலிறங்குதல்.
*நாட்சோறு* - காலையுணவு.
*நாட்டம்* - கண், பார்வை, விருப்பம், தேடுகை, சஞ் சாரம், வாள், சோதிட நூல், ஆராய்தல், நிலைநிறுத்துதல், நோக்கம்.
*நாட்டாண்மை* - ஊரதிகாரம்.
*நாட்டார்* - தேசத்தவர், ஊர்ச் சபையார்.
*நாட்டியம்* - நடனம், கூத்து.
*நாட்டுப்புறம்* - பட்டிக்காடு.
*நாட்டுப்பெண்* — மகனது

*நாட்டுவளப்பம்* - ஊர்வழக் கம்.
*நாட்பறை* - நாழிகைப்பறை.
*நாணம்* - வெட்கம்.
*நாணயம்* - நேர்மை, முத் திரையிட்டகாசு, குறித்தது தவறாமை.
*நாணல்* - ஒருவகைப் புல், வெட்கப்படுதல்.
*நாணி* - வில் நாண்.
*நாணிலி* - வெட்கமற்றவன்.
*நாணுதல்* - வெட்கப்படுதல், கூசுதல், குன்றுதல், குவி தல்.
*நாண்* - வெட்கம், கூச்சம், கயிறு.
*நாண்மகிழிருக்கை* - திரு வோலக்கம், அத்தாணிமண் டபத்து வீற்றிருத்தல்.
*நாண்மதி* - பூரண சந்திரன்.
*நாண்மலர்* - அன்று மலர்ந்த பூ.
*நாண்மீன்* — நக்ஷத்திரம்.
*நாண்முதல்* - அதிகாலை.
*நாதம்* - ஓசை, இசையொலி, பிரணவம், சோணிதம்.
*நாதன்* - தலைவன், கடவுள், கணவன், காப்பாற்றுப வன்.
*நாத்தி* - இன்மை, கணவனு டன் பிறந்தாள்.
*நாத்திகம்* - கடவுளில்லை என்னும் கொள்கை.
*நாத்தூண்* - நாத்
*நாந்தகம்* - திருமாலின் ஆயுத மாகிய வாள்.
*நாந்தல்* — மந்தாரம், ஈரம்.
*நாந்தி* - பாயிரம், சிராத்த வகை.
*நாபி* - கொப்பூழ், கத்தூரி.
*நாப்பண்* - நடு.
*நாப்பு* - பரிகாசம்.
*நாமகரணம்* - பெயரிடும் சடங்கு.
*நாமகள்* - சரசுவதி.

*நாமஞ்சாத்துதல்* - நெற்றியில் நாமம் இடுதல், பெயரிடுதல், ஏமாற்றுதல்.
*நாமடந்தை* - சரசுவதி.
*நாமதேயம்* - பெயர்.
*நாமநீர்* — கடல்.
*நாமம்* — திருமண், அச்சம், பெயர், புகழ், திருமண் குறி.
*நாமயம்* - தற்போதம்.
*நாமறுதல்* - முற்றும் அழிதல்.
*நாமாவளி* - பெயர் வரிசை.
*நாம்* - அச்சம், தன்மைப் பன்மைச் சொல்.
*நாம்பு* - மெலிவு, மெல்லிய கொடி.
*நாயகமணி* - ஆபரணங்களின் நடுவிலமைக்கும் இரத்தினம்.
*நாயகம்*-தலைமை, மேம்பாடு.
*நாயகன்* - தலைவன், கணவன், அரசன், கடவுள்.
*நாயகி* - தலைவி, மனைவி.
*நாயனார்*—தலைவர், கடவுள், சிவனடியார்.
*நாயில்*-மதிலுறுப்பு வகை.
*நாயிறு*-ஞாயிறு.
*நாயுருவி* - ஒரு செடி.
*நாய்* - ஒரு விலங்கு, சூதாடு கருவி.
*நாய்கன்* - வணிகன்.
*நாய்ச்சி* - தலைவி.
*நாரம்*-நீர், அன்பு, நாரத்தை, பாசி, கயிறு.
*நாரன்* - மன்மதன்.
*நாராசம்*-இரும்புச் சலாகை.
*நாராயம்* - அம்பு.
*நாரி* - வில்நாண், பெண், தேன், பன்னாடை, நன்னாரி, இடுப்பு.
*நாரிகேளபாகம்* - மிக்க வருத்தத்துடன் பொருளைக் காணும் இயல்புடைய செய்யுள்.
*நாரிகேளம்* - தென்னை.
*நாரை* - ஒரு பறவை.
*நார்* - தும்பு, கல்நார், பன்னாடை, கயிறு, அன்பு.
*நார்ப்பட்டு* - நார்மடி.
*நார்மடி* - நாரால் நெய்த ஆடை.
*நாலு* - நான்கு.
*நாலுதல்*-தொங்குதல், தூக்கிட்டுக் கொள்ளுதல்.
*நால்கு*-நான்கு.
*நால்வாய்* - தொங்கும் வாய், யானை.
*நாவலர்* - புலவர், அமைச்சர்.
*நாவல்* - மரவகை, நாவலந்தீவு, போருக்கழைத்தல், வெற்றியொலி, நெற்போரிடுவோர் மகிழ்ச்சியொலி.
*நாவாய்* - மரக்கலம், நாவாய்ப்பறை, இரேவதி.
*நாவாய்ப்பறை* - இரங்கற் பறை.
*நாவாள்* - சரசுவதி.
*நாவி* - கத்தூரி, கத்தூரி விலங்கு, புனுகுபூனை, கொப்பூழ், மயிர்ச்சாந்து, பச்சைநாவி.
*நாவிகன்* - கப்பலோட்டி.

*நாவிக்குழம்பு* - புழுகு.
*நாவிதன்* - அம்பட்டன்.
*நாவு* - நாக்கு.
*நாவை* -
*நாழம்* - வசை.
*நாழல்* - ஞாழல்.
*நாழி* - ஒரு படி, நாழிகை, அம்பருத்தூணி, காற்படி, பூரட்டாதி, உட்டுளைப் பொருள்.
*நாழிகை* - அறுபது விஞடி கொண்ட கால அளவு, நாடா.
*நாழிகைக்கணக்கன்* - நாழிகை வட்டிலில் நேரமறிந்து கூறுவோன்.
*நாழிகைவட்டம்* - கடிகாரம்.
*நாழிகைவட்டில்*-நேரமறியும் ஒரு பண்டைக்காலக்கருவி.
*நாழ்* - குற்றம், கர்வம், சாமர்த்தியம்.
*நாளங்காடி* - பகற்கடை.
*நாளந்தி* – சிறுகாலை.
*நாளம்* - உட்டுளை, தண்டு, நரம்பு.
*நாளவை* - நாளோலக்கம்.
*நாளாவட்டம்*-நாளடைவு.
*நாளிகேரம்* - தென்னை.
*நாளிருக்கை* - நாளோலக்கம்.
*நாளும்* - தினமும்.
*நாளை* - அடுத்த நாள்.
*நாளோலக்கம்* - காலையில் அத்தாணியில் வீற்றிருத்தல்.
*நாளோலை* - முகூர்த்த

*நாள்* - பகல், தினம், காலம், ஆயுள், நக்ஷத்திரம், கிழமை, காலை.
*நாறல்* - தீ நாற்றம்.
*நாறு* - நாற்று.
*நாறுதல்*-மணத்தல், முளைத்தல், தோன்றுதல்.
*நாற்காலி* – விலங்கு, ஆசன வகை.
*நாற்சி* - தொங்குதல்.
*நாற்பால்* - நாற்குலம்.
*நாற்றங்கால்* - நாற்றுவிடும் இடம், தொடக்கம்.
*நாற்றம்* - மணம், தோற்றம், வாசனையறியும் புலன், சம்பந்தம்.
*நாற்றி* – நான்குமடங்கு.
*நாற்று* - பிடுங்கி நடும் பயிர்.
*நாற்றுதல்* - தொங்கவிடுதல்.
*நானம்* - கத்தூரி, புழுகு, கவரிமான்,வாசனைப்பொடி, நீராடுதல், ஞானம்.
*நானிலம்* - பூமி.
*நானூல்* - பூணூல்.
*நான்கு* - நாலு.
*நான்மாடக்கூடல்* - மதுரை.
*நான்முகன்* - பிரமன்.
*நான்று* – காலம்.
*நான்றுகொள்ளுதல்*- கழுத்தில் சுருக்கிட்டுக் கொண்டு சாதல்.

*நிகண்டவாதி* - சைனரில் ஒரு பகுதியார்.
*நிகண்டு* - சொற்பொருளுணர்த்தும் நூல்.

*நிகமம்* - முடிவு, வேதம், நெடுந்தெரு, கடைவீதி.
*நிகம்* - ஒளி.
*நிகரம்* - கூட்டம், மொத்தம், விழுங்குதல், கொடை.
*நிகர்* -ஒப்பு, போர், ஒளி.
*நிகழ்காலம்* - தொழில்நடை பெறும் காலம்.
*நிகழ்ச்சி* - சம்பவம், மை, காரியம்.
*நிகழ்தல்* ஏற்படுதல், நடந்து வருதல், செல்லுதல், தங்குதல், விளங்குதல்.
*நிகழ்த்துதல்* -நடப்பித்தல்,
*நிகழ்வு* - நிகழ்காலம், நிகழ்தல்.
*நிகளம்* - விலங்கு, யானைக் காற்சங்கிலி.
*நிகற்பம்* - ஒரு பேரெண்.
*நிகாதம்* - நரகம்.
*நிகாதன்* — வஞ்சகன்.
*நிகாயம்* - கூட்டம், இடம், நகரம்.
*நிகிதம்* - இடமின்மை.
*நிகிலம்* - எல்லாம்.
*நிகுஞ்சம்* - குகை.
*நிகுத்தை* - கதவு.
*நிகேதனம்* - வீடு, கோயில், நகரம்.
*நிகோதம்* - விலங்கினம்.
*நிக்கந்தன்* - அருகன்.
*நிக்கிரகம்* - அழித்தல், தண்டனை, அடக்குதல்.
*நிசதம்* - தினமும்.
*நிசா* -
*நிசாகரன்* - சந்திரன்
*நிசாசரன்* - அசுரன், சந்
*நிசாசரி* - அரக்கி, கூகை.
*நிசாதன்* - வேடன், வஞ்சகன்.
*நிசாபதி* - சந்திரன்.
*நிசாரி* - சூரியன்.
*நிசார்* -நீண்ட காற்சட்டை.
*நிசாளம்* - ஒருகண் பறை.
*நிசி* - இரவு, நடு இரவு, பொன்.
*நிசிதம்* — கூர்மை, இகழ்ச்சி, இரும்பு.
*நிசித்தம்* - விலக்கத்தக்கது, விதிக்கு முரணானது.
*நிசிந்தன்* - கடவுள்.
*நிசீதிகை* - உண்ணாநோன்பால் உயிர்விடுதல்.
*நிசும்பன்* - கொலையாளி.
*நிசுவாசம்* - மூச்சை வெளிவிடுதல்.
*நிச்சம்* - எப்பொழுதும், நிச்சயம்.
*நிச்சயதாம்பூலம்* - மணத்தை உறுதிப் படுத்தும் சடங்கு.
*நிச்சயம்* - உறுதி, துணிவு.
*நிச்சல்* - நிச்சயம், அசைவற்றிருக்கும் இலக்கு.
*நிச்சுவாசம்* - நிசுவாசம்.
*நிடலம்* - நெற்றி.
*நிடேகம்*-மணமக்கள் முதன்முறை கூடும் சடங்கு.
*நிட்கண்டம்* — கண்டோட்டமின்மை.
*நிட்கண்டன்* - சிவன்.
*நிட்களம்* — உருவமின்மை.

*நிட்காமியம்* - பயனை விரும்பாத தன்மை.
*நிட்டூரம்* - கொடுமை, கொடுஞ்சொல்.
*நிட்டை* — தியானம்.
*நிணம்* - மாமிசம், கொழுப்பு.
*நிணர்தல்* - கட்டுதல், செறிதல்.
*நிணவை* - பிணிப்பு, பின்னல்.
*நிணறு* - இதம், இரக்கம்.
*நிதம்* - தினமும்.
*நிதம்பம்* - அல்குல், மலைப் பக்கம், பெண் குறி.
*நிதரிசனம்* - எடுத்துக் காட்டு.
*நிதனம்* — நாசம், வறுமை.
*நிதானம்* - ஆதிகாரணம், பொன், இரத்தினம், சாவதானம், படை, திர்மானம், நேர்மை, உத்தேசம்.
*நிதி* - பொருட்குவை, பொன்.
*நித்தியாசனம்* - இடைவிடாத தியானம்.
*நிதியம்* - நிதி.
*நிதிக்கிழவன்* - குபேரன்.
*நித்தத்துவம்* —என்றும் உளதாம் தன்மை.
*நித்தம்* - எப்பொழுதும், அழியாநிலை, நித்தியகருமம், ...ம்.
*நித்தன்* - கடவுள்.
*நித்தியப்படி* -நாள்தோறும்.
*நித்தியம்* -அழிவற்றது, நாள்தோறும், கடல்.
*நித்திராதேவி* - மூதேவி, உறக்கம்.
*நித்திரை* - உறக்கம்.
*நித்திலம்* - முத்து.
*நித்தில்* - மின்மினி.
*நித்தை* - உமை, தூக்கம்.
*நிந்தனை* - இகழ்ந்து பேசுதல்.
*நிந்தாத்துதி* - இகழ்வதைப் போலப் புகழ்தல்.
*நிந்தித்தல்* - இகழ்தல், வைதல்.
*நிபந்தம்* - கோவிற்கட்டளைக்கு விடப்பட்ட சொத்து.
*நிபந்தனை* - கட்டுப்பாடு, ஏற்பாடு.
*நிபம்* - காரணம், வஞ்சனை, கோள்.
*நிபாதம்* - இறங்குகை.
*நிபிடம்* - நெருக்கம்.
*நிபுடம்* - நிபிடம்.
*நிபீடனம்* - மல்வித்தை.
*நிபுணம்* - சாமர்த்தியம், தேர்ச்சி.
*நிபுணன்* - தேர்ந்தவன், வல்லவன்.
*நிமந்தம்* - கோயில் ஊழியம்.
*நிமம்* - பிடர்த்தலை.
*நிமலம்* - மாசின்மை.
*நிமிடம்* - நிமிஷம்.
*நிமிடுதல்* - நெருடுதல்.
*நிமிண்டுதல்* - கிள்ளுதல்,

*நிமிதல்* - வாய்நெளிதல்.
*நிமித்தகாரணம்* - துணைக் காரணம்.
*நிமித்தம்* - காரணம், சகுனம், அடையாளம்.
*நிமித்திகர்* - சோதிடர், குறி சொல்வோர்.

*நிமிரல்* - சோறு. நிமிர்த்தல்.
*நிமிர்தல்* -உயர்தல், நீளுதல், இறுமாத்தல், பரத்தல், வளர்தல்.
*நிமிர்த்துதல்* - வளைவு நீங்கச் செய்தல், நேர்நிற்கச் செய்தல்.
*நிமிளை* - கல்வகை.
*நிமை* - இமை.
*நிமைத்தல்* - இமைத்தல்.
*நிம்பம்* - வேம்பு.
*நிம்பன்* - பாண்டியன்.
*நிம்பிரி* - பொறாமை.
*நிம்மதி* - மனஅமைதி.
*நியதம்* - எப்பொழுதும்.
*நியதி* -ஒழுங்கு, செய்கடன், முறைமை, ஊழ், வரையறை.
*நியந்தா* - கடவுள்.
*நியமம்* - கடமை, ஒழுங்கு, கோயில்,நகரம், வீதி, தவம், தூய்மை, தெய்வ வழிபாட்டில் வழுவாது ஒழுகுதல், கடைத்தெரு, இடம்.
*நியமனம்* - கட்டளை, வகைப்படுத்துதல், நியமிக்கப் பெறுதல்.
*நியமித்தல்* - அமர்த்துதல், கட்டளையிடுதல், வரையறுத்தல்.
*நியர்* - ஒளி.
*நியர்ப்புதம்*-ஒரு பேரெண்.
*நியாமகன்* - நியமிப்பவன்.
*நியாயத்தார்* - நீதிபதிகள்.
*நியாயநூல்* - தருக்கநூல்.
*நியாயமலைவு* - தருக்க நூலுக்கு மாறான கூற்று.
*நியாயம்* - நீதி, தருக்கநூல், சட்டம், ஒழுங்கு, கட்டுப்பாடு.
*நியாயர்* - தருக்க நூலறிந்தவர்.
*நியுதம்* - இலக்ஷம்.
*நியூனம்* - குறைவு.
*நியோகித்தல்* -கட்டளையிடுதல்.
*நிரஞ்சனம்* - குற்றமில்லாதது, மோக்ஷம்.
*நிரஞ்சனன்* – கடவுள்.
*நிரட்சம்* - பூமத்தியரேகை.
*நிரட்சரகுக்ஷி* – எழுத்தறியாதவன், கல்லாதவன்.
*நிரதம்* - எப்பொழுதும்.
*நிரதிசயம்* - ஒப்புயர்வற்ற
*நிரதிசயவின்பம்* -மோக்ஷம்.
*நிரத்தல்*-பரத்தல், கலத்தல், ஒழுங்குபடுதல், நிரம்புதல்,
*நிரந்தரம்* - இடைவிடாமை, அழிவு, குரங்கு, நெருக்கம்.
*நிரந்தரன்* - கடவுள்.
*நிரபராதி* - குற்றமற்றவன்.
*நிரப்பு* - வறுமை, நிறைவு.
*நிரப்புதல்* - நிறைத்தல்.
*நிரம்ப* - மிகுதியாக.
*நிரம்பாநோக்கு* - இடுக்கிப் பார்க்கும் பார்வை.
*நிரம்பாமென்சொல்* - மதலைச் சொல்.
*நிரம்புதல்* - நிறைதல், முடிவடைதல், மிகுதல்.
*நிரயம்* - நரகம்.
*நிரல்* - வரிசை, ஒப்பு.
*நிரவதி* – எல்லையற்றது.

*நிரவுதல்* - சமனுக்குதல், குறை தீர்த்தல், அழித்தல், பரப்புதல்.
*நிரனிறை* -நிறுத்த முறையே பொருள் கொள்ள வைத்தல்.
*நிராகரணம்* - மறுப்பு.
*நிராகாரம்* - உருவமின்மை, உணவின்மை.
*நிராகிருதம்* -தள்ளுண்டது.
*நிராகிருதி* - வடிவின்மை.
*நிராகுலம்* - கலக்கமின்மை.
*நிராசை* - ஆசையின்மை.
*நிராதாரம்* - பற்றுக் கோடின்மை.
*நிராமயம்* - நோயின்மை.
*நிராமயன்* - கடவுள்.
*நிராயுதன்* -ஆயுதமற்றவன்.
*நிராலம்பம்* - பற்றுக் கோடின்மை, வெளி.
*நிராலம்பன்* - கடவுள்.
*நிரியாணம்* -மரணம், யானையின் கடைக்கண்.
*நிரீச்சுரம்* - கடவுளில்லை என்னும் மதம்.
*நிருதர்* - அரக்கர்.
*நிருத்தம்* - நடனம், பற்றின்மை, வேதத்திலுள்ள சொற்களை ஆராயும் நூல்.
*நிருபம்* - கடிதம், கட்டளை.
*நிருபன்* — அரசன்.
*நிருமித்தல்*- ஏற்படுத்துதல், படைத்தல், கட்டளையிடுதல்.
*நிருபணம்* - ஆராய்ச்சி, அத்தாட்சியோடு தீர்மானித்தல்.
*நிரூபித்தல்* - ருசுப்படுத்துதல்.
*நிரை* - வரிசை, ஒழுங்கு, பசுக்கூட்டம், கொடிப்படை, கூட்டம், யசை.
  *கழு* - மதிற் கதவுகட்குக் காவலாக அமைக்கப்படும் முட்கரு.
*நிரைதல்*- வரிசைப்படுதல், ஒழுங்காகுதல்.
*நிரைத்தல்* - வரிசைப்பட நிறுத்துதல், கோத்தல், பரப்புதல், நிரப்புதல், திரளுதல்.
*நிரையம்* - நரகம்.
*நிரோட்டகம்* - இதழ்கள் ஒன்று சேர்ந்து பிறவாத எழுத்துக்களால் ஆகிய செய்யுள்.
*நிர்க்குணன்* - கடவுள்.
*நிர்ணயித்தல்* - முடிவு செய்தல்.
*நிர்த்தூளி* — சர்வநாசம்.
*நிர்ப்பந்தம்* - பலவந்தம்.
*நிர்மலம்* - மாசின்மை.
*நிர்மாணம்* - படைத்தல், ஏற்பாடு செய்தல்.
*நிர்மாலியம்* - பூசித்து நீக்கிய மலர் முதலியன.
*நிர்மூடன்* - முழுமூடன்.
*நிர்மூலம்* - முழுக்கேடு.
*நிர்வாகம்* - பொறுப்பு, காரியம் நடத்துதல்.
*நிர்வாணம்* - அம்மணம், மோக்ஷம்.
*நிர்விகற்பம்* - மாறுபாடின்மை.

***நிலக்கடலை*** - வேர்க்கடலை.
***நிலப்பனை*** - செடிவகை.
***நிலமகள்*** - பூமிதேவி.
***நிலமகன்*** - செவ்வாய்.
***நிலம்*** - தரை, மண், உலகு, இடம்.
***நிலயம்***-தங்குமிடம், கோயில், கூத்து, படி, மருதநிலத்து ஊர்.
***நிலவரண்*** - நீரும் நிழலுமற்ற மருத நில அரண்.
***நிலவருந்தி*** - சகோரப்புள்.
***நிலவலயம்*** - பூமண்டலம்.
***நிலவறை*** - பூமிக்குள் அமைக்கப்படும் அறை.
***நிலவு*** - நிலா.
***நிலவுதல்*** - நிலைத்திருத்தல், விளங்குதல், வழங்குதல்.
***நிலா***-சந்திரன், சந்திரனொளி.
***நிலாக்கல்*** - சந்திர காந்தக் கல்.
***நிலாமுகி*** - சந்திர கிரணங்களை உண்டு வாழும் பறவை.
***நிலாமுற்றம்*** - நிலாவின்பத்தை நுகர்தற்காக அமைக்கப்பட்ட மாடம்.
***நிலுவை*** – வரவு பாக்கி.
***நிலை***-நிலைமை, வாயில், இருப்பிடம், நிற்றல், உறுதி, தங்குமிடம், ஆச்சிரமம் அம்பெய்யும் நிலை.
***நிலைக்கண்ணாடி*** - நாட்டப்பட்ட பெரிய முகம் பார்க்கும் கண்ணாடி.
***நிலைக்களம்*** - இருப்பிடம்.
***நிலைகுலைதல்*** - தாழ்ந்த நிலையடைதல், சிதறுதல்.
***நிலைதிரிதல்*** - முறைமை கெடுதல்.
***நிலைத்தானம்*** - கோயில்.
***நிலைத்திணை*** - அசைவற்ற பொருள்.
***நிலைநாட்டுதல்*** - நிலைத்திருக்கச் செய்தல்.
***நிலைநிற்றல்*** - கொள்கையை உறுதியாகக் கடைப் பிடித்தல்.
***நிலைபெறுதல்*** - துன்பமற்ற நிலைமையை அடைதல்.
***நிலைபெறுத்தல்*** - நிலை நிறுத்துதல், காப்பாற்றுதல்.
***நிலைபேறு*** - உறுதி.
***நிலைமை*** - தன்மை, வாழ்க்கை நிலை, மோட்சம், புகழ்.
***நிலையங்கி***-நீண்ட சட்டை.
***நிலையல்*** - நிற்கை.
***நிலையாமை*** - உறுதியற்ற தன்மை.
***நிலைத்தல்*** - உயர்தல், வளர்தல், மேன்மை பெறுதல்.
***நிவந்தம்*** - கோயிற் பணி ஏற்பாடு.
***நிவப்பு*** - உயரம்.
***நிவாசம்*** - வசிக்குமிடம்.
***நிவாரணம்*** - துன்ப நீக்கம்.
***நிவிருத்தி***-விடுதலை, துறவு.
***நிவேசனம்*** - மனைக்கட்டு.
***நிவேதனம்*** – கடவுளுக்குப் படைக்கும் அமுது.
***நிழத்துதல்*** - இல்லையாக்குதல், தின்றழித்தல்.

*நிழலிடுதல்* - பிரதிபலித்தல், நிழல் தருதல், ஒளிவிடுதல்.
*நிழல்* - சாயை, பிரதிபிம்பம், குளிர்ச்சி, இடம், ஒளி.
*நிழற்றுதல்* - நிழல் செய்தல், கருணை காட்டுதல், ஒளி விடுதல்.
*நிறத்தல்* - நிறம் பொருந்துதல், பயன் கொடுத்தல், சோபித்தல்.
*நிறம்* - வர்ணம், ஒளி, இயல்பு, நடுவிடம், மார்பு, உயிர் நிலை, தோல், உடல், புகழ்.
*நிறுதிட்டம்* - நேர் நிற்றல், விறைப்பு.
*நிறுத்தலளவை* - நிறையைப் பற்றிய அளவை.
*நிறுத்தல்* - தூக்குதல், நிலைநிறுத்தல், வைத்தல்.
*நிறுத்துதல்* - நிலை நாட்டுதல், நிற்கச் செய்தல், இருத்துதல், செயல் ஒழிதல்.
*நிறுபூசல்* - மும்முரம்.
*நிறைபூசல்* - மும்முரம்.
*நிறுவுதல்* - நிலை நாட்டுதல்.
*நிறை* - அளவு, மேன்மை, நீர்ச்சால், பூர்த்தி, நிறுக்கை, எடை, நூறு பல அளவு, கற்பு, மன அடக்கம், விரதம், நீதி, குறைவின்மை.
*நிறைகல்* - படிக்கல்.
*நிறைகுடம்* - பூரண கும்பம்.
*நிறைகோல்* - துலாக்கோல்.
*நிறைதல்* - நிரம்புதல், மிகுதல்.
*நிறைத்தல்* - நிரப்புதல்.
*நிறைநரம்பு* - ஏழு சுரமுமுள்ள பண்.
*நிறைநாழி* - மங்கல அறிகுறியாக நெல் நிரப்பி வைக்கப்பட்ட நாழி.
*நிறைநீர்வேலி* - பேய்த்தேர், உடைகுளம்.
*நிறைமொழி* - பலிக்கும் வாக்கு.
*நிறையழிதல்* - கற்பழிதல், யானைமதம் பிடித்தல்.
*நிறைவேறுதல்*- முடிவடைதல்.
*நிற்பது* - தாவரம்.
*நிற்றல்* — நிற்கை.
*நினவ* - உன்னுடையவை.
*நினைதல்* - கருதுதல், ஆலோசித்தல், தியானித்தல்.
*நினைப்பூட்டுதல்* - ஞாபகப்படுத்துதல்.
*நினைவு*-எண்ணம், தியானம், ஆலோசனை, நோக்கம்.
*நின்மலம்* - குற்றமின்மை.
*நின்மலன்* - கடவுள்.
*நின்மலி* - வில்வம்.
*நின்மதி* - ஆரம்பம்.
*நின்றது* - எஞ்சியது, தாவரம், நிலைத்த பொருள்.
*நின்றாடல்* - அல்லியக்கூத்து, தெய்வக்கூத்து.
*நின்றுசிணுங்கி* - சிறியாநங்கை என்னும் பூண்டு.
*நின்றுவற்றுதல்* - சொல் சொற்றொடர் இவை இருந்தும் பயனிலவாதல்.
*நின்றேத்துவார்* - அரசனின் புகழ் பாடுபவர்.

**நீ**கம் - தவளை.
*நீகாரம்* - பனி, அவமதிப்பு.
*நீகான்* - மாலுமி.
*நீக்கம்* - நீங்குகை, முடிவு.
*நீக்கல்* - போக்குதல், அழித்தல்.
*நீங்குதல்* - பிரிதல் , ஒழிதல்.
*நீசம்* - இழிவு.
*நீச்சு* - நீந்துகை, வெள்ளம், மீன்நாற்றம்.
*நீடம்* - பறவைக்கூடு.
*நீடுதல்* - நீளுதல், நீட்டித் ,தாமதித்தல், தேடுதல், கெடுதல்.
*நீடுநீர்* - தீர்த்த நீர்.
*நீடூழி* - நெடுங்காலம்.
*நீட்சி* - நீட்டம்.
*நீட்டம்* - நீளம், தாமதம்.
*நீட்டித்தல்* - நீளச் செய்தல், காலம் தாழ்த்துதல்.
*நீட்டுதல்*-கொடுத்தல், தாமதித்தல், நீளச் செய்தல்.
*நீட்டோலை* - திருமுகவோலை.
*நீணிலை* ஆழம்.
*நீணெறி* - நீண்டவழி.
*நீண்முடி* - அரசன்.
*நீண்மை* - பழமை.
*நீண்மொழி*-வஞ்சினம், சபதம்.
*நீதம்* - நீதி.
*நீதன்* - நீதிமான், நீசன்.
*நீதி* - நியாயம், நீதிநூல், நன்னெறி, முறைமை, ஒழுக்கம்.
*நீத்தம்* - வெள்ளம், ஆழம், கடல், மிகுதி.
*நீத்தல்* - துறத்தல், வெறுத்தல், நீக்குதல், பிரித்தல்.
*நீத்து* - வெள்ளம், நீந்துதல்,
*நீந்துதல்* - நீரில்மிதந்து செல்லல், கடத்தல்.
*நீபம்* - கடம்பு, காரணம், உத்திரட்டாதி.
*நீமம்* - ஒளி.
*நீயான்* - மாலுமி.
*நீயிர்* - முன்னிலைப் பன்மைப் பெயர்.
*நீரகம்* - பூமி, கடல் சூழ்ந்த இடம்.
*நீரட்டுதல்* - தாரைவார்த்துக் கொடுத்தல்.
*நீரணி* - நீர் விளையாட்டுக் கோலம்.
*நீரணிமாடம்* - நீர் விளையாட்டிடம்.
*நீரதம்* - மேகம், நீரற்றது,
*நீரம்* - நீர்.
*நீரரண்* — அகழி.
*நீரரமகள்* - நீரில் வாழும் தெய்வப்பெண்.
*நீரவன்* - அறிவுடையவன்.
*நீராகாரம்*-பழஞ்சோற்றில் கலந்துள்ள நீர்.
*நீராசனம்* - ஆரத்தி.
*நீராஞ்சனம்* - நீராசனம்.
*நீராட்டு* - முழுக்கு.
*நீராணி* - பழங்காலத்து நீர் வரி.
*நீராணிக்கன்* - மதகின் காவற்காரன்.
*நீராழிமண்டபம்* - தெப்பக் குளங்களின் நடுவிலமர்ந்த மண்டபம்.

*நீராழி* - கடல்.
*நீராளம்* - நீர்த்தன்மை.
*நீரிழிவு*-சிறுநீர் சம்பந்தமான நோய்.
*நீருறி* - கீழாநெல்லி.
*நீரெட்டிமுத்து* - பேராமணக்கு.
*நீர்* - தண்ணீர், கடல், ஒளி, குணம், முறைமை.
*நீர்க்கடன்* - பிதிர்க்களின் பொருட்டுச் செய்யும் தர்ப்பணம்.
*நீர்க்கடுப்பு* - சிறுநீர் சம்பந்தமானதொரு நோய்.
*நீர்க்கோலம்* - நீர்விளையாட்டுக் காலத்தில் அணியும் உடை விசேடம், நீரில் எழுதப்படும் எழுத்து.
*நீர்க்கோழி* - நீரில் வாழும் கோழி.
*நீர்த்தல்* - நீராதல்,ஈரமாதல்.
*நீர்த்தூம்பு* - மதகு.
*நீர்நாடு* - சோழநாடு.
*நீர்நாய்* - நீரில் வாழும் நாய் போன்றதொரு விலங்கு.
*நீர்நிலை* - ஏரி குளம் முதலிய நீருள்ளவிடம்.
*நீர்பிரிதல்* - கோபித்தல்.
*நீர்போக்கி* - மதகு.
*நீர்ப்படை* - நடுகல்லிற்கு நீராட்டித் தூய்மை செய்தல்.
*நீர்மாடம்* - தோணிவகை.
*நீர்மேல் நெருப்பு* - அந்தரத் தாமரை.
*நீர்மை* - நீரின் தன்மை, ஒழுக்கம், ஒளி, அழகு, தன்மை.
*நீர்யானை* - நீரில் வாழும் யானை போன்றதொரு பருத்த பிராணி.
*நீர்வரைப்பு* - உலகம்.
*நீர்வலயம்* - உலகம்.
*நீர்வார்த்தல்* - தாரைவார்த்துக் கொடுத்தல்.
*நீர்வாரி* - யானை கட்டும்

*நீர்விழவு* - நீர்விளையாட்டு.
*நீர்வேட்கை* - தாகம்.
*நீலகண்டம்* - சிவனதுவிடம் தங்கிய கழுத்து, மயில்.
*நீலகண்டி* - பாம்பின் நச்சுப் பற்களுள் ஒன்று, துர்க்கை.
*நீலம்* – நீலநிறம்,நீல நிற இரத்தினக்கல், நீலோற்பலம், கறுப்பு.
*நீலன்* - சனி, கொடியவன்.
*நீலி* - காளி, துர்க்குணமுள்ளவன், நீலிச்சாயம், ஒருவகை நிறம், அவுரி, பாம்பின் நச்சுப் பற்களுள் ஒன்று.
*நீலிக்கண்ணீர்* - பொய் அழுகை.
*நீலோற்பலம்* - கருங்குவளை.
*நீல்* - நீலநிறம், கறுப்பு, கருங்குவளை.
*நீவரம்* – நாடு.
*நீவாரம்* - குளநெல்.
*நீவி* - கொய்சகம், ஆடை.
*நீவியம்* - கொய்சகம்.
*நீவிர்* - முன்னிலைப் பன்மைச் சொல்.

*நீவுதல்* - தடவுதல், கோதுதல், கைவிடுதல், கடத்தல், அறுத்தல், பரப்புதல்.
*நீழல்* – நிழல், காற்று.
*நீளம்* - நெடுமை, பறவைக் கூடு.
*நீளிடை* - நெடுவழி, காடு.
*நீள்* - நீளம், நெடுங்காலம்,
*நீறு* - சாம்பல், விபூதி, சுண்ணும்பு, புழுதி.
*நீற்றறை*-சுண்ணும்புக் காளவாய்.
*நீற்றுதல்* – நீருக்குதல்.
*நீற்றுக் கோயில்* - விபூதிப்பை.

**நு**கத்தடி - நுகம்.

*நுகம்* – வண்டியிழுக்கும் எருதுகளின் கழுத்தில பூட்டும் மரம், நடுவுநிலைமை, பாரம், வலிமை, கதவின் கணையமரம்.
*நுகர்ச்சி* - அனுபவம், வேதனை, உண்ணுதல்.
*நுகர்தல்* - அனுபவித்தல், உண்ணுதல், செய்தல்.
*நுகர்வு* - நுகர்ச்சி.
*நுகும்பு* - குருத்து,ஓலை.
*நுகைதல்* - தளர்தல்.
*நுகைத்தல்* - தளரச் செய்தல்.
*நுங்கு* - பனங்காயின் உள்ளீடு.
*நுங்குதல்* - விழுங்குதல், கைக்கொள்ளுதல், ஆரப்பருகுதல், உண்ணுதல்.
*நுங்கை* - உன் தங்கை, உன் தாய்.
*நுசுப்பு* - மகளிர் இடை.
*நுசை* - சிவதைவேர்.
*நுடக்கம்* - துவளுதல், தள்ளாடுதல்.
*நுடக்குதல்* - துவட்டுதல், கரைத்தல், மடக்குதல்,
*நுடங்குதல்* - அசைதல், துவளுதல், நுட்பமாதல், கூத்தாடுதல்.
*நுட்பம்*–நுண்மை, ஆராய்ச்சியோடு கூடிய உணர்ச்சி.
*நுணக்கம்* - வாட்டம், கூர்மை.
*நுணங்கு* - தேமல், நுட்பம், பொடி, நுடக்கம்.
*நுணங்குதல்* - நுட்பமாதல், செறிதல், அசைதல், வளைதல், வாடுதல்.
*நுணல்* - தவளை.
*நுணவு* - நுணா.
*நுணா* - ஒருவகை மரம்.
*நுணவுதல்*- தடவித்தெரிதல், நாவால் தடவியுணர்தல்.
*நுணித்தல்* - நுணுகியாராய்தல், பொடியாக்குதல்.
*நுணுகுதல்* - நுட்பமாதல், கூர்மையாதல்.
*நுணுக்கம்*-நுண்மை, பொருளடக்கம், கூர்ந்த அறிவு.
*நுணுக்குதல்* - சிதைத்தல், கூர்மையாக்குதல், சிறியதாக்குதல்.
*நுணுங்கு* - பொடி.

*நுண்பொருள்* - நுட்பமான கருத்து.
*நுண்மை* - நுட்பம், நுண் பொருள், மிகுதி.
*நுதம்* - நீராடு துறை.
*நுதம்பு* - கள், சோறு.
*நுதலுதல்* - கூறுதல், தோற்றுவித்தல், கருதுதல்.
*நுதல்* - நெற்றி, புருவம், மேலிடம், தலை.
*நுதளுட்டி* - துர்க்கை.
*நுதி* - நுனி, கூர்மை.
*நுதுத்தல்* - அழித்தல், நீக்கு தல்.
*நுந்தாவிளக்கு* - எப்பொழு தும் எரிந்து கொண்டிருக் கும் விளக்கு.
*நுந்துதல்* - தூண்டுதல், தள் ளுதல்.
*நுந்தை* - உன் தந்தை.
*நுமன்* - உங்களைச்சார்ந்தவன்.
*நுரை* - நீர்க்குமிழித்தொகுதி, வெண்ணெய்.
*நுரையீரல்* - மூச்சுப்பை.
*நுவணம்* - நுட்பம், இடித்த மா, கல்வி நூல்.
*நுவலுதல்* - சொல்லுதல், விரும்புதல்.
*நுவல்* - சொல்.
*நுவல்வோன்* - ஆசிரியன்.
*நுவறுதல்* - அராவுதல்.
*நுவற்சி* - சொல்லுதல்.
*நுவ்வை* - உன் தங்கை.
*நுழுந்துதல்* - நுழைத்தல், பதுக்கல், முடித்தல்.
*நுழை* - துவாரம், குகை, சிறு வழி, நுண்மை.
*நுழைதல்* - புகுதல், நுண்மை யாதல்.
*நுழைத்தல்* - புகுத்துதல்.
*நுழைபுலல்* - நுட்ப அறிவு.
*நுளம்பு* — கொசுகு.
*நுளை* - வலையர் சாதி.
*நுளைச்சி* - செம்படவப் பெண்.
*நுளையர்* - வலைஞர், தாழ்ந் தோர்.
*நுறுக்குதல்* - பொடியாக்கு தல்.
*நுறுங்கு* - குறுநொய்.
*நுறுங்குதல்*- பொடியாதல், தகர்தல், அழிதல்.
*நுனி* - முனை, கூர்மை.
*நுனித்தல்* - கூர்ந்து ஆராய் தல், கூராக்குதல்.
*நுனை* - முனை.

**நூ** - எள், யானை, ஆபர ணம்.

*நூக்கம்* - உயரம்.
*நூக்குதல்* - பொடியாக்கு தல், ஊசலாடுதல், தூண்டு தல், தள்ளுதல், எறிதல், முறித்தல், பரிகாரம் செய் தல்.
*நூங்கு* - பெருமை.
*நூதனம்* - புதியது.
*நூபம்* - எருது.
*நூபுரம்* - சிலம்பு.
*நூலறி புலவர்* - அமைச்சர்.
*நூலாக்கலிங்கம்* - பட்டாடை.
*நூலிழத்தல்* - கைம்மை யாதல்.

***நூலோர்*** - நூல செய்தோர், கற்றோர், அமைச்சர்.
***நூல்*** - பஞ்சு நூல், பூணூல், தாலி, ஆலோசனை, ஆகமம், புத்தகம்.
***நூல்வெண்மாடம்*** - கூடாரம்.
***நூவு*** - எள்.
***நூவுதல்*** - நீர் பாய்ச்சுதல்.
***நூழில்*** - கொன்று குவித்தல், யானை, துவாரம், கொடியகை, திரை, செக்கு.
***நூழை*** - சன்னல், துவாரம், குகை, சுருங்கை வழி.
***நூழைவாயில்*** - சுருங்கை வழி.
***நூறு*** - ஓர் எண்ணிக்கை, பொடி, சுண்ணும்பு.
***நூறுதல்***-அழித்தல், வெட்டுதல், துரத்துதல், அடித்துக் கொல்லுதல், நெரித்தல், இடித்தல்.
***நூற்பா*** - சூத்திரப்பா.
***நூற்றுண்டு*** - நூறு வருடம் கொண்ட கால அளவு.
***நூற்றுவரைக் கொல்லி*** - பொறிவகை.
***நூனம்***-குறைபாடு, நிச்சயம்.
- நெசவுநாடா.
***நூன்முகம்*** - முகவுரை.

**நெ*கிடி***-குளிர் காய்தற்குரிய நெருப்பு.
***நெகிழி*** - பாதச் சிலம்பு.
***நெகிழ்தல்***-கட்டுத் தளர்தல், இளகுதல், தளர்தல், தழுவுதல், மனமிரங்குதல்.
***நெகுதல்*** - உருகுதல், கரைதல், வருந்துதல், கெடுதல்.
***நெக்குதல்*** - இளகுதல்.
***நெக்குருகுதல்*** - இளகுதல்.
***நெக்குவிடுதல்*** - பிளவுபடுதல்.
***நெசவு*** - நெய்தற்றொழில்.
***நெஞ்சகம்*** — மனம்.
***நெஞ்சம்*** - மனம், மார்பு, அன்பு.
***நெஞ்சழிதல்***-மனம்குலைதல்.
***நெஞ்சு*** - மார்பு, இருதயம், மனம், தொண்டை.
***நெடலை*** - நாரை வகை.
***நெடி*** - சிள்வண்டு, காரமான மணம்.
***நெடிது*** - நீண்டகாலம், தாமதம்.
***நெடிதுயிர்த்தல்*** - பெருமூச்சு விடுதல்.
***நெடித்தல்*** - கால தாமதம் செய்தல்.
***நெடில்***-நெட்டெழுத்து, மூங்கில், மிக்கது.
***நெடுங்கடை***-பெரிய வாசல்.
***நெடுங்கணக்கு***-அரிச்சுவடி.
***நெடுங்கழுத்தல்*** -ஒட்டகம், கோவேறு கழுதை.
***நெடுங்கை*** — யானை.
***நெடுஞ்சாண்கிடை*** — சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தல்.
***நெடுஞ்சொல்*** - புகழ்.
***நெடுநீர்*** - கடல், நீடித்துச் செய்யும் தன்மை.
***நெடுந்தகை*** - நற்குணம், மேம்பாடு, மேம்பாடுள்ளவன்.

*நெடுந்துருத்தி* - நீர் வீசும் கருவி.
*நெடுந்தொகை* - அகநானூறு.
*நெடுமை* - நீளம், பெருமை, ஆழம், கொடுமை.
*நெடுமொழி* - புகழ்ச்சொல், வஞ்சினம், யாவருமறிந்த செய்தி.
*நெடும்பாடு* - பெருங்குறை.
*நெடுவரி* - ஒழுங்கு.
*நெடுவீடு* - மோக்ஷம்.
*நெட்டங்கம்* - கர்வம், பழிச்சொல்.
*நெட்டாங்கு* - செங்குத்து.
*நெட்டி*-கிடேச்சு, சோம்பல்.
*நெட்டிடை* - நெடுந்தூரம்.
*நெட்டிலிங்கம்* - மரவகை.
*நெட்டு*-நெடுந்தூரம், கர்வம்.
*நெட்டுயிர்ப்பு* - பெருமூச்சு.
*நெட்டுரு* - மனப்பாடம்.
*நெட்டெழுத்து* - நெடில், கையெழுத்து.
*நெட்டை* - நீளம், உயரம், சோம்பல் முறிக்கை.
*நெட்டோலை* - திருமுகம்.
*நெண்டுதல்* - தோண்டுதல், நோண்டுதல்.
*நெமிரல்* - சோறு.
*நெம்பு* - மடலாணி, மேலெழும் புகை.
*நெய்* - உருக்கிய வெண்ணெய், தேன், இரத்தம், நிணம், நட்பு.
*நெய்தல்* — கடலும் கடல் சார்ந்த இடமும், வெள்ளாம்பல், ஒரு பேரெண், இரங்கற்பறை, துணிநெய்தல்.
*நெய்தற்பறை* - சாப்பறை.
*நெய்த்தல்* - ஒளிவீசுதல், கொழுத்தல்.
*நெய்த்தோர்*—இரத்தம்.
*நெய்ப்பு* - நெய்ப்பற்று, பளபளப்பு.
*நெய்யணி* - பிள்ளைப் பேற்றின் பின் தீட்டு நீங்குதற்குரிய முழுக்கு.
*நெய்யரி* - பன்னாடை.
*நெரிதல்* - நொறுங்குதல், வளைதல், நெருங்குதல்.
*நெரித்தல்* - நசுக்குதல், நெருங்குதல். கைபிசைதல்.
*நெரியல்* - மிளகு.
*நெரிவு* — நசுங்குதல்.
*நெருக்கடி* - நெருக்கம், துன்பம்.
*நெருக்கம்*-சமீபம், ஒடுக்கம், செறிவு.
*நெருக்குதல்* - நசுக்குதல், வருத்துதல், சுருக்குதல். செறியச் செய்தல்.
*நெருங்குதல்* - சமீபித்தல், இடித்துக் கூறுதல்.
*நெருஞ்சி* - ஒருவகைப் பூண்டு.
*நெருடு* - நிமிண்டுதல், வஞ்சனை, கஷ்டமானது.
*நெருடுதல்*-திரித்தல், நிமிண்டுதல்.
*நெருநல்* — நேற்று.
*நெருப்பு* - தீ, இடி.
*நெல்* - பயிர்வகை.
*நெல்லி* - ஒருவகை மரம்.

*நெல்லிமுள்ளி*-காய்ந்த நெல் லிக்காய்த் தோல்.
*நெல்லிவட்டு* - நெல்லிக்காய் கொண்டு விளையாடும் ஒரு வகை விளையாட்டு.
*நெளி* - வளைவு.
*நெளிதல்* - வளைதல், சுருளு தல், வருந்துதல்.
*நெறி*-வழி, ஒழுக்கம், மதம், கட்டி, வளைவு,சுருள்.
*நெறிசெய்தல்*-ஆளுதல், நல் வழிப்படுத்துதல்.
*நெறிதல்* - மயிர் குழற்சி யாதல்.
*நெறித்தல்* - வளைத்தல்,மயிர் குழலுதல்.
*நெறிநீர்* - கடல்.
*நெறிப்படுதல்* - ஒழுங்கு படுதல்.
*நெறிப்பு*-புருவத்தை வளைத் தல்.
*நெறிமருப்பு* - மடங்கின கொம்பு.
*நெறிமை* - விதி, வழக்கு.
*நெற்குறி* - நெல்லைக்கொண்டு கட்டுவிச்சி கூறும் குறி.
*நெற்கூடு* - குதிர்.
*நெற்றி* - கண்களுக்கு உடற் ப... உச்சி, முன்படை, கட்டி டத்தின் மேல்முகப்பு.
*நெற்றிச்சுட்டி* - சிறுவர் நுத வகை.
*நெற்றிப்பட்டம்* - நுதலணி வகை.
*நெற்று* - முதிர்ந்த காய்.
*நென்னல்* - நேற்று.

## நே - அன்பு.

*நேசம்* - அன்பு, தகுதி.
*நேசித்தல்* - அன்பு செய்தல்.
*நேடுதல்* - தேடுதல், எண்ணு தல்.
*நேதா* - தலைவன்.
*நேதி* - முறை.
*நேத்திரம்*-கண்,பட்டாடை
*நேபத்தியம்*- நாடகத்திரை.
*நேமகம்* - ஒழுங்கு.
*நேமி* - வட்டம், உருளை, சக் கராயுதம், சக்கரவாகப்புள், சக்கரவாளம், ஆஞ்ஞா சக் கரம், தீர்த்தங்கரருள் ஒரு வர்.
*நேமியான்* - திருமால்.
*நேயம்* - அன்பு, சிநேகம், பக்தி, நெய், நன்மை.
*நேரம்* - காலம், தருணம்.
*நேரலன்* - பகைவன்.
*நேரல்* - ஏற்படுதல்.
*நேரல்லார்* - கீழோர்.
*நேரார்* – பகைவர்.
*நேரிசம்* - எறிபடை, அம்பு.
*நேரிடுதல்* - சம்பவித்தல்.
*நேரிழை* - பெண்.
*நேரொத்தல்* - சமமாதல்.
*நேர்* - ஒழுங்கு, வளைவில்லா தது, வலிமை, நீதி, உவமை, பாதி, முன்புறம்.
*நேர்ச்சி* - நட்பு.
*நேர்தல்* — உடன்படுதல், எதிர்ப்படுதல், சம்பவித்தல், கொடுத்தல், பொருந்துதல், பெறுதல், ஒத்தல், சொல்லு தல், எதிர்த்தல்.

*நேர்த்தி* - சிறப்பு, பிரார்த்

*நேர்த்திக்கடன்* - பிரார்த்

*நேர்ந்தார்* - நண்பர்.
*நேர்படுதல்* - எதிர்ப்படுதல், ஒழுங்குபடுதல், வாய்த்தல், ஏற்புடையதாதல்.
*நேர்பாடு*-தற்செயல் நிகழ்ச்சி, நீதி, நீளம்.
*நேர்முகம்* - எதிர்முகம்.
*நேர்மை* - ஒழுங்கு, சமம், நீதி.
*நேர்வாளம்* - மருந்துவகை.
*நேர்வு* -உடன்பாடு, கொடுத்தல்.
*நேற்று* - முன்னாள்.

## நை - இகழ்ச்சிக் குறிப்பு.

*நைகரம்* - துன்பம், குறைவு.
*நைச்சியம்* - இச்சகப்பேச்சு, தாழ்வு.
*நைசர்க்கிகம்* - இயற்கையாகத் தோன்றியது.
*நைதல்* - வருந்துதல், நசுங்குதல், இரங்குதல், தளர்தல்.
*நைதிகை* - ஊசி மல்லிகை.
*நைத்தல்* - எரித்தல், அழித்தல், ஈரமாதல்.
*நைமித்திகம்* - விசேஷ காலங்களில் செய்யும் காரியம்.
*நையாண்டி* - ஏளனம், நாடோடிப் பாட்டுவகை.
*நைவருதல்* - வருந்துதல்.
*நைவளம்* - குறிஞ்சி யாழ்த்திறம், பாலைப் பண்.
*நைவு* - நோய்.
*நைவேதித்தல்* - கடவுளுக்குப் படைத்தல்.
*நைவேத்தியம்* - கடவுளுக்குப் படைக்கும் உணவு.

## நொ - துன்பம், மென்மை.

*நொக்குதல்* - அடித்தல், ல்,

*நொங்குதல்* - விழுங்குதல்.
*நொசிதல்* - அருமையாதல், வருந்துதல், வளைதல், துவளுதல், நுண்மையாதல்.
*நொசித்தல்* - வருத்துதல்.
*நொசிப்பு* - சமாதி.
*நொசிவு* - வருத்தம், வளைவு.
*நொச்சி* - ஒரு செடி, எயில் காப்போர் சூடும் பூ, எயில் காவல், மதில், சிற்றூர்.
*நொடி* - கைந் நொடித்தல், கைந் நொடிப் பொழுது, முதுமொழி, விடுகதை, பாதைகளில் ஏற்படும் பள்ளம்.
*நொடிதல்* - சொல்லுதல்.
*நொடித்தல்* - விரல் தெறித்து ஓசையுண்டாக்கிப்பழித்துப் பேசுதல், அழித்தல்.
*நொடுத்தல்* - விற்றல்.
*நொடை* - விலை, விற்றல், பலபண்டம்.
*நொட்டை* - குற்றம், குற்றங்கூறல்.
*நொண்டி* - முடம்.
*நொண்டுதல்* - காலை ஊன்றுமல் தூக்கி நடத்தல்.

*நொதி* - அருவருக்கத் தக்க சேறு.
*நொதுமல்* - அயல், உதாசீனம், மென்மை.
*நொதுமலர்* - அயலார்.
*நொந்தார்* - பகைவர்.
*நொந்துதல்* - தூண்டுதல், அழிதல்.
*நொப்பம்* - சமர்த்து.
*நொய்* -இலேசு, குறுநொய்.
*நொய்து* - இலேசானது, இழிவானது, மெல்லியது.
*நொய்ப்பம்* - சாமர்த்தியம்.
*நொய்ம்மை*-இலேசு, இழிவு.
*நொய்வு* - துன்பம்.
*நொலையல்* — அப்ப வகை.
*நொவ்விதாக* - விரைவாக.
*நொவ்வு* - மெலிவு.
*நொழுந்துதல்*- நுழைத்தல்.
*நொள்குதல்* - சுருங்குதல்.
*நொள்ளுதல்* - விழுங்குதல்.
*நொள்ளை* - குருடு, விலங்கு வகை, வண்டு வகை.
*நொறில்* - விரைவு, சேறு, நுடக்கம்.
*நொறுக்கு* - பொடியாக்கு, மெல்லு.
*நொறுங்குதல்* - பொடியாதல்.
*நொறுங்கு* - நொய்.
*நொறுவை* — சிற்றுண்டி.

# நோ

**நோ** - வலி, துன்பம்.
*நோக்கம்* - பார்வை, கண், அழகு, கருத்து, கவனம், விருப்பம்.
*நோக்கன்* - கழைக்கூத்தன்.
*நோக்காடு*-நோய், துன்பம்,
*நோட்டக்காரன்* - நாணயம் பரிசோதிப்பவன்.
*நோட்டம்* - பார்வை, சோதனை, விலைமதிப்பு.
*நோட்டம்பார்த்தல்* - வேவு பார்த்தல், தகுதி பார்த்தல்.
*நோண்டுதல்* - கிளறுதல்.
*நோதல்* - வருந்துதல், வறுமையடைதல்.
*நோப்பாளம்* - கோபம்.
*நோயாளி* — பிணியாளன்.
*நோய்* - வியாதி, துன்பம், அச்சம்.
*நோலை* - எள்ளுருண்டை, எட்கசிவு.
*நோவல்* - அப்பம்.
*நோவு* - வலி, துன்பம், இரக்கம்.
*நோற்பார்* - தவம் செய்பவர்.
*நோற்பு* - பொறுமை, தவம்.
*நோற்றல்* - பொறுத்தல், தவஞ் செய்தல், ஒழுகுதல்.
*நோனமை* - அழுக்காறு, தவம் செய்யாமை.
*நோனார்* - ஆற்றுதார், பகைவர்.
*நோன்பி* - விரதமனுஷ்டிப்பவர்.
*நோன்பு* - விரதம், தவம்.
*நோன்மை* — பொறுமை, வலிமை, பெருமை.
*நோன்றல்* - சகித்தல்.

**நௌ** - மரக்கலம்.
*நௌவி* - மான்.
**ப***த்தி* - பகுதி, பக்தி.
*ப∴து* - பத்து.
*ப∴றி* - மரக்கலம், படகு,

*பகடம்* - பகட்டு.
*பகடி* - பரிகாசம், கூத்து வகை, விகடம், வெளி வேடக்காரன், கூத்தாடி, பிரகிருதிதத்துவம்.
*பகடு* - எருது, ஆண் யானை, பெருமை, வலிமை.
*பகடை* - கவருடுதற்குரிய காய்.
*பகட்டு*-வெளிவேடம், ஆடம் பரம்.
*பகண்டை* - விகடப்பாடல், கவுதாரி.
*பகந்தரம்*-மூலநோய் வகை.
*பகம்* - பெண்குறி, கொக்கு, குயில், காக்கட்டான்.
*பகரம்* - அழகு, பிரதி,ப என் னும் எழுத்து.
*பகரி* - ஆவிரை.
*பகர்* - ஒளி.
*பகர்தல்* - சொல்லுதல், விற் றல், ஒளிவீசுதல், கொடுத் தல்.
*பகலடி* - சிங்கியடித்தல்.
*பகலவன்* - சூரியன், பரணி நாள்.
*பகலாணி* - நுகத்தின் ஆணி.
*பகலிருக்கை* - நாளோலக் கம்.
*பகல்* - பகற்காலம், நாள், பிரித்தல், சூரியன், ஒளி, நடு, நுகத்தின் ஆணி, முகூர்த்தம், இளவெயில், ஊழிக்காலம்.
*பகல்வாயில்*-கிழக்குத்திசை.
*பகல்வினையாளன்* - நாவி

*பகவதி* - துர்க்கை, தரும தேவதை.
*பகவு* - பங்கு, துண்டு.
*பகழி* - அம்பு.
*பகற்குருடு* - கூகை.
*பகற்போது* - பகற்காலம், பகற்காலத்தில் மலரும் மலர்.
*பகன்றை* - சிவதைக்கொடி,

*பகிக்கரித்தல்* - விலக்குதல்.
*பகிரங்கம்* - வெளிப்படை.
*பகிர்* - துண்டம், வெளிப் புறம்.
*பகிர்தல்* - பங்கிடுதல்.
*பகினி* - உடன்பிறந்தாள்.
*பகீரதப்பிரயத்தனம்*- பெருமுயற்சி.
*பகு* - அதிகமான.
*பகுதல்* - பிரிதல், பிளவுபடு தல்.
*பகுதி* - முதனிலை, திறை, மூலப் பிரகிருதி.
*பகுத்தல்*-பங்கிடுதல், வெட் டுதல், பிளத்தல், கோது நீக்குதல், தெளிவாய்க் கூறு தல்.
*பகுவசனம்* - பன்மை.
*பகுவாய்*-பிளந்தவாய், தாழி.

*பகேசிகை* - காய்க்காதமரம்.
*பகை* - விரோதம், மாறுபாடு, திங்கு, விரோதி.
*பகைதணிவினை*-தூது செல்.
*பகைத்தல்*- விரோதங்கொள்ளுதல்.
*பகைமுனை* - போர்க்களம்.
*பகைமை* - விரோதம்.
*பகையாளி* - பகைவன்.
*பகைவன்* - எதிரி.
*பக்கடுத்தல்*-நொறுங்குதல்.
*பக்கம் செய்தல்* - ஒளி விடுதல்.
*பக்கணம்* - தின்பண்டம், ஊர், வேடர் வீதி.
*பக்கம்*-அருகு, சிறகு, விலாப்புறம், நட்பு, சுற்றம், தன்மை, ஒளி, சேனை, பதினைந்து நாள் கொண்ட காலம்.
*பக்கரை* - அங்கவடி, சேணம்.
*பக்கல்* - பக்கம்.
*பக்கவாத்தியம்* - வாய்ப்பாட்டுக்குத் துணையான இசைக் கருவிகள்.
*பக்கவாதம்* - ஒருதலைப்பக்கமாகப் பேசுதல், கைகால்களை அசைவற்றதாகச் செய்யும் நோய்.
*பக்கறை*-துணியுறை, குழப்பம்
*பக்கி* - பறவை.
*பக்கிசைத்தல்* - விட்டிசைத்தல்.
*பக்கிடுதல்* - திடுக்கிடுதல்.
*பக்கு* - பிளப்பு, புண்ணசறு.
*பக்குவம்* - பருவம், தகுதி, முதிர்ச்சி.
*பங்கசம்* - தாமரை.
*பங்கசாதம்* - பங்கசம், தாமரை.
*பங்கம்* - சேறு, கேடு, அவமானம், பழுது, தோல்வி.
*பங்கயம்* - தாமரை.
*பங்கன்* - பாகமுடையவன்.
*பங்காளி* - தாயாதி, கூட்டாளி.
*பங்கி* - ஆண்களின் மயிர், சடைக் கஞ்சா.
*பங்கீடு* —பங்கிடுதல், பங்கிட்ட பொருள்.
*பங்கு*-பாகம், பக்கம், முடம்,
*பங்குசம்* - தலைக்கோலம்.
*பங்கேருகம்* - தாமரை.
*பசத்தல்* - மேனி பொன்னிறங் கொள்ளுதல், பசுமையாதல், நிலம் வேறுபடுதல்.
*பசப்பு* - நிறைவேறுபாடு, ஏமாற்றுமொழி.
*பசலை*-அழகு தேமல், பொன்னிறம், வருத்தம்.
*பசளை* - உரம், ஒருவகைக் கொடி.
*பசி* - உணவு வேட்கை, வறுமை.
*பசிதம்*-சாம்பல்,
*பசு* - ஆ, இடபம், இடபராசி, ஆன்மா, யாகத்தில் பலி கொடுக்கப்படும் பிராணி.

*பசுகரணம்* - உயிர்களின் செயல்.
*பசுங்காய்* - இளங்காய், பாக்கு.
*பசுஞானம்*
*பசுநிலே* - மாட்டுக்கொட்டில்.
*பசுந்தரை* - புல் தரை.
*பசுமம்* - திருநீறு.
*பசுமை* - பச்சை சநிறம், குளிர்ச்சி, அழகு, இளமை.
*பசும்பதம்* - சமையற் பொருள்கள்.
*பசும்பிடி* - பச்சிலே.
*பசும்பொன்* - மாற்றுயர்ந்த பொன்.
*பசை* - பிசின், கொழுப்பு, சாரம், இரக்கம், அன்பு, பற்று, ஈரம், செல்வம்.
*பசைதல்* - செறிதல், அன்பு கொள்ளுதல், ஒன்று சேர்த்தல்.
*பச்சவடம்* - நீண்ட
*பச்சாத்தாபம்* - கழிவிரக்கம்.
*பச்சிமம்* - மேற்கு.
*பச்சை*—பசுமைநிறம், வேகாதது, தோல், மரகதம், புதன்.
*பச்சைநாடன்* - வாழை வகை.
*பச்சைவெட்டு* - சுத்தி செய்யப்படாத பாஷாணம்.
*பச்சோந்தி* - ஊர்ந்துசெல்லும் ஒரு பிராணி.
*பஞ்சகம்* - ஐந்தின் கூட்டம்.
*பஞ்சகலியாணி* - நான்கு கால்களிலும் முகத்திலும் வெண்மை நிறமுள்ள குதிரை.
*பஞ்சடைதல்* - பார்வை மங்குதல்.
*பஞ்சணை* - பஞ்சுமெத்தை.
*பஞ்சம்* - கருப்புக்காலம்,
*பஞ்சரம்* - பறவை யடைக்கும் கூடு, கூடு.
*பஞ்சவன்* - பாண்டியன்.
*பஞ்சாங்கம்* - காலக்குறிப்பு
*பஞ்சாயத்தார்* - கிராமங்களில் நியாயம் தீர்ப்போர்.
*பஞ்சாய்* - கோரை வகை.
*பஞ்சானனம்* - சிங்கம்.
*பஞ்சி* - பஞ்சு, வெண்துகில், செம்பஞ்சுக் குழம்பு.
*பஞ்சு* - பருத்தி, சீலே, திரி, சூதாட்டத்தில் வழங்கும் குழூஉக்குறி.
*பஞ்சுரம்* - ஒரு பண்.
*பஞ்சை* - ஏழை, அற்பத்தனமுள்ளவன்.
*பஞ்ஞிலம்*-மக்கள் தொகுதி.
*படகம்* - பறைவகை, பரண், கவரிமா.
*படகு* - ஓடம்.
*படங்கம்* - கூடாரம்.
*படங்கு* - ஆடை, கூடாரம், திரை, மேற்கட்டி, பெருங்கொடி.
*படப்பு* - வைக்கோற்போர், கொல்லே.
*படப்பை* - தோட்டம், கொல்லே, ஊர்ப்புறம், பசுக்கொட்டில்.

*படப்பொறி*-பாம்பின் படத்திலுள்ள புள்ளி.

*படம்*- ஆடை, பாம்பின் படம், சட்டை, போர்வை, திரைச்சீலை, கொடி, யானை முகபடாம், காற்றாடி.

*படர்* - வருத்தம், நினைவு, தூதர், ஏவலாளர், தேமல், பகை, ஒழுக்கம், யமதூதர்.

*படர்தல்* - பரவுதல், ஓடுதல், பெருகுதல், வருந்துதல்,

*படலம்* – கூட்டம், மேற்கட்டி, நூற்பிரிவு, பரப்பு, அடுக்கு.

*படலிகை* - கண்ணேய், பூப்புட்டில், பெரும்பேர்க்கு.

*படலை* - பரந்த இடம், இலைமாலை, தழை, கூட்டம், படல்.

*படலைமாலை* - இலையும் பூவும் கலந்து தொடுத்த மாலை.

*படல்* - முள் அடைப்பு, பொருந்துதல்.

*படவன்* - படகோட்டி.

*படாகை* - கொடி, கூட்டம்.

*படாம்*-திரைச்சீலை, கூடாரம், யானை முகபடாம்.

*படார்* - சிறுதூறு.

*படி* - படிக்கட்டு, அளவு கருவி, நிலை, அங்கவடி, நித்திய கட்டளை, விதம், வகை, பிரதி, பூமி, தகுதி, உருவம்.

*படிகம்* - பளிங்கு.

*படிகால்* - தலைமுறை.

*படிகை*-யானைமேலிடுந் தவிசு.

*படிக்கலம்* – எச்சில் உமிழும் பாத்திரம்.

*படிக்காசு*- தினச்செலவுக்குக் கொடுக்கும் பணம்.

*படிக்கால்* - ஏணி.

*படிச்சந்தம்* –ஒத்த உருவம்.

*படிதம்* - துதி, மாணிக்கம்.

*படிதல்* - குளித்தல், மூழ்குதல், அடித்தங்குதல், கீழ்ப்படிதல், தணிதல், படர்தல்.

*படித்தல்* - வாசித்தல், கற்றல், சொல்லுதல், துதித்தல்.

*படிப்பினை* - புத்திமதி, அனுபவம்.

*படிப்பு* - கல்வி, வாசிப்பு.

*படிப்புறம்* – கோயிற்பூசாரி கட்கு விடப்படும் மானியம்.

*படிமக்கலம்*-முகம்பார்க்கும்

*படிமத்தாள்* - தேவராட்டி.

*படிமத்தோன்*-தேவராளன்.

*படிமம்* - விரதம், பொம்மை, சன்னதம், படிமக்கலம்.

*படிமை* - வடிவம்.

*படியகம்* - படிக்கம்.

*படியளத்தல்*- வாழ்க்கைக்கு வேண்டும்தானியம் முதலியவற்றைக் கொடுத்தல்.

*படியெடுத்தல்* - ஒன்றைப் போல வேறொன்றை உண்டாக்குதல்.

*படியோர்* - பகைவர்.

*படிவம்*-உருவம், தவவேடம், வழிபடுந்தெய்வம், வடிவழகு, விரதம்.

*படிவர்* -

*படிறன்* - பொய்யன், கொடியன்.
*படிறு* - வஞ்சகம், திருட்டு, கொடுமை, பொய், பாவம்.
*படு*-கள், குளம், மடு, உப்பு, பெரிய, கொடிய, பேரறிவு.
*படுகர்*- இறங்கியேறும் வழி, பள்ளம், வயல், நீர்நிலை.
*படுகல்* - மருதநிலம்.
*படுகளம்* - போர்க்களம்.
*படுகால்* - ஏணி.
*படுகுழி* - பெருங்குழி.
*படுகை* - ஆற்றங்கரைச் சோலை, நீர்நிலை.
*படுக்காளிலி* - போக்கிரி.
*படுதம்* - கூத்துவகை.
*படுதல்* - பொருந்துதல், தோன்றுதல், இறத்தல், மொய்த்தல், அகப்படுதல், அழிதல், சாய்தல், ஒத்தல், வீழ்தல், துன்புறுதல்.
*படுத்தல்* - செய்தல், நிலை பெறச் செயதல், பூசுதல், பரப்புதல், அழித்தல், வீழச் செய்தல்,தாழ்த்துதல், கிடத்தல்.
*படுத்துதல்* - துன்பஞ் செய்தல்.
*படுபனை* - காய்க்கும்பனை.
*படுபாவி*-மிகக்கொடியவன்,
*படுபொருள்* - புதையல், மிதந்த பொருள், தேடிய பொருள், நிகழ்வது.
*படுமுறை* - குற்றம், தண்டனை.
*படுவி* - குட்டையானவள், கற்பில்லாதவள்.
*படுவை* - தெப்பம்.
*படை* - சேனை, ஆயுதம், கருவி, அடுக்கு, கலப்பை, குதிரைக்கலனை, படுக்கை, நித்திரை.
*படைக்கலத் தொழில்* - ஆயுதங்களைக் கண்டு போரிடும் தொழில்.
*படைக்கலம்* - ஆயுதம்.
*படைச்சால்* - உழவு சால்.
*படைஞர்* - படைவீரர்.
*படைத்தல்*-உண்டாக்குதல், பெற்றிருத்தல், பரிமாறுதல், நிவேதித்தல்.
*படைத்து மொழிதல்* - கற்பித்துச் சொல்லுதல்.
*படைப்பற்று* - பாசறை, பாளையம்.
*படைப்பு*-சிருட்டி, உண்டாக்கப்பட்டது, பெறுகை, நிவேதனம், செல்வம், காடு.
*படைமடம்* - போர் நெறியினின்று தவறுதல்.
*படையல்* - தெய்வத்திற்குப் படைக்கும் உணவு.
*படையாட்சி* - வீரன், ஒரு சாதியாரின் பட்டப்பெயர், வீரச் செயல்.
*படைவகுப்பு* - அணிவகுப்பு.
*படைவீடு* - பாசறை, ஆயுதச் சாலை, இராசதானி, முருகக் கடவுளின் இருப்பிடம்.
*பட்சணம்* - சிற்றுண்டி, உண்ணுதல்
*பட்சணி* - உண்போன்.

*பண்ணிகாரம்* - பலபண்டம், தின்பண்டம்.
*பண்ணியம்* - இசைக்கருவி, பண்ணிகாரம், பண்டம், விற்கப்படும் பொருள்,
*பண்ணுரை* - புனேந்துரை.
*பண்ணுவன்* - குதிரைப் பாகன்.
*பண்ணுறுத்தல்* - அலங்கரித்தல், ஆயத்தம் செய்தல், நுகத்தில் பூட்டுதல்.
*பண்ணை* - வயல், மருதநிலம், தோட்டம், நீர்நிலை, விளையாட்டு, மகளிர் கூட்டம், தொகுதி, துயிலிடம், ஒரு வகைக் கீரை, ஓடை.
*பண்படுதல்* - சீர்திருந்துதல்.
*பண்பாளன்* - நற்குணமுடையவன்.
*பண்பி* - பண்பை உடைய பொருள்.
*பண்பு* - குணம், அழகு, முறை, செய்கை.
*பண்புரைப்பார்* - தூதர்.
*பதகம்* - பறவை, பாதகம்.
*பதகர்* - பாதகர்.
*பதக்கம்* - தொங்கும் கழுத்தணிவகை
*பதக்கு* - இரண்டு குறுணி யளவு.
*பதங்கம்* - பறவை, விட்டில், மருந்துச் சரக்கு வகை.
*பதங்கன்* - சூரியன்.
*பதநீர்* - இனிப்புக் கள், கரும்பு நீர்.
*பதடி* - பதர், பயனற்றவன்.
*பதப்பர்* - மணற்கோட்டை.
*பதணம்* - மதிலுள் மேடை, மதில்.
*பதமுத்தி* - இந்திரன்முதலிய தேவர் பதவிகள்.
*பதம்* - பதவி, மொழி, பக்குவம், உணவு, ஈரம், கள், இனிமை, இசைப்பாட்டு, பொழுது, கூர்மை, கால், நாளிலொன்று, பூரட்டாதி.
*பதயுகம்* - இரண்டு பாதங்கள்.
*பதரி* - இலந்தை.
*பதர்* - தானியம் இல்லாத நெல் பயனற்றவன்.
*பதலை* - மலை, ஒரு கண் பறை, கோபுரக் கலசம், தாழி,
*பதவம்* - அறுகு.
*பதவி* - நிலை, முத்திநிலை, புண்ணியலோகம், அமைதியுள்ளவள்
*பதவு* - அறுகு, புல், புன்மை.
*பதவை* - வழி.
*பதறுதல்* - கலங்குதல், அவசரப்படுதல்.
*பதற்றம்* - முன்பின் யோசிக்காமல் அவசரப்படுதல்.
*பதனம்* - பாதுகாப்பு, அமைதி:
*பதாகினி* - சேனை.
*பதாகை* - விருதுக்கொடி, பெரியகொடி.
*பதாதி* - காலாட் படை, சிறிய அளவுள்ள ஒரு சேனைத் தொகுதி.
*பதார்த்தம்* - பண்டம்.

*பதி* - தலைவன், கடவுள், ஊர், பதிகை, அரசன், கணவன், கோயில், குதிரை, நாற்று.
*பதிகம்* - பாயிரம், பத்துப் பாடல்கள் கொண்ட தொகுதி.
*பதிஞானம்* - கடவுளைப் பற்றிய அறிவு.
*பதிதல்* - அழுந்துதல், தங்குதல்,
*பதிதன்* - ஒழுக்கம் தவறியவன்.
*பதித்தல்* - அழுத்துதல், இழைத்தல், குழிசெய்தல்.
*பதிப்பு* - அச்சிட்ட நூல்.
*பதியம்* - நாற்று.
*பதிவு* - மறுமொழி, விடை.
*பதிவிரதை* - கற்பு வாய்ந்தவள்.
*பதிவிருத்தல்* - ஒளிந்திருத்தல்.
*பதிவு* - அழுந்துகை, தணிவு, குறித்தல்.
*பதுக்குதல்* - ஒளித்து வைத்தல்.
*பதுக்கை*-கற்குவியல், மணற்குன்று, பாறை, சிறுதூறு.
*பதுங்குதல்* - ஒளிதல், பதிவிருத்தல்.
*பதுமநிதி* - தாமரை வடிவமான ஒரு பொக்கிஷம்.
*பதுமம்* - தாமரை, புராணத்தொன்று, கோடா கோடி, முடியுறுப்புவகை, ஒரு நிதி.
*பதுமினி* - தாமரைச்சாதிப் பெண்.
*பதுமை* - பொம்மை, திருமகள், விக்கிரகம், காளி.
*பதைத்தல்* - துடித்தல், ஆத்திரமடைதல்.
*பத்ததி* - வழி, ஒழுங்கு, ஆகமக்கிரியைக்கு வழி காட்டும் நூல்.
*பத்தர்* - அடியார், யாழின் குடப்பாகம், குடுக்கை, தொட்டி.
*பத்தல்* - குழி, பத்தர், நீர் இறைக்கும் கருவி.
*பத்தனம்* - பட்டணம்.
*பத்தா* - கணவன்.
*பத்தாசு* - படகு.
*பத்தாயம்* — தானிய மிட்டு வைக்கும் குதிர்.
*பத்தி* - வரிசை, கடவுளிடம் வைக்கும் அன்பு, வீட்டின் சிறப்பு, அலங்கார வேலைப்பாடு, யானையின் நடை.
*பத்திமை* - பத்தி.
*பத்தியம்*-மருந்துக்குத் தக்கவாறு உண்ணப்படும் உணவு, செய்யுள் வகை, இதமானது, பூவாது காய்க்கும் மரம், கடுக்காய்.
*பத்திரம்* -இலை, பாதுகாப்பு, தாள், சாஸனம், அம்பு, அழகிய உருவம்.
*பத்திரி* - அம்பு, இலை, குதிரை.
*பத்திரிகை* - செய்தித்தாள்.
*பத்தினி* - மனைவி, கற்புடையவள்.
*பந்தணம்* - பந்து

*பந்தம்* - கட்டு, நிவர்த்தி, சம்பந்தம், பாவின்தளை, பற்று, உறவு.
*பந்தயம்* - போட்டி, போட்டிப் பொருள்.
*பந்தர்* - பந்தல், பண்டசாலை, ஓலக்கமண்டபம்.
*பந்தல்* - பந்தர்.
*பந்தனம்* - கட்டு, கட்டுகை.
*பந்தனை* - கட்டு, பத்தி.
*பந்தி* - வரிசை, ஒழுங்கு, குதிரை யானை இவற்றைக் கட்டுமிடம், உண்பவர் வரிசை.
*பந்திபோசனம்* - ஒன்றாக இருந்து உண்ணுதல்.
*பந்து* - உருண்டை வடிவமான விளையாட்டுக் கருவி, உறவினர், சுருள், நீர் வீசும் கருவி.
*பப்படம்* - அப்பளம்.
*பப்பாதி* - சமமான பாதி
*பப்பாளி* - செடிவகை.
*பப்பு* - பருப்பு, ஒப்பு.
*பம்* - [illegible]
*பம்பரம்* - ஒரு விளையாட்டுக் கருவி.
*பம்பல்* - துளி, பரந்தவடிவம், பொலிவு.
*பம்புதல்* - செறிதல், ஒலித்[illegible] எழுதல், பரவுதல், [illegible]
*பம்பை* - ஒருவகைப் பறை, பறட்டைமயிர்.
*பம்மல்* - கவிதல், மூடுதல்.
*பம்முதல்* - மூடுதல், செறிதல்.
*பயங்கரம்* - அச்சம் உண்டாக்[illegible]
*பயத்தல்* - விளைத்தல், பெறுதல், பசத்தல், கொடுத்தல், பலித்தல்.
*பயந்தோர்* - பெற்றோர்.
*பயப்படுதல்* - அஞ்சுதல்.
*பயம்* - அச்சம், நீர், பால், அமுதம், பயன்.
*பயம்பு* - பள்ளம், யானையை அகப்படுத்தும்குழி, வசம்பு, நீர்நிலை.
*பயறு* - தானியவகை, சித்திரை.
*பயன்* - பொருள், பிரயோசனம்
*பயானகம்* - பயம்.
*பயிக்கம்* - பிச்சை.
*பயித்தியம்* - பித்து.
*பயிரிடுதல்* - நிலத்தில் பயிர்களை உண்டாக்குதல், விலங்குகளை அவ்வவற்றின் ஒலிக்குறி காட்டி அழைத்தல்.
*பயிரிலி* - தரிசு நிலம்.
*பயிர்* - தானியப்பயிர், ஒலி, வாத்தியம், விலங்கு அழைக்கும் ஒலிக்குறிப்பு, பறவைக் குரல், செய்கை.
*பயிர்ப்பு* - அருவருப்பு, பிசின்.
*பயிர்தல்* - விலங்குகளை ஒலி செய்துஅழைத்தல், அழைத்தல், இசைத்தல்.
*பயிர்த்தல்* - அருவருத்தல்.
*பயிலல்* - எடுத்தலோசை.
*பயிலுதல்* - பழகுதல், நெருங்குதல், கற்றல், அழைத்தல், ஒலித்தல், நடமாடுதல், நிகழ்தல்.

*பயில்வு* - இருப்பு.
*பயிற்சி* - பழக்கம்.
*பயிற்றுதல்* -பழக்குதல், கற்பித்தல், பலகால் கூறுதல், செய்தல்.
*பயினன்* - ஆதிசேடன்.
*பயினி* - கூடுகை, மரவகை.
*பயின்* - பிசின், சுக்கான், பாலேடு.
*பயோததி* - பாற்கடல்.
*பயோதரம்* - முலை, கடல், மேகம்.
*பரகதி* - மோக்ஷம்.
*பரகீயம்* - பிறர்க்குரியது.
*பரக்கழி* - பெரும்பழி.
*பரக்குதல்* - அலைந்து திரிதல்.
*பரசியம்* -எல்லாரு மறிந்தது.
*பரசு* - மழு, கோடரி, மூங்கில்.
*பரசுகம்* - மோக்ஷவின்பம்.
*பரசுதல்* - துதித்தல்.
*பரசை* - சிறிய ஓடம்.
*பரஞானம்* - கடவுளைப் பற்றிய அறிவு.
*பரடு* - கணு.
*பரட்டையம்* - ஓட்டுச் சல்லடம்.
*பரணி* - பிரபந்தவகை, ஒரு நக்ஷத்திரம், சிமிழ், அடுப்பு.
*பரண்* -காவல்மேடை, மேலிடம்.
*பரதநாட்டியம்* -சதிராட்டம்.
*பரதந்திரியம்* - பிறரைச் சார்ந்து வாழ்தல்.
*பரதம்* - கூத்து, நாடகத் தமிழ் நூல், ஒரு பேரெண்.
*பரதர்*-செம்படவர், தீயோர், கூத்தர், கடலோடிகள்.
*பரதவர்* - நெய்தல் நிலமக்கள், தமிழ் நாட்டுக் குறுநில மன்னருள் ஒரு சாரார்.
*பரதவித்தல்* - மிக வருந்துதல், இரங்குதல்.
*பரதேசி* - அயல் நாட்டான், கதியற்றவன், சந்நியாசி.
*பரத்தல்* - பரவுதல், அலைதல்.
*பரத்தன்* - பரத்தையரிடம் செல்வோன்.
*பரத்தி* - நெய்தல் நிலப் பெண்.
*பரத்திரயம்* - கற்கள்.
*பரத்துதல்* - விரித்தல்.
*பரத்துவம்* - கடவுட்டன்மை, முதன்மை, மேன்மை.
*பரத்தை* - பொதுமகள், அயன்மை.
*பரத்தைமை* - பரத்தையரொழுக்கம், பரத்தையைச் சேரும் ஒழுக்கம்.
*பரந்நியாசம்* - தெய்வத்திடம் அல்லது குருவிடம் ஆன்ம பாரத்தை வைத்தல்.
*பரபூர்வை* - மறுமணம் செய்தவள்.
*பரப்பாழ்* - வானவெளி.
*பரப்பிரமம்* - முழுமுதற் கடவுள்.
*பரப்பு* - இடவிரிவு.
*பரப்புதல்* - பரவச்செய்தல்.
*பரமகாரணன்* - கடவுள்.

*பரமகுரு* - முத்திநிலை யுபதேசிக்கும் குரு.

*பரமண்டலம்* - வேற்றுநாடு,

*பரமம்* - சிறப்பு.

*பரமன்* - கடவுள்.

*பரமாணு* - மிகச்சிறிய அணு.

*பரமார்த்தம்* - மேலான பொருள், மோக்ஷம்.

*பரம்* - மேலானது, மேலுலகம், கடவுள், அன்னியம், சார்பு.

*பரம்பரை* - தலைமுறைத் தொடர்பு.

*பரம்பு* - உழுத சமப்படுத்தும் பலகை, வரம்பு.

*பரம்படித்தல்* - பரம்புச் சட்டத்தால் நிலத்தைச் சமப்படுத்தல்.

*பரர்* - பகைவர்.

*பரல்* - பருக்கைக்கல், வித்து, சிலம்பில் ஓசையுண்டாக்குவதற்காக இடப்படும்

*பரவசம்* - மிகுந்த களிப்பு, தன் வசம் இழத்தல், பராக்கு.

*பரவர்* - செம்படவர்.

*பரவல்* - பரப்புதல், துதித்தல்.

*பரவுதல்* - துதித்தல், புகழ்தல்.

*பரவாதி* - வேற்று மதத்தவன்.

*பரவுக்கடன்* - நேர்த்திக் கடன்.

*பரவெளி* - ஞானாகாசம், கடவுள்.

*பரவை* - கடல், பரப்பு, ஆடல்.

*பரவை வழக்கு* - உலக வழக்கு.

*பரன்* - கடவுள், அன்னியன், மேலானவன், ஆன்மா.

*பரஸ்பரம்* - ஒருவருக்கொருவர்.

*பராகம்* - பொடி, மகரந்தம்.

*பராக்கிரமம்* - வீரம், வல்லமை.

*பராக்கு* - கவனமின்மை, கட்டியங் கூறும் சொல்.

*பராங்கதி* - மோக்ஷம்.

*பராதீனம்* - சுதந்தரமின்மை.

*பராபரன்* - கடவுள்.

*பராபவம்* - தோல்வி.

*பராமரித்தல்* - ஆதரித்தல், பாதுகாத்தல்.

*பராமரிப்பு* - பராமரித்தல்.

*பராமுகம்* - அலக்ஷியம்.

*பராரி* - ஓடிப்போனவன்.

*பராரை* - பருத்த அடிமரம், விலங்கின் பருத்த தொடை.

*பரார்த்தம்* - பிறர் பொருட்டானது, ஒரு பேரெண்.

*பராவுதல்* - புகழ்தல், வணங்குதல்.

*பரி* - குதிரை, வேகம், அசுவதி, பாதுகாத்தல், சுமை, செலவு, ஓரிடைச்சொல்.

*பரிகம்* - மதில், ஓர் இருப்பாயுதம்.

*பரிகரம்* - உபகரணம், பரிவாரம், செய்யுளணி வகை, கட்டில்.

*பரிகரித்தல்* - நீக்குதல், நோயைக் குணப்படுத்தல்,

*பரிகலசேடம்* -ஞானாசிரியன் உண்ட மிச்சம்.

*பரிகலபரிச் சின்னங்கள்* - எடுபிடி முதலியவற்றைக் கொண்டு செல்லும் பணியாளர்.

*பரிகலம்*-பெரியோர் உண்டு மிகுந்தது, பரிவாரம், பேய்க் கூட்டம்.

*பரிகாசம்* — கேலி, விளையாட்டு.

*பரிகாரம்* - நீக்குகை, கழுவாய், வைத்தியம், கேடு நீங்கும் வழி, பொருள்கள், வழுவமைதி.

*பரிகாரி* - வைத்தியன்.

*பரிகை* - அகழி, மதில் மேடை.

*பரிக்காரர்* - குத்துக்கோற் காரர்.

*பரிக்கிரகத்தார்* — ஊர்ச் சபையார்.

*பரிக்கிரகம்* - ஊர்ச்சபை.

*பரிக்கை* - தாங்குகை.

*பரிசம்* - தொடுதல், தொட்டு உணரும் அறிவு, மணமகளுக்கு மணமகன் வீட்டார் அளிக்கும் பொருள்கள்.

*பரிசயித்தல்* - பழகுதல்.

*பரிசனம்*-பரிவாரம், சுற்றம், ஏவலாட்கள், தொடுதல்.

*பரிசனவேதி* - தாழ்ந்த உலோகங்களைப் பொன்னாக்குதற்குரிய மருந்துப் பொருள்கள்.

*பரிசனன்* - காற்று.

*பரிசனை* — பழக்கம்.

*பரிசாரகம்* - சமையல் தொழில், ஏவல் தொழில், வணக்கம்.

*பரிசாரம்* - பரிசாரகம்.

*பரிசித்தல்* - தொடுதல்.

*பரிசிலர்* - இரப்போர்.

*பரிசில்* - கொடை.

*பரிசீலனை* - ஆராய்ச்சி.

*பரிசு* - கொடை, தன்மை, விதம், பெருமை, விதி.

*பரிசுத்தம்* - தூய்மை.

*பரிசை* - கேடகம்.

*பரிச்சயம்* - பழக்கம்.

*பரிச்சேதம்* - எல்லை, துண்டித்தல்.

*பரிட்டணம்* - பறவை வட்டமிடுதல்.

*பரிணதன்* - கற்றோன்.

*பரிணமித்தல்*-நிலைமாறுதல்.

*பரிணயம்* - திருமணம்.

*பரிணாமம்* - ஒன்று மற்றொன்றாக மாறுதல்.

*பரிதபித்தல்* - துக்கித்தல், இரங்குதல்.

*பரிதல்* - இரங்குதல், வருந்துதல், ஓடுதல்.

*பரிதாபம்* - துக்கம், இரக்கம்.

*பரிதானம்* - இலஞ்சம்.

*பரிதி* — சூரியன், வட்ட வடிவு, பரிவேடம், தேருருளை, சக்கராயுதம், ஒளி, ஓமாக்கினியைச் சுற்றியிடும் தருப்பை.

*பரித்தல்* - சுமத்தல், பாதுகாத்தல், தரித்தல், சூழ்தல்.

*வரைச்சிலம்பு* - மலைச்சாரல்.
*வரைதல்* - எழுதுதல், நிர்ணயித்தல், அளவுபடுத்தல், நீக்குதல், மணம்புரிந்து கொள்ளல்.
*வரைபாய்தல்* - மலையுச்சியினின்று விழுதல்.
*வரைப்பு* - எல்லை, மதில், குளம், உலகம், எழுதுதல்.
*வரையரமகளிர்* - மலைவாழ் தெய்வமகளிர்.
*வரையரையன்* - இமயமலை.
*வரையறை* - அளவு, எல்லை.
*வரையாவீகை* - பெருங்கொடை.
*வரைவின்மகளிர்* - பரத்தையர்.
*வரைவு* - எல்லை, திருமணம், எழுதல், நீக்கம்.
*வர்க்கம்* - வருக்கம்.
*வர்ச்சியம்* - விலக்கப்பட்டது.
*வர்ணம்*-நிறம், சாதி, எழுத்து, பாட்டுவகை.
*வர்ணியம்* - உவமேயம்.
*வர்த்தகன்* - வியாபாரி.
*வர்த்தமானம்* - வருத்தமானம்.
*வர்த்தமானர்* - தீர்த்தங்கரருள் ஒருவர்.
*வர்த்தனம்* - பெருகுதல், தாபித்தல்.
*வர்த்தித்தல்* - உள்ளாதல், தங்குதல், பெருகுதல்.
*வர்மம்* - உட்பகை.
*வலக்காரம்*-வெற்றி, பொய், தந்திரம், பலவந்தம்.
*வலங்கொள்ளுதல்* - வலம் வருதல், வெற்றிகொள்ளுதல்.
*வலசாரி* - வலமாகச் சுற்றி வருதல்.
*வலசை*-வேற்று நாட்டுக்குக் குடிபோதல், கூட்டம்.
*வலது*-வலதுபக்கம், வெற்றி.
*வலத்தல்*-தொடுத்தல், சுற்றுதல், பிணைத்தல்.
*வலம்*-வலதுபக்கம், வலிமை, வெற்றி, ஆணை.
*வலம்புரி* - வலமாகச் சுழியுள்ள சங்கு, தலைக்கோலவகை, நந்தியாவட்டம், அபிநய வகை.
*வலயம்*-வட்டம், சுற்றிடம், வட்டமான பொருள், கடல், கேயூரம், தோட்டம்.
*வலவன்* - வெற்றி பெற்றவன், தேர்ப்பாகன், திருமால்.
*வலவை* - வல்லவள், காளி, இடாகினி, நாணமில்லாதவர், வஞ்சப் பெண்.
*வலன்* - வலம்.
*வலாகம்* } கொக்கு.
*வலாகு* }
*வலாரி* - இந்திரன்.
*வலார்* - வளார்.
*வலாற்காரம்* — பலவந்தம்.
*வலி* - வன்மை, பலவந்தம், வல்லெழுத்து, பற்றுக்கோடு, நோவு, வலிப்பு நோய், இழுத்தல், சபதம்.
*வலிதல்*-முயலுதல், திண்ணியதாதல், தானாக முன் வந்து செய்தல், மீறுதல்.

*வலித்தல்* - இழுத்தல், நோவுண்டாதல், பலவந்தப் படுத்துதல், மெல்லெழுத்தை வல்லெழுத்தாக்குதல், துணிதல், நினைத்தல்.

*வலிந்து கொள்ளுதல்* - இடர்ப்பட்டுப் பொருள் கொள்ளுதல், பலவந்தமாய்க் கைப்பற்றல்.

*வலிப்பு* - நோய்வகை, நிலைபேறு, வருத்தம்.

*வலிமை* - பலம்.

*வலியன்*-கரிக்குருவி, வலிமையுள்ளவன்.

*வலீநகம்* - தாழை.

*வலீமுகம்* - குரங்கு.

*வலு* – வலிமை, உறுதி.

*வலுத்தல்* - உறுதியாதல், மிகுதியாதல்.

*வலை*-உயிர்களை அகப்படுத்து தற்குரிய கருவி, சூழ்ச்சி.

*வலைச்சி*-செம்படவப்பெண்.

*வலைஞர்* - செம்படவர்.

*வல்* - வலிமை, சூதாடு கருவி, மேடுகச்சு, மரப்பட்டை.

*வல்கி* - சோறு, அரிசி நெல்.

*வல்மீகம்* - புற்று, ஆனைக் கால் நோய்.

*வல்லகி*-தளிர், பூங்கொத்து.

*வல்லடி*-துன்பம், கொடுமை, பலவந்தம்.

*வல்லடி வழக்கு* - அநியாய வழக்கு.

*வல்லபம்* - வல்லமை, கொடுஞ் செயல், அருஞ் செயல்.

*வல்லபன்* - கணவன், சமர்த்தன், வலிமையுள்ளவன்.

*வல்லமை*-வலிமை, சமர்த்து.

*வல்லயம்* - ஈட்டி வகை.

*வல்லரி* - பசுங்காய், காய்க்குலை, பூங்கொத்து.

*வல்லாங்கு* - இயன்ற அளவு

*வல்லாட்டு* - குறும்பு.

*வல்லாண்மை* - பேராற்றல்.

*வல்லாரை* - செடி வகை, கேட்டை.

*வல்லான்* - வலிமையுடையவன், சமர்த்தன், சூதாடுபவன்.

*வல்லி*-கொடி, இளம்பெண், அகவிதழ், கால்விலங்கு.

*வல்லிகம்* - மிளகு.

*வல்லியம்*-புலி, இடைச்சேரி.

*வல்லீகம்* - பெருங்காயம்.

*வல்லுநர்* - வல்லவர்.

*வல்லுவம்*- வெற்றிலைப் பை.

*வல்லுளி* - பன்றி.

*வல்லூகம்* - கரடி, ஆண் குரங்கு.

*வல்லூறு* - இராசாளி.

*வல்லே* - விரைவாக.

*வல்லேறு* - இடி.

*வல்லை* - பெருங்காடு, விரைவாக, மேடு, வட்டம், வலிமை.

*வல்விலங்கு* - யானை.

*வல்வினை* - தீவினை, கொடுந் துயர்.

*வவ்வுதல்* – கவர்தல், பற்றுதல்.

*வழகு* - மென்மை.

*வழக்கம்* - பழக்கம்.

*வழக்கழிவு* - நியாயவிரோதம்
*வழக்கறிஞன்* - நியாயவாதி.
*வழக்கறுதல்* - வழக்கத்தினின்று நீங்குதல்.
*வழக்காடுதல்* - வாதாடுதல்.
*வழக்காறு* - உலக வழக்கு.
*வழக்கியல்* - உலக வழக்கு.
*வழக்கு*-உலக வழக்கு, செய்யுள் வழக்கு, இயங்குதல், நீதிக்குக் கொணர்தற்குரிய செய்தி, செய்கை, ஒழுக்கம், நீதி.
*வழங்காத்தேர்*-பேய்த்தேர்.
*வழங்குதல்* – கொடுத்தல், இயங்குதல், சொல்லுதல், நடைபெறுதல், உலாவுதல், கூத்தாடுதல், கொண்டாடுதல், செல்லுதல்.
*வழலை* - புண்ணினின்று வடியும் நீர், பாம்பு வகை,

*வழாஅல்* – வழக்குதல், தவறு.
*வழாநிலை* - இலக்கண விதியினின்றும் தவறாத நிலைமை.
*வழி* - பாதை, உபாயம், சுற்றம், சந்ததி, பின்பு, இடம், முறைமை, சுவடு, இடம்.
*வழிக்கொள்ளுதல்* - பின்பற்றிச் செல்லுதல், பிரயாணம் செய்தல்.
*வழிச்செலவு* - பயணம், பயணத்தில் செலவுக்கு வேண்டிய பணம்.
*வழிதுறை* - உபாயம்.
*வழித்தொண்டு* - பரம்பரை அடிமை.
*வழிநிற்றல்* - ஏவல் செய்தல்.
*வழிபடுதல்* - பின்பற்றுதல், வணங்குதல்.
*வழிபாடு* - வணக்கம்.
*வழிப்படுத்தல்* - சீர்திருத்துதல்.
*வழிப்புரை* - வழியில் தங்குமிடம்.
*வழிப்போக்கன்* - பிரயாணி.
*வழிமுதல்* - குல முதல்வன், வழிபடு கடவுள்.
*வழிமுறை* - சிரமம், சந்ததி, பிறகு.
*வழிமொழிதல்* - வழிபாடு கூறுதல், அனுசரித்துக் கூறுதல்.
*வழியடை* - இடையூறு, தாயத்தின்பின் உரிமையுடையவன்.
*வழியளவை* - அனுமானப் பிரமாணம்.
*வழியிலார்* - சந்ததியினர்.
*வழியுரைத்தல்*-தூது சொல்

*வழியெஞ்சுதல்* - வமிசம் அற்றுப்போதல்.
*வழிவகை* - உபாயம், இடம் பொருள் ஏவல்.
*வழிவழி* - பரம்பரையாக.
*வழு* - குற்றம், பழிப்புரை.
*வழுக்கம்* - தவறு.
*வழுக்கல்* - சறுக்குதல், வழுக்கு நிலம்.
*வழுக்கு* - தவறுதல், கொழுப்பு, தீங்கு, சறுக்கு

***வழுக்கை***-மொட்டை, இளந் தேங்காயின் உள்வீடு.

***வழுதி*** - பாண்டியரது பட்டப்பெயர்.

***வழுது*** - பொய்.

***வழுதுணை*** } ***வழுதுணங்காய்*** } கத்தரிக்காய்.

***வழுத்தரல்***-சிறந்து போதல்.

***வழுத்துதல்*** - துதித்த வாழ்த்துதல், ம [illegible]

***வழுநிலை*** - தவறியநிலைமை.

***வழுநீர்*** - கண்பீளை.

***வழும்பு*** - நிணம், குற்றம், தீங்கு, அழுக்கு.

***வழுவமைதி*** - இலக்கண வழுவாயினும் தகுதியுடைய தென்று கொள்ளுகை.

***வழுவாய்***- பாவம், தவறுதல்.

***வழூஉ*** – குற்றம்.

***வழை*** - சுரபுன்னை, இளமை, புதுமை.

***வழைச்சு***-புதுமை, இளமை.

***வளகு*** - நீண்டமரவகை.

***வளப்பம்*** - வழக்கம், செழிப்பு.

***வளப்பாடு*** - பெருக்கு.

***வளமை***-செழிப்பு, பொருள், வழக்கு.

***வளம்*** - செழுமை, செல்வம், தகுதி, மிகுதி, பயன், வருவாய், அழகு, பதவி.

***வளர்தல்*** - பெரிதாதல், மிகுதல், உறங்குதல், தங்குதல்.

***வளர்த்தல்*** - பாதுகாத்தல், பெருக்குதல்.

***வளவன்*** - சோழன், வேளாளன்.

***வளவு*** - வீடு, வீட்டுப்புறம்.

***வளா*** - பரப்பு.

***வளாகம்*** - இடம், உலகம், பரப்பு, தினைப்புனம், தேசம்.

***வளார்*** - இளங்கொம்பு.

***வளாவுதல்*** - கலத்தல், அளவளாவுதல்,சூழ்தல்,மூடுதல்.

***வளி*** - சுழல்காற்று, உடல் வாதக்கூறு.

***வளிசம்*** - தூண்டில்.

***வளிநிலை*** - கும்பகம்.

***வளிமகன்***-அநுமான், வீமன்.

***வளை*** - சங்கு, சக்கராயுதம், வங்கு, கைவளை, சுற்றிடம்.

***வளைதடி*** - எறியாயுதவகை.

***வளைதல்*** - சூழ்தல், கோணுதல், தோற்றல்,வருந்துதல்.

***வளைநீர்*** - கடல்.

***வளையம்***-வட்டம், சாமரைச் சுருள், வட்டமான பொருள்.

***வளையல்*** - மகளிர் கையணி வகை.

***வள்*** - வளம், பெருமை, வலிமை, கூர்மை, வாளுறை, கடிவாளம், படுக்கை.

***வள்ளம்*** - வட்டில் வகை, [illegible] காண் [illegible]

***வள்ளல்*** - பெருங்கொடையாளி.

***வள்ளி*** - கொடி, குறிஞ்சிப் பண், சந்திரன், முருகன் மனைவி, கைவளை, குறிஞ்சி நிலப்பெண், மகளிர் வெறியாடுதலைக்கூறும்புறத்துறை

- குறிஞ்சி நிலப்பெண்கள் ஆடும் கூத்து.
*வள்ளித்தண்டை* - பிரப்பங் கேடகம்.
*வள்ளியம்*-மரக்கலம், குழல், மெழுகு.
*வள்ளூரம்* - பசுந்தசை.
*வள்ளுவன்* - நிமித்திகன், வள்ளுவக்குடியினன், திருவள்ளுவர்.
*வள்ளை* - உலக்கைப் பாட்டு, கொடிவகை.
*வறங்கூர்தல்* - பஞ்சம் மிகுதல், மழை பெய்யாது போதல், இல்லாமற் போதல்.
*வறடு* - வறட்சி.
*வறட்சி* - நீர்ப்பசையற்றது.
*வறட்டி* - தட்டிக்காய்ந்த சாணம்.
*வறத்தல்* - காய்தல், சுருங்குதல்.
*வறம்* - வற்றுதல், பஞ்சம், கோடைக்காலம், வறுமை, பூமி.
*வறல்* - சுள்ளி, உலர்தல், வறண்ட நிலம், வறுத்தல்.
*வறள்*-வறட்சி, மணற்பாங்கு.
*வறிஞன்* - தரித்திரன்.
*வறிது*—பயனில்லாதது, சிறிது, உள்ளீடற்றது, ஒன்றுமில்லாதது.
*வறு* - குற்றம்.
*வறுகுதல்* - பிருண்டுதல்.
*வறுங்கோட்டி* - அறிவிலார் கூட்டம்.
*வறுத்தல்* - பொரியச் செய்தல்
*வறுமை*-தரித்திரம், தனிமை.
*வறுவல்* - பொரித்த கறி.
*வறை* - பொரிக்கறி.
*வற்கடம்* - வறட்சி, பஞ்சம்.
*வற்கம்* - குதிரையின் கடிவாளம்.
*வற்கலை* - மரவுரி, காவித்
*வற்குணம்* - கொடுமை.
*வற்பம்* - வன்மை, வறட்சி.
*வற்பு* - உறுதிப்பாடு.
*வற்புலம்* - மேட்டுநிலம்.
*வற்புறுத்தல்* - கட்டாயப் படுத்துதல்.
*வற்றம்* - நீர்வற்றுதல், கடல் நீர்வடிந்திருத்தல்.
*வற்றல்*-உலர்ந்தது,வறளுதல்.
*வற்று* - இயலுவது, ஒரு சாரியை.
*வற்றுதல்* - சுவறுதல், குறைதல், உலர்தல், மெலிதல், பயனற்றுப்போதல்.
*வனசம்* — தாமரை.
*வனசரம்* — காட்டுவிலங்கு, காட்டானை.
*வனசரர்* - வேடர், பாலைநில மக்கள்.
*வனசை* - இலக்குமி.
*வனச்சுவை* - புனுகு பூனை.
*வனப்பு* - அழகு, இளமை, நிறம், பெருந் தோற்றம்.
*வனம்* — துளசு, காடு, ஊர் சூழ்ந்த சோலை, அழகு, நீர், காடுபடு திரவியம்.

**வனுந்தரம்** - காட்டின் உட்பகுதி, வேறு காடு.
**வனிதை** — பெண்.
**வனைதல்**-மட்பாண்டம் செய்தல், உருவமைத்தல், அலங்கரித்தல்.
**வனோற்சாகம்** - காண்டாமிருகம்.
**வன்கண்ணன்** — கொடியோன், வீரன்.
**வன்கண்** - கொடுமை, வீரம்.
**வன்சொல்** - கடுஞ்சொல்.
**வன்பார்**-இறுகியபாறைநிலம்
**வன்பால்** — பாலைநிலம், குறிஞ்சிநிலம்.
**வன்பு** - வலிமை, கடினத்தன்மை.
**வன்மம்** - தீராப்பகை, வலிமை.
**வன்மா** - குதிரை.
**வன்மான்** - சிங்கம்.
**வன்மிகம்**, **வன்மீகம்** } புற்று, கறையான் புற்று.
**வன்மை** - வலிமை, ஆற்றல், கோபம், வல்லெழுத்து.
**வன்றி** — பன்றி.
**வன்னம்** - நிறம், அழகு, [illegible]
**வன்னி** - நெருப்பு, குதிரை, பிரமசாரி, மரவகை, கிளி.
**வன்னிகை** - எழுதுகோல்.
**வன்னிலம்** — பாறைநிலம்.

## வா - தாவுகை.

**வாகடம்** - வைத்திய நூல்.
**வாகம்**-குதிரை, சக்கரவாகப்புள், சுமப்பது, எருது.
[illegible] சீலை.
**வாகன்** - அழகுள்ளவன், கைகளை யுடையவன்.
**வாகியம்** - வெளிப்புறத்தது.
**வாகினி** - படை, படைத் [illegible]
**வாகு**-அழகு,தோள்,ஒழுங்கு.
**வாகுரம்** - வெளவால்.
**வாகுவலயம்** - தோளணி.
**வாகை** - மரவகை, வெற்றி, வெற்றி மாலை, புறத்திணையி [illegible]
**வாக்கல்** - வடிக்கப்பட்ட சோறு.
**வாக்கியம்** - முற்றுச் சொற்றொடர், சோதிட முறையுளொன்று.
**வாக்கு** - வாய், சொல், திருத்தம், புகழ்ச்சொல், பக்கம், வளைவு, அசரீரி.
**வாக்குத்தத்தம்** - உ[illegible]
**வாக்குதல்** — வார்த்தல்.
**வாக்குவாதம்** - வாய்ச் சண்டை.
**வாங்கல்** - பிறரிடமிருந்து [illegible]
**வாங்கு** - வளைவு.
**வாங்குதல்** - வளைதல், உடகொள்ளுதல், பெறுதல், இழுத்தல், நாண்பூட்டுதல், விலைக்குக் கொள்ளுதல், தழுவுதல்.
**வாசகம்** - வார்த்தை, சொற்றொடர், வசன நடை, பெரியோர் மொழி, செய்தி, செய்யுள்

*வாசம்*-இருப்பிடம், மணம்.
*வாசவன்* - இந்திரன், வாச னைப் பொருள்களை விற் பவன்.
*வாசல்* – வாயில்.
*வாசனை* – நன்மணம், ப செயற்கைக் குணம்.
*வாசாமகோசரம்* - வாக் குக்கு எட்டாதது.
*வாசாவகம்*- பேச்சுவன்மை.
*வாசி* - குதிரை, நாணயவட் டம், மூச்சு, வட்டம், வேறு பாடு, இயல்பு, தகுதி, நன் னிலை, திருவாசி.
*வாசிகம்* - வாக்கால் செய்யப் படுவது, செய்தி, தூது.
*வாசிகை* - மாலை.
*வாசிப்பு* - வாசித்தல்.
*வாசிவாரியன்* - குதிரை யைப் பழக்குவோன்.
*வாசினை* – வாசித்தல்.
*வாச்சி* - ஆடாதோடை, தச் சன் கருவிகளுள் ஒன்று.
*வாச்சியம்* - வாத்தியம், வாச கத்தின் பொருள், வெளிப் படையானது.
*வாஞ்சை* - விருப்பம்.
*வாடகை* - கூலி, சுற்றுவட் டம்.
*வாடல்* - உலர்ந்த பூ.
*வாடாவஞ்சி* - கருவூர்.
*வாடிக்கை* - வழக்கம்.
*வாடு* - வாடற்பூ, கருவாடு.
*வாடுதல்* - உலர்தல், சுருங் குதல், தோல்வியடைதல், மெலிதல்.
*வாடூன்* - உப்புக்கண்டம்.
*வாடை* - வடகாற்று, மணம், தெருச்சிறகு.
*வாட்குடி* - மறக்குடி.
*வாட்கோரை*- கோரைவகை.
*வாட்டம்* - மெலிவு, துன்பம், அனுகூலம், வளைவு.
*வாட்டு* - பொரியல்.
*வாட்டுதல்* - வருத்துதல், நெருப்பில் சுடுதல்.
*வாணம்* - பொறிபாணம், தீ.
*வாணன்* - வசிப்பவன், தேர்ச்சி பெற்றவன், ஓர் அசுரன், கார்த்திகை.
*வாணி* - சரஸ்வதி, கல்வி, அம்பு, சொல், கூத்துவகை.
*வாணிகச்சாத்து* வாணிகர் கூட்டம்.
*வாணிகம்* - வியாபாரம்.
*வாணிச்சி*-வியாபாரம் செய் பவள்.
*வாணிதம்* - கள்.
*வாணிபம்* - வாணிகம்.
*வாதகம்* - இடையூறு.
*வாதமடக்கி* - மர வகை.
*வாதம்* - வாயு, நோய்வகை, சொற்போர், இரசவாதம்.
*வாதனம்* - சீலை, வாசித்தல்.
*வாதனை* - வாசனை, துன்பம்.
*வாதாசனம்* - பாம்பு.
*வாதாடுதல்* - தர்க்கம் செய் தல்.
*வாதாயனம்* - சாளரம்.
*வாதி* - வழக்கிடுபவன்.
*வாதிகன்* - நறுமணப் பொருள், கூட்டுவோன்.
*வாதிப்பு* - துன்பம்.
*வாது* - தருக்கம், சண்டை.

**வாதுதல்** – அறுத்தல்.
**வாதுமை** - மர வகை.
**வாதுவன்** - யானைப்பாகன், குதிரைப்பாகன்.
**வாதை** - துன்பம்.
**வாத்தியம்** – இசைக்கருவி
**வாத்து** - பறவை வகை.
**வாந்தி** - வாயாலெடுத்தல்.
**வாமம்**- அழகு, இடப்பக்கம், தொடை, சக்திமதம், தீமை.
**வாமனம்** - குறுகிய வடிவம், தென் திசை யானை.
**வாமன்** - அருகன், புத்தன், சிவன், வாமனன்.
**வாமான்** - குதிரை.
**வாமி** - துர்க்கை, வாம ஆசாரப்படி நடப்போன்.
**வாமை**- சிவசக்தி, இலக்குமி, பெண்.
**வாயசம்** - காக்கை.
**வாயடை** - உணவு.
**வாயாகுதல்** – உண்மையாகுதல்.
**வாயாடி** – அதிகம் பேசுவோன்.
**வாயில்** - வாசல், கதவு, வழி, இடம், உபாயம், தூது, பொறி புலன்கள், துவாரம், தூதன்.
**வயிலோர்**-தூதுவர், வாயில் காப்பவர்.
**வாயு** - காற்று, வடமேற்கு மூலைக்கு அதிபதியான தேவன்.
**வாயுத்தம்பம்** - காற்றை இயங்காமல்நிறுத்தும்வித்தை
**வாயுமூலை** - வடமேற்கு.
**வாயுறை** - உணவு, கவளம், மகளிர் காதணி, உறுதி மொழி.
**வாயொலி** - பாடல்.
**வாய்** - இடம், வாக்கு, துவாரம், உண்மை, வாயில், விளிம்பு, காரணம், முனை, மொழி, குரல் வழி, வடு.
**வாய்க்கட்டை** - வஞ்சம்.
**வாய்க்கரிசி** - பிரேதத்தின் வாயிலிடும் அரிசி.
**வாய்க்கால்** – கால்வாய்.
**வாய்ச்சி** - மரம் செதுக்கும் கருவி.
**வாய்தல்** - பொருந்துதல், வாசல்,மனம் நேர்தல், ஏற்றதாதல், பெறுதல், நிறைதல்.
**வாய்த்தலை**-மதகு, தொடங்குமிடம் வாய்க்காலின் தலைப்பு.
**வாய்த்தல்** - நன்கமைதல், பொருந்துதல், சேர்தல்.
**வாய்நெகிழ்தல்** - மலர்தல்.
**வாய்பாடு** - மரபுச்சொல், மனப்பாடம் செய்தற்குரியது, வழக்கம்.
**வாய்ப்பகை**-பொய் குறளை வன்சொல் பயனில் சொல் ஆகியவை.
**வாய்ப்பந்தல்** - ஆடம்பர வார்த்தை.
**வாய்ப்பு** -அனுகூல நிலைமை, பொருத்தம், அழகு, செல்வம், செழிப்பு, சிறப்பு, பேறு.

*வாய்ப்புள்* - நற்சொல்லாகிய நிமித்தம்.
*வாய்மலர்தல்* - பேசுதல்.
*வாய்மை*-உண்மை, தவறுத சொல், சொல், வலி.
*வாய்மொழி*–சொல்,வேதம், மெய்ம்மொழி.
*வாய்வலம்* - சொல்வன்மை.
*வாய்வாளாமை* - பேசா திருத்தல்.
*வாய்வாள்* - குறி தவறுத வாள்.
*வாய்விடு* - சபதம், வாரம்,
*வாய்விள்ளுதல்* - மலர்தல், பேசுதல்.
*வாய்வைத்தல்* -தலையிடுதல், ஊதுதல், சிறிது பயிலுதல்.
*வாரணம்* - சங்கு, யானை, கோழி, உறையூர்,மறைப்பு, கடல், பன்றி, கவசம்,மாவி லிங்கம்.
*வாரணவாசி* - காசி.
*வாரணன்* - கணபதி.
*வாரப்பாடு* - அன்பு.
*வாரமாதர்* - பொதுமகளிர்.
*வாரம்* - உரிமை, பக்கம், மலைச்சாரல், இசைப்பாட்டு, பின்பாட்டு, அன்பு, கிழமை, குடியிறை, பங்கு, தடவை.
*வாராவதி* - பாலம்.
*வாரி* - வருவாய், மழை, கடல், விளைவு, யானையகப் படுத்துமிடம், செல்வம், குப்பை வாரும் கருவி, மதிற்சுற்று,வெளி, செண்டு வழி.
*வாரிசம்* - தாமரை, சங்கு, உப்பு.
*வாரிசாதம்* - தாமரை.
*வாரித்திரம்* – ஓலைக்குடை.
*வாரிதம்* - மேகம்.
*வாரிதி* - கடல்.
*வாரித்தல்* - தடுத்தல், நடத் தல், ஆணையிட்டுக்கூறுதல்.
*வாரியப் பெரு மக்கள்* – ஊராளும் சபையோர்.
*வாரியம்* - மேல் விசாரணை நடத்தும் உத்தியோகம்.
*வாரியன்* - மேல் விசாரணை செய்வோன்,குதிரைப்பாகன்
*வாருகம்* - வெள்ளரி, பேய்க் கொம்மட்டி.
*வாருகோல்* - துடைப்பம்.
*வாரை* - மூங்கில், ஆவிரை.
*வார்* - கயிறு, நெடுமை, நேர் மை, நீர், கச்சு, துண்டம்.
*வார்க்குத்து* - நீர் சுழித்து ஓடுமிடம்.
*வார்சு* - ஒருவனுக்குப் பின் அவன் சொத்தை அடை வதற்குரியவர்.
*வார்தல்* - யாழ் வாசித்தலில் ஒரு செய்கை, ஒழுகுதல், உரிதல்.
*வார்த்திகம்* - கிழத்தனம், சூத்திரக் கருத்தை விளக் கும் ஒருவகை யுரை.
*வார்த்திகன்* - தூதன்.
*வார்த்தை* – சொல், செய்தி, வைசியர் தொழில்.
*வார்ப்பு* - உலோகங்களை உருக்கி வார்த்தல், நீளப் பக்கமாகச் சிவப்படுதல்.

***வாலகன்*** -

***வாலதி*** - வால்.

***வாலம்*** - வால், வாலிபம்,

***வாலறிவன்*** - கடவுள்.

***வாலாமை*** - அழுக்கு, தீட்டு

***வாலாயம்*** - வாடிக்கை.

***வாலிது*** - தூயது, வெண்மை யானது.

***வாலிபம்*** - இளமை.

***வாலியோன்*** - பலராமன்.

***வாலுகம்*** - வெண் மணல், மணற்குவியல்.

***வாலுவன்*** - சமைப்போன்.

***வாலுளுவை*** - கொடிவகை.

***வாலேயம்*** - கழுதை.

***வாலை*** - இளம்பெண், சத்தி பேதங்களுள் ஒன்று, திரா வகம் வடிக்கும் பாண்டம்.

***வால்*** - இளமை, தூய்மை, வெண்மை, ஒளி, பெருமை, மிகுதி, விலங்கு பறவை களின் பின்புற வுறுப்பு.

***வால்மிளகு*** - மிளகு வகை.

***வாவயம்*** - துளசி.

***வாவல்*** - தாண்டுதல், வயா, வெளவால்.

***வாவி*** - நீர்நிலை, நடைக்கிணறு,

***வாவுதல்*** - தாண்டுதல், தாவு தல்.

***வாழை*** - மரவகை.

***வாழ்க்கை*** - சீவிக்கை, ஊர், வாழ்நாள்.

***வாழ்க்கைத்துணை*** - மனை யாள்

***வாழ்த்து*** - ஆசி, கடவுள் துதி, மங்களம் பாடுதல்.

***வாழ்வு*** - சீவனம், உயர் பதவி, நல்வாழ்க்கை, ஊர், உறைவிடம்.

***வாளகம்*** - வெட்டிவேர்.

***வாளமலை*** - வாள் வீச்சு.

***வாளம்*** - வாள், வட்டம், சக்கரவாளம், சக்கரவாகம்.

***வாளரி*** - சிங்கம்.

***வாளவரை*** — கொடி வகை.

***வாளா*** - ஒன்றும் செய்யா மல்.

***வாளாமை*** - மௌனம்.

***வாளி*** - அம்பு, வாள்வீரன், வட்டமாக ஓடுதல், ஒரு வகைக் காதணி, நீர் மொள் ளும் ஏனம்.

***வாளிகை*** - காதணி.

***வாளுழத்தி*** — கொற்றவை, நீர்ச்சால்.

***வாளை*** - மீன் வகை.

***வாள்*** - ஒளி, கத்தி, கூர்மை, ஈர்வாள்.

***வாள்வரி*** - புலி.

***வாள்வரிக்கொடுங்காய்*** - வெள்ளரிக்காய்.

***வாறு*** - விரதம், பேறு, வல் லமை.

***வாற்கோதுமை*** - கோதுமை வகை.

***வானபத்தியம்*** - பூத்தோன் றாது காய்க்கும் மரம்.

***வானப்பிரியை*** - இலுப்பை மரம், மதூகம்.

*வானம்* - ஆகாயம், மேகம், மழை, தேவருலகு, உலர்ந்தமரம்.
*வானம்பாடி*-பறவை வகை.
*வானரப்பகை* - நண்டு.
*வானரம்* - குரங்கு.
*வானவரம்பன்* - சேரன்.
*வானவன்* - தேவன், இந்திரன், சூரியன், சேர அரசன்.
*வானவில்* - இந்திர வில்.
*வானவூர்தி* - ஆகாய விமானம்.
*வானி* - மேற்கட்டு, துகிற்கொடி, கூடாரம், ஆன்பொருநை, காற்றுடி, மின்னற் கொடி.
*வானிழல்* - அசரீரி.
*வானீரம்* - வஞ்சிக்கொடி.
*வான்* — ஆகாயம், மழை, மேகம், மூலப்பிரகிருதி, தேவருலகு, அமிர்தம், பெருமை, அழகு, சிறப்பு, இடி.
*வான்கண்* - சூரியன்.
*வான்கோழி* - கோழிவகை.
*வான்மீகம்* - குங்குமப்பூ.
*வான்மீகி* - ஒரு முனிவர்.
*வான்மீன்*-நட்சத்திரம், வால் நட்சத்திரம்.
*வான்மை* - தூய்மை, வெண்மை.

## வி

**வி** - காற்று, அழகு, பறவை, விசை, விசும்பு.
*விகங்கம்* - பறவை, அன்னம், காற்றுடி.
*விகசித்தல்* - மலர்தல்.
*விகடகவி* - நகைச்சுவை [illegible].
*விகடம்*-நகைச்சுவை, அழகு, வேறுபாடு.
*விகண்டித்தல்* - ஆட்சேபித்தல், வேறுபடுதல்.
*விகமம்* - பிரிவு.
*விகிர்த்தனன்* - சூரியன்.
*விகலம்* - குறைவு, சிதைவு
[illegible] ஒரு பாகம், நாழிகை.
*விகற்பம்* - வேறுபாடு, மனமாறுபாடு.
*விகாசம்* - மலர்ச்சி, பிரகாசம்.
*விகாதம்*—இடையூறு, கேடு.
*விகாரம்* — வேறுபாடு, அவலட்சணம், பௌத்தாலயம்.
*விகாரி* - ஓர் ஆண்டு.
*விகிர்தம்* - வேறுபாடு, அச்சம், பொய்.
*விகிருதி* - வேறுபாடு, ஓர் ஆண்டு, விகுதி.
*விகிர்தன்* - கடவுள்.
*விகுணி* - கள்.
*விகுதி* - இறுதிநிலை.
*விகுருதி* - வேறுபாடு.
*விக்கல்* — தொண்டை [illegible]
*விக்கிதம்* - குதிரை நடை வகை.
*விக்கிரகம்* - உருவம், பகை, போர்.
*விக்கிரம* - ஓர் ஆண்டு.
*விக்கிரமம்* - மிகுவலிமை, வீரம்.

**விக்கினம்**-இடையூறு, தீது.
**விக்கு** - விக்கல்.
**விக்குள்** - விக்கல்.
**விசகவி** - மல்லிகை.
**விசதம்** - வெளிப்படை.
**விசயம்** - வெற்றி, பாகு, வருகை, பொருள், பரி வேடம்.
**விசர்** - பைத்தியம்.
**விசர்ச்சனம்**-வெளிப் போக்குதல்.
**விசலி** - சீந்தில்.
**விசலிகை**-கொடி மல்லிகை.
**விசமகம்** - ஒரு நட்சத்திரம்.
**விசாகன்** - முருகக்கடவுள்.
**விசாணம்** - விலங்கின் கொம்பு.
**விசாரம்** - கவலை, ஆலோசனை, ஆராய்ச்சி.
**விசாலம்** - இடப்பரப்பு, வெண்கடம்பு, வாழை.
**விசி** — கட்டு, கட்டில், பறையின் இறுக்கும்வார், துண்டு.
**விசிகம்** - அம்பு, இருப்புலக்கை.
**விசிகரம்** - அலை.
**விசிகை** — முலைக்கச்சு.
**விசிட்டம்** - குணமுள்ளது, மேன்மையுள்ளது.
**விசிதம்** - வெண்மை.
**விசித்தல்**— இறுகக்கட்டுதல், விம்முதல்.
**விசித்திரம்**-அதிசயம், பேரழகு, இறுமாப்பு.
**விசிப்பலகை** - ஊஞ்சற் பலகை.
**விசிரமித்தல்** - இளைப்பாறுதல்
**விசிறி** - காற்றை அசைவிக்கப் பயன்படுத்தும் கருவி.
**விசிறுதல்** - வீசுதல், சொரிதல், போக்குதல்.
**விசு** - இராசிகளில் சூரியன் பிரவேசிக்கும் காலம், ஓர் ஆண்டு.
**விசுத்தம்** - மிகுதூய்மை.
**விசுத்தி**-ஐயம், ஒப்பு, திருத்தம், பதினாறு இதழ்வடிவினதாகக் கருதப்படும் அடிநாத்தானம்.
**விசும்பு** - வானம்.
**விசுவகர்மா** -தேவத்தச்சன்.
**விசுவசித்தல்** - நம்புதல்.
**விசுவம்** - எல்லாம், நெடுமால், சுக்கு.
**விசுவம்பரன்** - கடவுள்.
**விசுவரூபம்** - பேருருவம், கடவுளின் நிலை.
**விசுவன்** - சீவான்மா.
**விசுவாசம்** — நம்பிக்கை, அன்பு, உண்மை.
**விசேடணம்** - அடைமொழி.
**விசேடம்** - சிறப்பு, மிகுதி.
**விசேடியம்** - அடையடுத்தது.
**விசை** - வேகம், தடவை, பொறி, வெற்றி.
**விச்சாதரர்** - விஞ்சையர்.
**விச்சுளி** - மீன்கொத்திப்புள்.
**விச்சை**-கல்வி, மாயவித்தை, மந்திரம், [illegible].
**விஞ்சுதல்**-மிஞ்சுதல், மேலாதல்

***விஞ்சை*** - கலை, கடவுளைப் பற்றிய அறிவு, மந்திரம், மாயவித்தை.
***விஞ்சையர்*** — வித்தியாதரர், புலவர்.
***விஞ்ஞாபனம்*** - வேண்டுகோள்.
[illegible]ர் — ஆணவ மலம் ஒன்றேயுடைய ஆன்மாக்கள்.
***விஞ்ஞாஞகலர்*** — விஞ்ஞான கலர்.
***விஞ்ஞானம்*** - உண்மையறிவு.
***விடகண்டன்*** - சிவன்.
***விடகலை*** - உடம்பில் ஒரு தானம்.
***விடகாரி*** - விடவைத்தியன்.
***விடக்கு*** - இறைச்சி.
***விடங்கம்*** — கொடுங்கை, இயற்கையாயுண்டான லிங்கம், அழகு, ஆண்மை.
***விடங்கர்*** - முதலை, சிறுவழி.
***விடங்கு*** - அழகு, அணிகலன்களின் உறுப்பு, சிருங்கார விலாசம்.
***விடங்கொல்லி*** - சிறியா நங்கை.
***விடதாரி*** - விடவைத்தியன்.
***விடமரம்*** - எட்டி.
***விடமம்*** - குறும்பு, சமமின்மை.
***விடமுள்*** - தேள்.
***விடம்*** - நஞ்சு, கேடுவிளைப்பது, கெட்டவொழுக்கம்.
***விடம்பு*** - உள்ளொன்று புறம் பொன்றான தன்மை.
***விடயம்*** - காரியம், புலனால் அறியும் பொருள், காம இன்பம்.
***விடரகம்***-மலைக்குகை, மலை.
***விடரி*** - மலை.
***விடருகம்*** - பூனை, பாம்பு.
***விடர்*** - நிலப்பிளப்பு, மலைக்குகை, காடு, பெருச்சாளி, காம இச்சையுடையவர்.
***விடலி*** - தூர்த்தை.
***விடலை*** - ஆண்களிற் சிறந்தோன், பாலைநிலத்தலைவன், மருதநிலத்தலைவன், வீரன்.
***விடவல்லி*** - கீழாநெல்லி.
***விடலி*** - மரம்.
***விடவு*** - தூர்த்தத்தன்மை.
***விடன்*** - தூர்த்தன், வீரன்.
***விடாக்கண்டன்*** - பிடிவாதமாக ஒன்றை நிறைவேற்றுபவன்.
***விடாணம்*** - விலங்கின் கொம்பு.
***விடாதம்*** - மயக்கம்.
***விடாய்*** - ஆசை, தாகம்.
***விடிதல்*** - உதயமாதல், துன்பம் நீங்குதல்.
***விடிமீன்*** - விடிவெள்ளி.
***விடியல்*** - பொழுது உதயமாகும்வேளை, வெளியிடம்.
***விடுகதை*** - புதிர்.
***விடுகவி*** - தனிப்பாட்டு.
***விடுதலம்*** - நிலாமுற்றம்.
***விடுதலை*** - சுதந்தரம், ஓய்வு.
***விடுதல்*** - நீங்குதல், நீக்கு அனுப்புதல், அவிழ்தல்.

***விடுதி*** - தங்குமிடம்.
***விடுதோல்*** - மேல் தோல்.
***விடுத்தல்*** - போகவிடுதல், விடை கூறுதல், பிரித்தல்,

***விடுநிலம்*** - தரிசு நிலம்.
***விடுமுறை*** - ஓய்வு நாள்.
***விடுவாய்*** - நிலப் பிளப்பு.
***விடேல் விடுகு*** - பல்லவ அரசர் சிலரின் சிறப்புப் பெயர்.
***விடை*** - மறுமொழி, அசைவு, காளை மாடு, மிகுதி, இடப ராசி, எருமைக் கடா, மரையின் ஆண், இளமை.
***விடைத்தல்*** - கோபித்தல், குற்றப்படுத்துதல், வருந்துதல், மிகுதல், தடுத்தல்.
***விடைப்பு*** - வேறுபடுத்துதல், நீக்குதல்.
***விட்டகுறை*** - முன்பிறப்பில் பயின்றுவிட்டதன் குறை.
***விட்டம்*** - வட்டத்தின் குறுக்களவு, உத்திரம், தேகம், அவிட்ட நட்சத்திரம்.
***விட்டில்*** - பூச்சிவகை.
***விட்டெறிதல்*** - தூரவிழும் படி எ...
***விட்டேறு*** - எறிகோல், இகழ்ச்சிச் சொல், வேல்.
***விட்டேற்றி*** - சுற்றத்தினின்றும் நீங்கிப் பிறரையும் அவ்வாறு நீங்கச் செய்பவன்.
***விட்டை*** - மலம்.
***விண்*** - ஆகாயம், மேலுலகம்.
***விண்கொள்ளி*** - எரி கொள்ளி
***விண்டு*** - திருமால், மேலுலகம், ஆகாயம், மலை, மூங்கில், மேகம்.
***விண்டுராதன்*** - பரீக்ஷித்து.
***விண்டேர்*** - கானல்.
***விண்ணகர்*** - வைகுந்தம்.
***விண்ணதிர்ப்பு***-இடி முழக்கம்.
***விண்ணப்பம்*** - வேண்டுகோள்.
***விண்ணோணம்*** - இடம்பம், நாகரிகம், சாலக்கு.

***விதண்டம்*** - பிறர் கொள்கையை ஏற்காது தன் கொள்கையை வற்புறுத்தும் வாதம்.
***விதண்டாவாதம்*** - விதண்டம்.
... - கூட்டம், பரப்பு, வரிசை.
***விதத்தல்*** - மிகுதல், சிறப்பித்துரைத்தல்.
***விதப்பு*** - சிறப்பித்துக் கூறுதல், விதி, விவரம், மறுப்பு, விரைவு, நடுக்கம்.
***விதம்*** - மாதிரி, வகை.
***விதரணை***-சமர்த்து, கொடை, விவேகம், இரக்கம்.
***விதலம்*** - கீழ் ஏழ் உலகத்...
***விதலை*** – நடுக்கம், பூமி.
***விதவை*** - கைம்பெண், சோறு, கூழ், குழம்பு.
***விதறு*** – நடுக்கம்.
***விதனம்*** - துன்பம்.

*விதானம்* - மேற்கட்டி, ஏற்பாடு, உபாயம், ஊழ்.
*விதி* - சட்டம், ஊழ், ஆயுள், பிரமன், கட்டளை, ஒழுக்க முறை.
நசை.
*விதிர்தல்* - நடுங்குதல்.
*விதிர்த்தல்* - நடுங்குதல், தெறித்தல், சொரிதல்,
*விது* - சந்திரன், குபேரன்.
*விதும்புதல்* - நடுங்குதல், ம்புதல், விரைதல்.
*விதுலம்* — ஒப்பின்மை.
*விதுவிதுப்பு* - நடுக்கம், ஆசை, குத்துநோய்.
*விதூடகன்* - நகைச்சுவை விளைப்பவன்.
*விதூடணம்* - பெருநிந்தை.
*விதேசம்* - அந்நிய நாடு.
*விதேயன்* - சொற்படி நடப் பவன்.
*விதை* - வித்து, தனி மாத்
*வித்தகம்* - சாமர்த்தியம், கல்வி, ஞானம், சின்முத் திரை, வடிவின் செம்மை, சிறந்த கைத் தொழில்.
*வித்தம்* - பொன், ஞானம், பழிப்பு, கூட்டம், சூதிற் சிறுதாயம்.
*வித்தரித்தல்* - விரித்தல்.
*வித்தாரம்* - விரிவு, விஎ வாகப் பாடும் கவிவகை, புலமை.
*வித்தியர்* - கம்மாளர்.
*வித்தியா கலை* - ஆன்மாக் களுக்கு அனுபவ ஞானத் தைத் தரும் சிவ சக்தி.
*வித்தியாதரர்* - ஒருவகைத் தேவ சாதியார்.
*வித்தியார்த்தி* - கல்வி கற் பவன்.
*வித்தியாலயம்* - பாடசாலை.
*வித்துரு*, *வித்துருமம்* - பவளம்.
*வித்துவான்* - கல்வியில் மேம் பட்டவன்.
- நட்பான விடத்தில் பகை விளைவிப்ப தாகிய வினை.
*வித்தை* - கல்வி, தந்திரம்.
*விநயம்* - நயமொழி, பணிவு, உபாயம்.
*விநாசம்* — அழிவு.
*விநாயகன்* - கணபதி, அரு கன்.
*விநியோகம்* - பிரித்துக் கொடுத்தல்.
*விந்தம்* - விந்தியமலை, குரு விந்தம், ஒரு பேரெண், காடு, செம்புளிச்சை, தாமரை.
*விந்தன்* - இடையன்.
*விந்து* - துளி, சுக்கிலம், சுத்த மாயை, சிவதத்துவம், நெல் மூக்கு, புள்ளி.
*விந்தை* — ஆச்சரியம், அழகு, துர்க்கை, வீரலக்குமி, விந் தியமலை.

**விபக்கம்** - அநுமான வுறுப்பில் துணிபொருள் இல்லாத இடம்.
**விபசாரி** - சோரம் போனவள்.
**விபஞ்சி, விபஞ்சிகை** - வீணைவகை.
**விபத்தி**-வேறுபாடு, ஆபத்து.
**விபத்து** - ஆபத்து.
**விபரீதஞானம்** - திரிபுணர்ச்சி.
**விபரீதம்** - மாறுபாடு, பிரதிகூலம், அதிசயம்.
**விபலம்** - பயனின்மை.
**விபவம்**-செல்வம், பெருமை, வாழ்வு, மோட்சம்.
**விபாகம்** - பிரிவு.
**விபாகரன்** - சூரியன்.
**விபாடம்** - பிளத்தல்.
**விபாவரி** - இராத்திரி, பார்வதி.
**விபாவனை** - காரணமின்றிக் காரியம் பிறந்ததாகச் சொல்லும் அணிவகை, பார்வதி.
**விபினம்** - காடு.
**விபு** - எங்கும் பரவியுள்ளது, கடவுள்.
**விபுதன்** - அறிஞன், தேவன்,
**விபுலம்** - விரிவு, பெருமை, பூமி.
**விபூதி** - செல்வம், திருநீறு.
**விப்பிரயோகம்** - வெய்து பார்த்து இரங்குதல், காதலரின் பிரிவு.
**விப்பிரலம்பம்** - வஞ்சகம்.
**விப்பிரன்** - பிராமணன்.
**விப்புருதி** - புண்.
**விமரிசம்** - ஆராய்ச்சி, மனனம்.
**விமரிசை** - ஆடம்பரம்.
**விமலம்** - அழுக்கின்மை.

இலக்குமி, கங்கை.
**விமானம்**-வானவூர்தி, ஊர்தி, தூபி, தேவலோகம், உரோ

**விமோசனம்** – நீங்குகை.
**விம்பம்**-நிழல், வட்டம், விக்கிரகம், உடல், ஒளி.
**விம்மல்**-தேம்பியழுதல், துன்பம், வீங்குதல், பூரிப்பு,

**விம்மாத்தல், விம்முதல்** - விம்மல்.
**விம்மிதம்** - அதிசயம், பெருமிதம், உடல்.
**வியங்கியம்** - குறிப்புப் பொருள்.
**வியங்கொள்ளுதல்**-ஏவலைக் கொள்ளுதல், செலுத்துதல்
**வியங்கோள்**-மரியாதையான ஏவல்.
**வியஞ்சகம்** - விளங்கும் கருவி.
**வியஞ்சனம்** - அடையாளம், மெய்யெழுத்து.
**வியட்டி** - தனிப்பட்டது.
**வியதிரேகம்** - வேற்றுமை.
**வியத்தம்** - வெளிப்படை.
**வியத்தல்** - அதிசயித்தல், பாராட்டுதல்.
**வியந்தரம்** – பிசாசு.

***வியபிசாரம்***-கற்புநெறி தவறுதல்.
***வியப்பு***-அதிசயம், மேம்பாடு.
***வியமம்*** - பாராட்டத்தக்கது.
***வியம்***-ஏவல், வழி, போக்கு, விரிவு, உடல், சமமற்றது, ஒற்றைப்பட்ட எண், பறவை.
***வியர்*** - வியர்வை.
***வியர்த்தம்***-பயனின்மை.
***வியர்த்தல்*** - வியர்வையுண்டாதல், மனம் புழுங்குதல், சினங்கொள்ளுதல்.
***வியர்வை*** - வியர், சினக்குறிப்பு.
***வியலகம்*** - பூமி, அகலம்.
***வியலிடம்*** } வியலகம்.
***வியலுள்*** }
***வியல்***-அகலல், காடு, மிகுதி.
***வியவகரித்தல்*** - பேசுதல்.
***வியவன்*** - வழிச்செல்வோன், ஏவுவான், ஏவல் செய்பவன்.
***வியவு*** - வேறுபாடு.
***வியனுலகம்*** - தேவருலகம்.
***வியன்*** - ஆகாயம், பெருமை, வியப்பு, சிவப்பு, எண்ணின் [illegible]
***வியாகரணம்*** - வடமொழி [illegible]
***வியாகுலம்*** - துக்கம்.
***வியாக்கியானம்*** - உரை.
***வியாக்கிரம்*** - புலி.
***வியாசம்*** - கட்டு.
***வியாதி*** - நோய்.
***வியாத்தி*** - எங்கும் நிறைந்திருத்தல், நியதமான உடன் நிகழ்ச்சி.
***வியாபகம்*** - எங்கும் நிறைந்திருத்தல்.
***வியாபாரம்*** - தொழில் வாணிகம்.
***வியாகிருதி*** - மறைக்கபடாதிருக்கை.
***வியாமோகம்***-பெருமோகம்.
***வியாயாமம்***-தேகப் பயிற்சி.
***வியாழம்***-தேவகுரு, ஒரு கிரகம், ஒரு கிழமை, பாம்பு.
***வியாழன்*** - வியாழம்.
***வியாளம்*** - பாம்பு, புலி.
***வியானன்*** - இரத்த வோட்டத்தை உண்டாக்கும் வாயு.
[illegible] - படை வகுப்பு, [illegible]கின் கூட்டம்.
***வியோகம்*** - சாவு.
***வியோமம்*** - ஆகாயம்.
***விரகம்*** - பிரிவு, காதலர்க்குப் பிரிவாலுண்டாகும் துன்பம், காமம்.
***விரகன்*** - சாமர்த்தியமுள்ளத்தன், சுற்றத்தான்.
***விரகு*** - உபாயம், சாமர்த்தியம், உற்சாகம், பண்ணியாரம்
***விரசம்*** - வெறுப்பு.
***விரசுதல்***-செறிதல், பொருந்துதல்
[illegible]ரசை - தருப்பை, மாட்டுத்தொழுவம்.
***விரணகாசம்*** - கருவிழியில் படரும் கண்ணோய் வகை.

*விரட்டுதல்* - ஓட்டுதல், பயமுறுத்துதல்.
*விரணகாரி* – புண்ணைச் சுடும் மருந்து, தோலைப் புண்ணுக்கும் மருந்து.
*விரணம்*-காயம், புண்கட்டி, பகை, புல்வகை.
*விரதம்* - நோன்பு, தவம், ஒழிகை, அருவருப்பு.
*விரதி* - நோன்பை மேற் கொண்டவன், பிரமசாரி.
*விரத்தன்*- உலகப்பற்று இல்லாதவன்.
*விரத்தி* – பற்றின்மை.
*விரயம்* – செலவாதல்.
*விரவேறு* - ஒருவகைத் தோற் கருவி.
*விரவலர்*, *விரவார்* } பகைவர்.
*விரவு* - கலப்பு.
*விரவுதல்*-கலத்தல், பொருந்துதல், நட்புக்கொள்ளுதல்.
*விரளம்* – செறிவின்மை.
*விரளல்* – நெருக்கம்.
*விராகம்*, *விராகு* } பற்றின்மை.
*விராட்டு* - பிரபஞ்ச ரூபமான பரப்பிரம்மம்.
*விராட்புமடன்* · விராட்டு.
*விராதனன்* - கொலைஞன்.
*விராமம்* - ஒற்றெழுத்து.
*விராய்* – விறகு.
*விரி* – விரித்தல், திரை, விரியன் பாம்பு.
*விரிசிகை* – மாதர் இடையணி.
*விரிச்சி* – வாய்ச் சொல்லாகிய நற்சகுனம்.
*விரிச்சிகன்* - சூரியன், நிமித்தம் கூறுவோன்.
*விரிஞ்சன்*, *விரிஞ்சி* } பிரமன்.
*விரிதல்* - பரத்தல், வெடித்தல்.
*விரிதாறு* – புதர்.
*விரித்தல்* - பரப்புதல், விளக்கி யுரைத்தல், விரியச் செய்தல்.
*விரிநூல்* - ஆகமங்கள்.
*விரியல்* - பூமாலை, பரப்பு, ஒளி, மலர்ச்சி.
*விரியன்* - பாம்புவகை.
*விரிவு* – அகற்சி.
*விரிவுரை* – சொற்பொழிவு, விரிவான உரை.
*விரீஇ* - நெல்.
*விருகம்*–செந்நாய், விலங்கு.
*விரிகோதரன்* - வீமன்.
*விருக்கா* – மரம்.
*விருசு* - வாணவகை.
*விருச்சிகம்* – நண்டு, தேள், ஓர் இராசி.
*விருட்சம்* - மரம்.
*விருதர்* - வீரர்.
*விருதா* - வீண்.
*விருதாவளி* - பட்டவரிசை.
*விருது* - பட்டம், கொடி, வெற்றிச் சின்னம்.
*விருத்தம்* - வட்டம், சொக்கட்டான் தாயவகை, பாவினத்துள் ஒன்று, முரண், குற்றம், இடையூறு, மூப்பு, கூட்டம்.

*விருத்தன்* - முதியவன், மேலோன்.

*விருத்தாந்தம்* - வரலாறு.

*விருத்தி*—ஒழுக்கம், தொழில், பெருக்கம், சீவிதமாகவிடப் பட்ட நிலம், நாடகநூலின் நடை, விரிவுரை, தொண்டு, வளர்ச்சி.

*விருத்தை* - கிழவி.

*விருந்தம்* — காம்பு, சுற்றம், மனைவி.

*விருந்தினன்* - புதியவன், [illegible]

*விருந்து* — அதிதிகட்கு இடும் உணவு, அதிதி, புதுமை, புதியவன், நூல் வனப்புக் களுள் ஒன்று.

*விருந்தை* - துளசி.

*விருப்பம்* } ஆசை, அன்பு,
*விருப்பு* } பற்று.

*விருனை* - பூண்.

*விரூபம்* - விகார உருவம்.

*விரேசகம்* - பேதிமருந்து.

*விரேசனம்* - மலங்கழித்தல்.

*விரை* - மணம், தேன், கலவைச் சாந்து.

*விரைதல்* - வேகமாகச் செல் [illegible]

*விரைத்தல்* - மணங்கமழ் தல்.

*விரைவு* - வேகம்.

*விரோசனன்* — சூரியன்.

*விரோசனி* - கடுக்காய்.

*விரோதம்* - பகை, மாறு பாடு.

*விரோதி*-பகைவன், ஆண்டு களில் ஒன்று.

*விலகுதல்* - நீங்குதல், பிரி தல்.

*விலங்கல்*-கலங்கல்நீர், குறுக் காக வளர்ந்திருத்தல்.

*விலங்கி* — வேலி.

*விலங்கு* - மிருகம், குறுக் கானது, பறவை, மான், [illegible], தடை.

*விலங்குதல்* - குறுக்கிடுதல், [illegible] களைதல், எறி தல்.

*விலட்சணம்* - சிறப்பியல்பு.

*விலவிலத்தல்* — அச்சத்தால் நடுங்குதல்.

*விலா* - மார்பின் பக்கம்.

*விலாசம்* - முகவரி, விளை யாட்டு, அழகு.

*விலாடம்*-தீய விளையாட்டு.

*விலாவனை*-அழுகை.

*விலாவித்தல்* - அழுதல்.

*விலாழி* - குதிரையின் வாய் நுரை, யானைத் துதிக்கை யுமிழ்நீர்.

*விலை* - கிரயத்தொகை.

*விலைமகள்* - பொதுமகள்.

*விலையாட்டி* - பண்டம் விற் பவள்.

*விலையாள்* - அடிமை.

*விலோசனம்* - கண், உட் கருத்து.

*விலோதம்*.- கொடி, மயிர்க் குழற்சி.

*விலோமம்* -எதிரிடைமுறை.

*வில்*-அம்பெய்தற்குரிய கருவி, [illegible]

*வில்லங்கம்*-துன்பம், தடை.

***வில்லவன்*** - சேரன், மன் மதன்.
***வில்லார்*** - வேடர்.
***வில்லிடுதல்*** - ஒளி வீசுதல்.
***வில்லேப்பாடு*** -அம்புவிழும்

***வில்லேருழவர்*** - வேடர், வீரர், பாலைநிலத்தவர்.
***வில்லை***-வட்டமும் தட்டையு மாக இருப்பது.
***வில்வம்*** - மரவகை.
ல் -
கூறுதல், வழக்காடுதல்
***விவசாயம்*** — வேளாண்மை.
***விவரணம்*** - விவரமான குறிப்பு.
***விவரம்*** - விவரித்தல், மலைக் ]கை, விவேகம், இடை வெளி.
***விவாகம்*** - கலியாணம்.
***விவாதம்*** - சொற்போர்.
***விவிதம்*** - பலவிதம்.
***விவேகம்*** - புத்திக்கூர்மை.
***விழல்*** - பயனின்மை, புல் வகை,
***விழவு*** - விழா, விளையாட்டு.
***விழா*** - கொண்டாட்டம், உற்சவம்.
***விழாக்கோள்*** - விழாக் கொண்டாட்டம்.
***விழாவணி*** - விழாச் சிறப்பு, வீரப்போர்க்கோலம்.
ழி - கண், ஞானம்.
***விழித்தல்*** - கண்திறத்தல், தூக்கம் தெளிதல், ஒன்றும் தெரியாதிருத்தல்.
***விழு*** - சிறந்த, துன்பமான.
***விழுக்காடு*** — வீதம், பொரு ளின்றிக் கூட்டியுரைக்கும் சொல் வீழ்தல்.
***விழுக்கு*** - கொழுப்பு, எண் ணெய்ப் பிசுக்கு.
***விழுங்குதல்*** -மெல்லாது உட் கொள்ளுதல், வியாபித்தல்,

***விழுது*** - ஆல் முதலியவற் றின் கிளையிலிருந்து இறங் கும் வேர், வெண்ணெய்,

***விழுப்பம்*** - மேன்மை, நன்மை, துன்பம்.
***விழுப்பு*** - அழுக்குநிலை, கழிக்கப்படுவது.
***விழுப்புண்*** - முகத்திலும் மார் பிலும் பட்ட புண்.
***விழுமம்*** - சிறப்பு, துன்பம்.
***விழுமியோர்*** - பெரியோர்.
- புணர்ச்சி, இளமை.
***விழைதல்*** - விரும்புதல், ஒத் தல், நன்குமதித்தல்.
***விழைவு*** - விருப்பம்.
***விள*** - விளாமரம்
***விளக்கம்*** - ஒளி, புகழ், விளக்கு, தெளிபொருள், மோதிரம்.
***விளக்கு*** - ஒளிதரும் கருவி.
***விளக்குதல்*** - விளங்கச் செய் தல், ஒளிபெறச் செய்தல்.
***விளக்குமாறு*** - துடைப்பம்.
***விளங்குதல்*** - பிரகாசித்தல், தெளிவாதல், மேம்பட்டுத் தோன்றுதல்.
***விளம்பம்*** — காலதாமதம்.

*விளம்பரம்* - அறிக்கை.
*விளம்பனம்* - தாமதம்.
*விளம்பிதம்* - பண்பாடு தலுக்குரிய காலங்களில்
*விளம்புதல்* - சொல்லுதல், வெளிப்படக் கூறுதல்.
*விளரி* - ஏழிசைகளில் ஒன்று, இரங்கற்பண், இளமை, வேட்கை, விழா.
*விளர்தல்* - வெண்மையாதல், முதிராதிருத்தல்.
*விளர்த்தல்* - வெட்டுதல்,
*விளாகம்* - போர்க்களம், சூழ்ந்த இடம்.
*விளாசுதல்* - அடித்தல்.
*விளாவுதல்* - கலத்தல், சுற்றுதல்.
*விளி* - ஓசை, கூப்பிடுதல், கொக்கரிப்பு, இசைப் பாட்டு.
*விளிதல்* -இறத்தல், கோபித்தல், நாணமடைதல், குறைதல், கழிதல், அவமானமடைதல்.
*விளித்தல்* - அழைத்தல், பேராரவாரம் செய்தல், அழித்தல், சொல்லுதல், பாடுதல்.
*விளிம்பு* - ஓரம், கரை, கண்ணிமை.
*விளிவு* – கேடு, வீரர் ஆர்ப்பு, கடுஞ்சினம், இடையறவு.
*விளைதல்* - தோன்றுதல், பயன் தருதல், முதிர்தல்,

*விளையாட்டு* - பொழுது போக்குக் குரிய மகிழ்ச்சிச் செயல்.
*விளையுள்* -விளைச்சல், முதிர்வு.
*விளைவு* - பயன், முதிர்ச்சி, விளைபொருள், நிகழ்ச்சி.
*விள்* - விள்ளுதல், பேசுதல்.
*விள்ளல்* - சொல்லுதல், பிரிவு.
*விள்ளுதல்* - பிளத்தல்,
*விறகு* - எரிக்கும் கட்டை.
*விறத்தல்* - செறிதல், மிகுதல், அஞ்சுதல்.
*விறலி* - பாணப்பெண், நாட்டியமாடுபவள்.
*விறல்* - வெற்றி, வலிமை, பெருமை, உளக் குறிப்புப் பற்றி உடலில் தோன்றும் வேறுபாடு.
[illegible]ல் - மரத்துப் போதல்.
*விற்கிடை* - நான்கு முழம் கொண்ட அளவு.
*விற்பத்தி* - கல்வி வன்மை.
*விற்பனம்* - கல்வியறிவு.
*விற்றல்* - பண்டங்களை விலைக்குக் கொடுத்தல்.
*வினயம்*-அடக்கம், கொடுஞ்செயல், சூழ்ச்சி.
*வினவுதல்* - கேள்வி கேட்டல்.
*வினா* - கேள்வி.
*வினாசம்* – கேடு.
*விநாடி* - 24 நொடி கொண்ட நேரம்.

***வினியோகம்*** - செலவிடுகை பயன்.

***வினை*** - செயல், பாவபுண்ணியங்கள், தந்திரம், ஊழ் வினைச் சொல்.

***வினைமுதல்*** - செய்பவன் எழுவாய்.

***வினையாள்*** — ஏவலாள், தொழில் செய்பவன்.

***விநோதம்*** - வியப்பு, பொழுது போக்கு.

- மலர், மகரந்தம், அழிவு, பறவை.

***வீக்கம்*** - புடைப்பு, பெருமை, பருமை, மூடுதல்.

***வீக்குதல்*** - கட்டுதல், போக்குதல், அடக்குதல்,

***வீங்குதல்*** - பருத்தல், பூரித்தல், ஏங்குதல், மிகுதல்.

***வீசம்*** - 16-இல் ஒரு பங்கு.

***வீசனம்*** - விசிறி, சிற்றால வட்டம்.

***வீசுதல்*** - எறிதல், விசிறுதல், ஆட்டுதல், சிந்துதல்.

***வீசை*** - ஒரு நிறுத்தலளவை.

***வீச்சம்*** - துர்நாற்றம்.

***வீச்சு*** - எறிதல், ஆட்டுதல், ஆந்தை முதலியவற்றின் சத்தம், வளைவு, அதிகம்.

***வீடறுத்தல்*** - வழக்குத் தீர்த்தல்.

***வீடாரம்*** - பாசறை.

***வீடு*** - மனை, விடுதலை, முடிவு, மோட்சம், நீக்கம்.

***வீட்சணம்*** - பார்வை.

***வீட்டுதல்*** - கொல்லுதல், அழித்தல், நீக்குதல்.

***வீணன்*** - பயனற்றவன்.

***வீணை*** - யாழ்வகை.

***வீண்*** - பயன் இன்மை.

***வீதம்*** - பங்கு, அளவுமுறை, விடப்பட்டது.

***வீதல்*** - அழிதல், நீங்குதல்.

***வீதி*** - வழி, தெரு, ஒளி, அச்சம்.

***வீமம்*** - அம்சம், பருமன்.

***வீம்பு*** - பிடிவாதம்.

***வீயம்*** - வித்து, அரிசி.

***வீரகம்*** - அலரி.

***வீரட்டம்*** - சிவனது வீரம் விளங்கிய தலம்.

***வீரட்டானம்*** - வீரட்டம்.

***வீரணம்*** - இலாமிச்சை.

***வீரணி***-இலாமிச்சை, மிளகு.

***வீரதை*** - வீரம்.

***வீரபத்திரம்*** - அசுவமேதத்திற்குரிய குதிரை.

***வீரபானம்*** - வீரர் குடிக்கும் மது.

***வீரம்***-பராக்கிரமம், சவ்வீரம், மருந்துவகை.

***வீரன்*** - வீரமுள்ளவன், அருகன், வீரபத்திரன்.

***வீராசனம்*** - யோகாசன வகை.

***வீராணம்*** - பெரும்பறை.

***வீரி*** - காளி, துர்க்கை.

***வீரிடுதல்***-திடீரெனக் கத்துதல்.

***வீரியம்***-வலிமை, வீரம், சுக்கிலம், தற்பெருமை.

*வீரை*-நெல்லி, கடல், துன்பம், வட்டத்திருப்பி, மயிர் மாணிக்கம்.
*வீவு*-அழிவு, மரணம், முடிவு, இடை.
*வீழ்* - விழுது.
*வீழ்தல்* - கீழேவிழுதல், மிகவும் விரும்புதல்.
*வீழ்த்தல்* - விழச் செய்தல், விஞ்சுகக் கழித்தல்.
*வீழ்நாள்* - பயனற்ற நாள்.
*வீழ்பு* - சுள்ளி.
*வீளை* - சீழ்க்கை.
*வீறுப்பு* – இறுமாப்பு.
*வீறு* - தனிப்பட்ட சிறப்பு, செழுமை, பொலிவு, பெருமை.
*வீறுதல்* - மேம்படுதல், சீறுதல், வெட்டுதல்.
*வீற்றுதல்* - பிரிவு படுதல்.
*வீற்றிருக்கை* - அரசிருக்கை.
*வீற்றிருத்தல்* - சிறப்பாக உட்கார்ந்திருத்தல், இறுமாந்திருத்தல்.
*வீற்று* - வேறுபடுதல், கூறு, தனிமை.
*வீற்றும்* - மற்றும்.
*வீற்றுவீற்று* - வெவ்வேறு.

**வெ**ஃகல் - பேராசை.

*வெகு* - அதிகமாக.
*வெகுட்சி* - கோபம்.
*வெகுமானம்* - வெகுமதி, உபசரித்தல்.
*வெகுளி*-கோபம், வெறுப்பு.
*வெக்கை* - மிகுந்த வெப்பம், கடாவிடும் களம்.
*வெங்கணன்*-கொடியவன்.
*வெங்கண்* - கோபம், கொடுமை.
*வெங்களம்* - போர்க்களம்.
*வெங்கன்* - தரித்திரன்.
*வெங்காரம்* - ஒருவகை மருந்துச் சரக்கு.
*வெங்குரு* - யமன், சீகாழி.
*வெஞ்சமம்* - கொடியபோர், பாலைப்பண்வகை.
*வெஞ்சினம்* – கடுங்கோபம்.
*வெஞ்சுடர்* - கதிரவன்.
*வெடி* - வேட்டு ஓசை, வாணம், பிளவு, பகை, விடிவெள்ளி.
*வெடித்தல்* - பிளவுபடுதல், மலர்தல், வெளிக்கிளம்புதல்.
*வெடிபடுதல்* - பேராசையுண்டாதல், அஞ்சுதல்.
*வெடிப்பு* - பிளப்பு, குற்றமான சொல்.
*வெடியுப்பு* - வெடி மருந்துக்கு உதவும் உப்பு.
*வெட்கம்* - அவமானம், கூச்சம்.
*வெட்கி* – செடிவகை, ஒரு [illegible]
பசுக்களைக் கவருதலைக் கூறுவது).
*வெட்டவெளி*-திறந்த வெளி.
*வெட்டவெளிச்சம்*- உண்மை.
*வெட்டெனவு* - கடுமை.
*வெட்டி* - பயனின்மை.
*வெட்டியான்* - கிராம ஊழியன்.

**வெட்டிவேர்** — இலாமிச்சை வேர்.
**வெட்டு** — துண்டிப்பு.
**வெட்டுக்கிளி** - பூச்சிவகை.
**வெட்டனல்** - கடுமைக் குறிப்பு.
**வெட்டை** - வெப்பம், நோய் வகை, வெளி, வெறுமை.
**வெட்புலம்** - வெற்றிடம்.
**வெண்கடுகு** - கடுகுவகை.
**வெண்கதிர்** - சந்திரன்.
**வெண்கலம்** -உலோகவகை.
**வெண்களமர்** - மருத நிலத் தவர்.
**வெண்காந்தள்** - செடி வகை.

கொடி, சரசுவதி.
**வெண்சாமரை** - கவரி மானின் மயிர்க் க யாகிய ...
**வெண்டலை** - தலையோடு.
**வெண்டாது** - (வெண்+ தாது) வெள்ளி, திருநீறு.
**வெண்டேர்** - கானல்.
**வெண்டை** - செடிவகை.
**வெண்டோடு** - பனந்தோடு.
**வெண்ணஞ்சு** — நிணம்.
**வெண்ஞந்தை** - பாம்பு வகை.
**வெண்ணெய்** - பாலிலிருந்து எடுக்கப்படும் பொருள்.
**வெண்பலி** - சாம்பல்.
**வெண்பா** - நால்வகைப் பாக்களில் ஒன்று.
**வெண்பாசி** - பாசிமணி வகை.
**வெண்பாட்டம்** - கோடை மழை.
**வெண்பாவை** - நாமகள்.
**வெண்பொன்** - வெள்ளி.
**வெண்போழ்** -தாழை மலர்.
**வெண்மீன்** - சுக்கிரன்.
**வெண்மை** - ஒருநிறம், புல் லறிவுடைமை, ஒளி.
**வெதரி** - இலந்தை.
**வெதிரம்** - மூங்கில்.
**வெதிரன்** - செவிடன்.
**வெதிரேகம்** - மாறுபாடு, பரிணமம்.
**வெதிர்** - மூங்கில், நடுக்கம், விரிமலர்.
**வெதுப்புதல்** - வாட்டுதல், துன்புறுத்தல், பழுக்கக் காய்ச்சுதல்.
**வெதும்புதல்** - சூட்டுதல், மனங்கலங்குதல்.
**வெதுவெதுப்பு**-இளஞ்சூடு.
**வெந்** - முதுகு.
**வெந்தயம்** - செடிவகை.
**வெந்தை** - ஆவியில் வெந் தது, பிட்டு.
**வெந்நிடுதல்** - புறமுதுகு காட்டல்.
**வெப்பம்** - சூடு, சுரநோய், துயர், சினம், ஆசை.
**வெம்பர்**— வெப்பம், சூடான ...
**வெப்பு**-வெப்பம், சுரநோய், கொடுமை, குட்டநோய்.
**வெப்புள்** - வெம்மை.
**வெம்பல்** - வெப்பம், சினம், பிஞ்சில் பழுத்தது.
**வெம்பறவை** - சரபம்.

*வெம்புதல்* - துன்புறுதல், அகாலத்திற் பழுத்தல், சூடாதல், விரும்புதல்.
*வெம்மை* - வெப்பம், விருப்பம், கொடுமை.
*வெயர்*, *வெயர்வு* } வியர்வை நீர்.
*வெயில்* - சூரிய வெப்பம், சூரியன்.
*வெய்து* - வெப்பத்தைத் தருவது, கொடியது, விருப்பத்தைக் கொடுப்பது.
*வெய்துயிர்த்தல்* - வெப்பமாக மூச்சுவிடுதல், துன்பத்தால் பெருமூச்சுவிடுதல்.
*வெய்துறுதல்* - துன்புறுதல்.
*வெய்யன்* - கொடியன், விருப்பமுள்ளவன், சூரியன்.
*வெய்யில்* - வெயில்.
*வெரிந்* - முதுகு.
*வெரு* - அச்சம்.
*வெருகு* - காட்டுப்பூனை, மரநாய், வெண்கிடை.
*வெருட்சி* - மருட்சி.
*வெருட்டு* - அச்சமுண்டாக்குதல்.
*வெருவந்தம்* - அச்சம்.
*வெருவலர்* - பகைவர்.
*வெருவு* - அச்சம்.
*வெருளுதல்* - மருளுதல், அஞ்சுதல்.
*வெருளி* - வெருளச் செய்யும் உருவம், செல்வச் செருக்கு.
*வெலவெலத்தல்* - கைகால் உதறுதல், களைத்தல்.
*வெல்லம்* - கருப்பஞ்சாற்றுக் கட்டி.
*வெல்லல்* – வெற்றி பெறுதல், வாயு விளங்கம்.
*வெல்வர்* - வெம்மை.
*வெவ்வேறு* - வேறு வேறு.
*வெளி* - மைதானம், ஆகாயம், இடைவெளி, தூய்மை, உபாயம்.
*வெளிசம்* - தூண்டில்.
*வெளிச்சப்பாடு* - தெய்வமேறிக் கூறுதல்.
*வெளிச்சம்* - ஒளி, பகட்டு.
*வெளிது*– வெண்மையானது.
*வெளியாள்* - அயலார்.
*வெளியீடு* - நூல் முதலியவற்றின் பதிப்பு.
*வெளில்* - யானை கட்டும் கம்பம், அணில்.
*வெளிதன்* - கீழ்மகன்.
*வெளிறு* - வெண்மை, உள்ளீடு இல்லாதது, அறிவின்மை, நிறக்கேடு.
*வெளிற்றுமரம்* - முள் முருக்கு.
*வெளுத்தல்* - வெண்மையாதல், தூயதாக்குதல், விடிதல்.
*வெளுப்பு* - வெண்மை.
*வெள்குதல்*- நாணுதல், அஞ்சுதல், மனங்குலைதல்.
*வெள்வரி*, - சோகி, கண்ணோய்.
*வெள்ளணி* - வெள்ளிய ஆடை, அரசன் பிறந்த நாள் உடை, அரசன் பிறந்த நாள் விழா.

**வெள்ளம்** - நீர்ப்பெருக்கு, மிகுதி, பேரெண்.
**வெள்ளரி** - கொடிவகை.
**வெள்ளாட்டி** - பணிப்பெண், வைப்பாட்டி.
**வெள்ளி** - சுக்கிரன், உலோக வகை, ஒரு கிழமை, அறிவின்மை, விந்து.
**வெள்ளிடம்** - இடைவெளி.
**வெள்ளிடி** - கோடையிடி.
**வெள்ளிடை** - இடைவெளி, ஆகாயம், மைதானம்.
**வெள்ளிது** - வெளிப்படையானது.
**வெள்ளிமலை** - கயிலைமலை.
**வெள்ளியம்பலம்** - மதுரைக் கோயிலில் நடராசருக்குரிய மன்றம்.
**வெள்ளியுயிர்** - மக்கட் பிறப்பு.
**வெள்ளிலை** - வெற்றிலை, ஆயுதங்களின் அலகு.
**வெள்ளில்** - விளமரம், விளம் பழம்.
**வெள்ளுவரி** - நல்லநீர்.
**வெள்ளெழுத்து** - பார்வைக் குறைவு.
**வெள்ளென** - அதிகாலையில்.
**வெள்ளை** - வெண்மை, சங்கு, வெண்பா, அற்பம், பொருளற்றது.
**வெள்ளோட்டம்** - சோதனைக்காக முதல் முதலாகத் தேர் மரக்கலம் இவற்றை ஓடச் செய்தல்.
**வெள்ளோலை** - எழுதப்படாத ஓலை.
**வெறி** - கலக்கம், மதம், கள், ஆவேசம், ஒழுங்கு, வெறியாட்டு, ஆடு, முருகன் பூசை, மணம்.
**வெறிக்களம்** - வெறியாட்டு ஆடும் இடம்.
**வெறுக்கை** - செல்வம் மிகுதி, வெறுப்பு, பொன்.
**வெறிது** - ஒன்றுமின்மை, பயனின்மை.
**வெறியாட்டு** - வேலன் ஆடுதல், களியாட்டம்.
**வெறுத்தல்** - அருவருத்தல், கோபித்தல், பற்றுவிடுதல், துன்புறுதல்.
**வெறுப்பு** - அருவருப்பு, கோபம், அச்சம்.
**வெறுமனே** - ஒன்றும் செய்யாமல், சும்மா.
**வெறுமை** - ஒன்றுமின்மை, வறுமை, அறிவின்மை.
**வெற்பன்** - குறிஞ்சி நிலத் தலைவன்.
**வெற்பு** - மலை.
**வெற்றி** - சயம்.
**வெற்றிமை** - மேம்பாடு, வெறுமை.
**வெற்றிலை** - கொடிவகை.
**வெற்றுடல்** - பிணம்.
**வெற்றுரை** - பொருளற்ற சொல்.
**வென்**
**வென்றி** } வெற்றி.

# வே

**வேகடம்** - மணியின் மாசினை நீக்குதல்.
**வேகப்புள்** - கருடன்.

*வேகம்* - நஞ்சு, சினம், மனக்கலக்கம்.
*வகர்* - தூதுவர்.
*வேகித்தல்* - விரைதல், கோபித்தல்.
*வேக்காடு* - வேகுகை, எரிகை.
*வேங்கை* - புலி, மரவகை, ஒரு நாடு, ஒரு மலை.
*வேசகம்* - யானை வால் நுனி, குதிரையின் பிடரி மயிர்.
*வேசரி* - கோவேறு கழுதை.
*வேசறவு* - மனச்சோர்வு.
*வேசா*, *வேசி*, *வேசை* - பரத்தை.
*வேடதாரி* - மாறுவேடம் பூண்டவன்.
*வேடம்* - வேற்று வடிவம்.
*வடன்* - வேட்டையாடுவோன்.
*வேடிக்கை* - விநோதம்.
*வேடு* - வேடர் தொழில், வேடசாதி, பாத்திரத்தின் வாயை மூடிக் கட்டும்
*வேட்கை* - விருப்பம், பற்றுள்ளம்.
*வேட்கோ* - குயவன்.
*வேட்டகம்* - பிறந்த வீடு.
*வேட்டம்* - வேட்டை, விரும்பிய பொருள்.
*வேட்டல்* - யாகம் செய்தல், விரும்புதல், திருமணம்.
*வேட்டி* - ஆடை.
*வேட்டு* - வெடி, வேட்டைத் தொழில்.
*வேட்டுவன்*-வேடன், வேட்டைக்குச் செல்வோன், குறிஞ்சி நிலத்தவன், குளவி, மகநட்ச
*வேட்டை* - வேட்டம், வேட்டைப் பொருள்.
*வேணகை* - சுற்றுமதில்.
*வேணவா* - வேட்கைப் பெருக்கம்.
*வேணாடு*-திருவிதாங்கூர் நாட்டின் பகுதி.
*வேணி* - பின்னிய சடை, வசம்பு, ஆகாசம்.
*வேணீர்* - நீர் வேட்கைக், குரிய நீர்.
*வேணு* - மூங்கில், இசைக் குழல், வில், தனுசு, இராசி.
*வேணுகம்*-யானைத் தோட்டி.
*வேணுபுரம்* - சீர்காழி.
*வேண்டலன்* - பகைவன்.
*வேண்டல்* - விரும்புதல், யாசித்தல்.
*வேண்டாமை* - வெறுப்பு, அவாவின்மை.
*வேண்டார்* - பகைவர்.
*வேண்டுகோள்* - பிரார்த்
*வேதகம்* - வேறுபாடு, புடமிட்ட பொன்.
*வேதகன்* - வேறுபடுத்துவோன், அறிவிப்பவன்.
*வேதகீதன்* - கடவுள்.
*வேதங்கம்* - ஒருவகைத்
*வேதசிரசு* - உபநிடதம்.

***வேதண்டம்*** - கைலாச மலை, யானை.

***வேதநீயம்*** இன்ப துன்பங்களை நுகர்விக்கும் கருமம்.

***வேதபாரகன்*** - வேத மறிந்தவன், பிராமணன்.

***வேதமுனி***-வியாச முனிவன்.

***வேதம்*** - சமய நூல், மறை.

***வேதல்*** - எரிதல், சினமுறு [illegible]

[illegible] அறிந்தவன், கடவுள்.

***வேதவிருத்தி*** - வேதமோதுதற்காக விடப்படும் இறையிலி நிலம்.

***வேதனம்*** - கூலி, அறிவு, உணர்ச்சி.

***வேதனை*** - நோய், வருத்தம்.

***வேதன்*** / ***வேதா*** } பிரமன், கடவுள்.

***வேதாக்கினி*** - ஆகவனீயம் காருக பத்தியம் தக்ஷிணாக்கினி என்னும் மூவகை நெருப்பு, முத்தீ.

***வேதாகமம்*** - வேதமும் ஆகமமும்.

***வேதாங்கம்*** - சிக்ஷை வியாகரம் சந்தசு நிருத்தம் சோதிடம் கற்பம் என்னும் ஆறுவகைக் கருவி நூல்கள்.

***வேதாலி*** - பிரணவம்.

***வேதாந்தம்*** - உபநிடதம், உத்தர மீமாம்சை, மதம்.

***வேதாந்தன்*** - கடவுள், அருகன்.

***வேதாளம்*** - பேய்வகை.

***வேதாளி*** - காளி.

***வேதாளிகர்*** - புகழ்வோர்.

***வேதி*** - அறிந்தவன், சடங்கு, மேடை, பிரமன், மதில், ஓமகுண்டம்.

***வேதிகை*** - திண்ணை, மணமேடை, பலிபீடம், கேடகம், அம்பு.

***வேதித்தல்*** - வேறுபடுத்துதல், தாழ்ந்த உலோகங்களை உயர்ந்த உலோகங்களாக மாற்றுதல், நீற்று [illegible]

***வேதியன்*** - பிரமன், பார்ப்பான், கடவுள்.

***வேதினம்*** - ஈர்வாள், கருக்கரிவாள்.

***வேது*** - வெம்மை, சூடான ஒற்றடம், நீராவி, வேதனை, வேறுபாடு.

***வேதை*** - துன்பம்.

***வேத்திகன்*** - அறியத்தக்கவன்.

***வேத்தவை*** - அரச சபை.

***வேத்தியம்***-அறியப்படுவது.

***வேத்தியல்*** - அரசனது தன்மை, அரசர்முன் ஆடும் கூத்து வகை.

***வேத்திரம்*** - பிரம்பு, அம்பு.

***வேந்தன்***-இந்திரன், அரசன், சந்திரன், வியாழன்.

***வேந்து*** - அரசன், அரச பதவி.

***வேபம்*** - சலனம்.

***வேபாக்கு*** - வேகுகை.

***வேமம்*** / ***வேமா*** } நெசவுத் தறி.

*வேமானியர்* - தேவர்.
*வேம்பன்* - பாண்டியன்.
*வேம்பு*-மரவகை, வெறுப்பு.
*வேயர்* - ஒற்றர்.
*வேயல்* - சிறு மூங்கில்.
*வேயாமாடம்*-நிலா முற்றம்.
*வேய்* - மூங்கில், ஒற்றர் அறிந்து சொல்லும் சொல், வேய்கை, ஒற்றன்.
*வேய்தல்* - மூடுதல், ஒற்று தல், சூடுதல், சூழ்தல்.
*வேய்ந்துணி* - ஊது குழல்.
*வேய்கை* - யாழ் நரம்புக் குற்ற வகை.
*வேரடம்* - இலந்தை.
*வேரம்* - செய்குன்று, கோபு ரம், வெகுளி.
*வேரல்*-மூங்கில், மூங்கிலரிசி.
*வேரி* — தேன், கள், வாச ரு வகை, இலா மிச்சை.
*வேர்* - தாவரங்களின் அடிப் பாகம், வியர்வை, அடிப் படை, காரணம்.
*வேர்க்குரு* - வேர்வையா லுண்டான சிறு பரு.
*வேர்க்கொம்பு* - சுக்கு.
*வேர்த்தல்* - வேர்வை யுண் டாதல், மனம் புழுங்குதல்.
*வேர்வாசம்* - இலாமிச்சை.
*வேர்வு* - வேர்வை, சினம்.
*வேலன்* - முருகன், முருக பூசை செய்பவன்.
*வேலாவலயம்* - கடல், பூமி.
*வேலாழி* - கடல்.
*வேலி* - கழி முள் இவற்று லான அரண், மதில், வயல், காவல், நில அளவு, முள் ளிலவு, பசுக்கொட்டில்.
*வேலேறு* - வேல் தைத்த புண்.
*வேலை* - தொழில், கடல்,
*வேலைக்காரன்* - ஊழியன்.
*வேலையாள்* - கூலிக்கு வேலை செய்பவன்.
*வேல்*-ஆயுதப் பொது, ஈட்டி, மரவகை.
*வேவு* - ஒற்றுப் பார்த்தல்.
*வேவை* - வெந்தது.
*வேழக்கரும்பு* - பேய்க் கரும்பு.
*வேழம்* - யானை, கரும்பு, மூங் நாணல், இசை, பூச்சி வகை.
*வேழம்பம்* - வஞ்சகம், ஏள னம்.
*வேழம்பர்* - கம்பங் கூத்தாடி கள், நகை விளைப்பவர்.
*வேளம்* - சிறைப்பிடிக்கப் பட்ட உயர்குல மகளிர் வாழுதற் கமைத்த அர ணிடம்.
*வேளாண்மை* - பயிர்த் தொழில், உபகாரம், கொடை.
*வேளாண்வேதம்* - நாலடி யார்.
*வேளாவேளை* - அவ்வக் காலம்.
*வேளாளன்* - உபகாரி, ஒரு
*வேளான்* - குயவன்.
*வேளிர்* - குறுநில மன்னர்.

*வேளை* - காலம், பூண்டுவகை.
*வேள்*-திருமணம், மன்மதன், முருகக் கடவுள், குறுநில மன்னன், வேளாளர் சிறப்புரிமைப் பெயர், விருப்பம்.
*வேள்வி* - யாகம், நோன்பு, பூசனை, திருமணம், புண்ணியம், கொடை.
*வேறல்* - வெல்லுதல்.
*வேறு* - பிறிது, கூறுபாடு, பகை, தீங்கு, புதிது.
*வேறுபாடு* - வேற்றுமை.
*வேற்றுப்புலம்*-பகையிடம்.
*வேற்றுமை*-வேறுபாடு, பெயர்ப்பொருளை வேறு படுத்துவது
*வேனல்* - வெப்பம், வேனிற் காலம், சினம்.
*வேனிலான்* - மன்மதன்.
*வேனில்* - வெப்பம், வேனிற் காலம், கா.
*வேனிற்பள்ளி*- நிலாமுற்றம்.
*வேன்மகன்* - வெறியாடுவோன்.

**வை** - கூர்மை, வைக்கோல், வையென்னேவல்.
*வைகல்*-தங்குதல், வைகறை, நாள், கழிகை, வேளை.
*வைகறை* - விடியல்.
*வைகாசி* - இரண்டாம் மாதம், விசாகம்.
*வைகார்ப்பு* - இடையறாத ஆரவாரம்.
*வைகானசன்* - ஆகம விதிப்படி நடப்பவன்.
*வைகுசுடர்* -
*வைகுண்டம்* / *வைகுந்தம்* - திருமால் உலகம்.
*வைகுதல்*-தங்குதல், கழிதல், விடிதல், புணர்தல், வற்றுதல்.
*வைகுறு* - வைகறை.
*வைகுறுமீன்* - விடி வெள்ளி.
*வைக்கோல்* - நெற் பயிரின் உலர்ந்த தாள்.
*வைசாகி* - வைகாசி.
*வைசயந்தி* - திருமாலினது மாலை, தழுதாழை.
*வைசாகம்* - சாந்திரமான மாதத்துள் இரண்டாவது.
*வைசித்திரி* - புதுமை.
*வைசியன்* - வணிகன்.
*வைசிகன்* - வைசியன்.
*வைச்சிரவணன்* - குபேரன், இராவணன்.
*வைசூரி*-பெரியம்மை நோய்.
*வைசேடிகம்*-கணாதரால் ஏற்படுத்தப்பட்ட மதம்.
*வைடூரியம்* - நவமணியில் ஒன்று.
*வைணவம்* - திருமால் மதம்.
*வைதரணி* - யமலோகத்துக்குச் செல்லுமுன் கடக்க வேண்டிய ஆறு.
*வைதல்*-நிந்தித்தல், சபித்தல்.
*வைதவியம்* – கைம்மை.
*வைதாளி* – புகழ்ந்து பாடும் பாட்டு.
*வைதாளிகர்* – அரசரைப் புகழ்ந்து பாடுவோர்.
*வைதிகம்* - வேதநெறிப் பட்டது.
*வைதேகி* – சீதை, திப்பலி.

*வைத்தல்*-இருத்துதல், இடுதல், ஒதுக்குதல், பாதுகாத்தல், கொள்ளுதல்.

*வைத்தூறு* - வைக்கோற்போர்.

*வைபவம்*–மகிமை, வரலாறு.

*வைபோகம்*-சிறப்பு,மகிமை.

*வைப்பாட்டி* – கூத்தியாள்.

*வைப்பு* - சேமநிதி,புதையல், ஊர், நிலப்பகுதி, உலகம், செயற்கை, வைப்பாட்டி, சூனியம்.

*வையம்* - பூமி, உலகம், கூடார வண்டி, பூமி.

*வையகம்* - பூமி.

*வையாளி*–குதிரை செல்லும் பூமி.

*வைரம்* - பகை, வீரம், மரக்காழ், இரத்தினக்கல் வகை.

*வைராக்கியம்* - உலகப்பற்றின்மை, விடாப்பிடி.

*வைவு* – வசவு, சாபம்.

*வைனதேயன்* – கருடன்.

*வைனன்* – கருடன்.

**வெள***வால்* – பிராணி வகை.

*வெளவானத்தி* - மண்டபத்தின் மேன்முகடு.

*வெளவுதல்* - கவர்தல், திருடுதல், ஆசைப்படுதல்.

# தொகை அகராதி

*அகத்திணை* (7)–கைக்கிளை, குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல், பெருந்திணை.

*அகத்தியர் மாணவர்* (12)-செம்பூட்சேய், வையாபிகர், அதங்கோட்டாசான், அவிநயர், காக்கைபாடினியார், தொல்காப்பியர், துராலிங்கர், வாய்ப்பியர், பனம்பாரனார், கழாரம்பர், நற்றத்தர், வாமனர்.

*அகப்பகை* (6) - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம்.

*அகிற்கூட்டு* (5) - சந்தனம், கர்ப்பூரம், எரிகாசு, தேன், ஏலம்.

*அக்கினி* - [அ] (3): ஆகவனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினி.

[ஆ](5):இராகம்,கோபம், காமம், சடம், தீபனம்.

*அங்கம்* - [அ] (4) : தேர், கரி, பரி, காலாள்.

[ஆ](5): திதி, வாரம்,நட்சத்திரம், யோகம், கரணம்.

[இ] (6) : படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு,

[ஈ] (10):மலை,ஆறு,நாடு, ஊர், மாலை, கரி, பரி, முரசு, கொடி, செங்கோல்.

*அடி* (5) – குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி.

***அந்தணர் தொழில்*** (6) - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

***அரசர் குலம்*** (3) - சூரிய குலம், சந்திரகுலம், அக்கினி குலம்.

***அரசர்*** (3)-சேரன், சோழன், பாண்டியன்.

***அரசர் கொடி*** (3) - சேரன் வில், சோழன் புலி, பாண்டியன் மீன்.

***அரசர்க்குக் குழு*** (5) - மந்திரியர், புரோகிதர்,சேனைபதியர், தூதர், சாரணர்.

***அரசர்க்குத் துணைவர்*** (8) - மந்திரியர், கருமாதிகாரர், சுற்றம், கடைகாப்பாளர், நகர மாக்கள், படைத் தலைவர், இவுளி வீரர், யானை வீரர்.

***அரசர்க்குறுதிச் சுற்றம்*** (5) - நட்பாளர், அந்தணாளர், மடைத் தொழிலர், மருத்துவக் கலைஞர், நிமித்திகப் புலவர்.

***அரசர் தொழில்*** (6) -ஈதல், காத்தல், ஓதல், படை பயிறல், பொருதல், வேட்டல்.

***அரசர் மாலை*** (3) – சேரன் பனைம் பூ, சோழன் ஆத்திப் பூ, பாண்டியன் வேப்பம் பூ.

***அரண்*** (4) - மலை, காடு, மதில், அகழ்.

***அவத்தை*** (5) - சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்.

***அளவு*** (4) – எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல்.

***அளவை*** (8) - காட்சி, அனுமானம், ஆகமம், அருத்தாபத்தி, உபமானம், அபாவம், சம்பவம், ஐதிகம்.

***அறம்*** - [அ] (2) : இல்லறம், துறவறம்.

[ஆ] (32) : ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க் குணவு, அறுசமயத்தார்க்கு உண்டி பசுவுக்கு வாயுறை, சிறைச் சோறு, ஐயம், தின்பண்ட நல்கல், அறவைச் சோறு, மகப் பெறுவித்தல், மகவு வளர்த்தல், மகப்பால் வார்த்தல், அறவைப் பிணஞ்சுடுதல், அறவைத் தூரியம், சுண்ணம், நோய்க்கு மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண் மருந்து, தலைக்கெண்ணெய், பெண் போகம், பிறர் துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சு தறி, விலங்கிற் குணவு, ஏறு விடுத்தல், விலைகொடுத்துயிர் காத்தல், கன்னிகா தானம்.

***ஆச்சிரமம்*** (4) - பிரமசரியம், கிரகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம்.

***ஆடவர் குணம்*** (4) - அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி.

